॥ श्रीः ॥

# श्री विष्णुस्तुतिमञ्जरी

# ஸ்ரீ விஷ்ணுஸ்துதிமஞ்ஜரீ

(இரண்டாம் பாகம்) (த்விதீயோபாக:)



1

ओं नमो नारायणाय

# श्रीविष्णुस्तुतिमञ्जरी

## द्वितीयो भागः

विष्णुपरनामस्तोत्रनामावली

रक्षाकवचहृदयमन्त्रमाला स्तुति सङ्ग्रहः

# ஸ்ரீ விஷ்ணு ஸ்துதி மஞ்ஜரீ

## இரண்டாம் பாகம்

**விஷ்ணு பற்றிய நாம ஸ்தோத்திர - நாமாவளீ - ரக்ஷா - கவச - ஹ்ருதய - மந்திர மாலா - ஸ்தோத்திரங்களின் தொகுப்பு - நான்கு ஸ்தோத்திரங்கள் தமிழுரையுடன்.**

*தொகுத்தவர்*

வைத்ய. **S.V.** ராதாகிருஷ்ண சாஸ்த்ரி

*ஸ்ரீரங்கம்.*

*வெளியிடுவோர்:*

ஸ்ரீ மஹா பெரியவாள் டிரஸ்ட்

பெங்களூர் - 560054

2007

# SRI VISHNU STUTI MANJARI

## Namastotras Namavalis, Raksha Kavacha Stotras

**First Edition 2007**

**Compiled by**

*Brahmavidya Ratna,*
*Rashtrapati Sammanita*
*Vaidya* **S.V.RADHAKRISHNA SASTRI,** Srirangam

*Copies available at*

1. **Smt. P.Vijaya**
   **Door No. 11, Plot 7**
   **Ganapati St, St.Thomas Nagar,**
   **Madipakkam, Chennai - 600 091.**
   **Phone : 044-2242 2622**

2. **BHAGAVANNAMA PUBLICATIONS,**
   **2/3, Vinayakam St, West Mambalam,**
   **Chennai**
   **Phone: 044-24893736**

*Published by*

**SRI MAHAPERIYAVAL TRUST**
**Gurukripa, 94, I.T.I.Layout, MSRIT,**
**Bangalore - 560 054.**

# ஸ்ரீ பரமேசுவரனின் பிரீதிக்கான பணி ஸ்ரீ கிருஷ்ணனிடம் அர்ப்பணம்

வெண்ணிற ஆடையுடுத்தியவரும் நிலாவண்ணரும் நான்கு கைகளுள்ளவருமான வாரணமுகத்தோனே இடையூறுகள் தாமே அகல வேண்டி, வாழ்நாளில் கெட்ட பின்விளைவு தரத்தக்கதாக இது காறும் சேமித்த வினை அகன்ற தன் மூலம் பரமேசுவரரின் பிரீதியைப் பெறத் தொடங்கிய ஸ்ரீ விஷ்ணு ஸ்துதி மஞ்ஜரியின் இரண்டாம் பகுதியின் தொகுப்பு நிறைவு பெற்றது. ஸ்ரீ கிருஷ்ணனிடம் அது ஸமர்ப்பிக்கப் பெறுகிறது.

இதனைத் தொடங்குமாறு தூண்டி ஊக்கம் தந்து ஸாதன மனைத்தையும் அருகில் நிறுத்தித் துணை நின்று இயக்கி நிறைவு பெறச் செய்தது யார்? அந்த மஹாபெரியவர் தான். பரம பூஜ்ய ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத் குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள் எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டவர் தான். இப்பணியால் ஸ்ரீ பரமேசுவரராகத் திருப்தி பெற்றவரும் ஸ்ரீ கிருஷ்ணனாக அர்பணம் செய்யப் பெற்றதை ஏற்பவரும் அவரே.

अन्तः शाक्तं बहिः शैवं व्यवहारेण वैष्णवम् ।
नौमि शङ्करमाचार्यरूपिणं मार्गदर्शिनम् ॥

உள்ளத்தில் அவர் சாக்தர். தோற்றத்தில் சைவர், பழகுவதில் (பழக்குவதில்) வைஷ்ணவர், ஆதிசங்கர பகவத் பாதரெனப் புகழ் பெற்றவர். தனக்குப் பின் தன்னையே தனது பரம்பரையாக வந்த ஆசாரியராக உலகிற்கு உணர்த்தி இன்றைய ஆசாரியர் வடிவில் நின்று வழிகாட்டுபவர். அவரை வணங்குகிறேன் எனத் தினமும் குருத்தியானம் செய்வது வழக்கம். அதன் விளைவாக உள்ளத்தினளவில் சாக்தனாக, விபூதி தாரணம் சிவ பஞ்சாயதன வழிபாடு எனச் சைவனாக, நாராயண ! ராம ! கோவிந்த என வாயார விஷ்ணு நாமங்கள் கூறுபவனாக வாழ்வதில் ருசி ஏற்பட்டது.

அதுவே இன்றளவில் கணபதி, சிவன், ஸுப்ரமஹண்யன், தேவி, தத்தர், விஷ்ணு என வரிசையாக நாம ஸ்துதித் தொகுப்பில் இவனை ஈடுபடுத்தியதெனலாம்.

செய்கிற பணியில் நிறைவு உணர்வதே ஸித்தியின் அடையாளமாகும். இந்த நிறைவுணர்வு இன்று பூர்ணமாகக் கிட்டியுள்ளது. ஈசனின் நாமஸ்மரணமும் குணானுபவமும் ஈசனைப் பற்றிக் கொள்ள எளிய உபாயங்கள். ஸ்துதிகளின் வாயிலாகப் பெற்ற தெய்வத்தின் வடிவழகும் குணச் சிறப்பும் பற்றிய உணர்வு மற்ற பயனற்ற சிந்தனைகளிலிருந்து மனத்தை விடுவிக்கப் பெரிதும் உதவும். சில நொடிகளாவது சலனமற்ற எண்ணப் பதிவு ஈசனிடம் கிட்டுமானால் தாரணா தியானம் என்ற இரு யோக முறைகள் பழக்கத்திற்கு வரும்.

பொருளுணர்ந்து துதிகளையும் நாமங்களையும் கூறும் போது சில சமயம் எதிர்பார்ப்பிற்கு மாறாக நெருடல்கள் நேரலாம். இவை தாரண - தியான யோக முறைக்கு இடையூறாக அமையலாம். குல தெய்வம், இஷ்ட தெய்வம், கிராம தெய்வம், உபாஸநா தெய்வம் என வேறுபட்ட மதிப்பீடுகள் குறுக்கிடலாம். தெய்வ வழிபாட்டில் உதவுகிற புராண வரலாறுகள் தெய்வங்களுக்கிடையே ஏற்றத் தாழ்வை வலியுறுத்துவதாகத் தோன்றும். நாம ஸ்துதி இலக்கியத்திலும் அவை இடம் பெறும். நாம் வழிபடுகிற தெய்வத்தை விட மற்ற தெய்வங்கள் தாழ்ந்தவை. நாம் வழிபடுகிற தெய்வத்தின் உதவியும் அருளுமின்றி மற்ற தெய்வங்கள் செயல்பட இயலாது என்பதும் அங்கு முன் நிறுத்தப்படும். இந்த பேதபாவனை சித்தம் ஒருமித்துப்பதிவதில் இடையூறாக நிற்கும்.

சிவ ஸ்துதியில் விஷ்ணு தாழ்ந்தவர் என விஷ்ணு ஸ்துதியில் சிவன் தாழ்ந்தவர் என, தேவீ ஸ்துதியில் சிவனும் விஷ்ணுவும் தாழ்ந்தவர்கள் என்ற விளக்கம் உள்ளத்தை உறுத்தும். சைவனாகவோ வைஷ்ணவனாகவோ சாக்தனாகவோ தன்னை மதிப்பவன் இந்த ஏற்றத் தாழ்வை ஏற்கக் கூடும்.

ஸ்மார்த்த வழியில் வந்தவனுக்கு இது ஏற்புடையதாக இருக்காது. இந்த மதபேதங்களை ஒரு கோணத்தில் பொருத்திப் பார்த்துச் சமநிலை உணர்வது எளிதல்ல.

ராமன் சிவதனுஸை ஒடித்துச் சீதையை மணந்தார் என்பது ராமாயணக் கதை. சிவதனுஸை ஒடித்தது ராமனுக்குச் சிறப்பு தருவதுமல்ல. சிவனைத் தாழ்த்துவதுமல்ல. சிவன் பெரியவரா, விஷ்ணு பெரியவரா என்ற தேவர்களின் சிந்தனையை ஒட்டி இருவரும் வில் போட்டியில் கலந்து கொண்டனர். சிவனேந்திய வில் நாணேற்றும் போது வலிவின்மையால் விரிவு கொண்டது. அதில் அம்பு தொடுக்க இயலாது. (ஜ்ரும்ப்பணம் - மூச்சு விடுதல் மூர்ச்சனம் செயலிழப்பது) வில் செயலிழந்ததால் சிவன் போட்டியிலிருந்து விலகினார். போட்டியில் கட்சி கட்டிய தேவர்கள் விஷ்ணு வென்றதாகக் கோஷமிட்டனர். சிவன் தோற்கவுமில்லை, விஷ்ணு வெல்லவுமில்லை. பூட்டுக் கழன்ற வில்லை ராமன் ஒடித்ததால் சிவனுக்குத் தாழ்வுமில்லை. ஆனால் துதிகளில் சிவதனுஸை ராமன் ஒடித்தார் எனச் சிவனைக் காட்டிலும் ராமன் மேலானவர் என்று வர்ணிப்பதுண்டு. இந்நூலில் இடம் பெறுகிற ராம நாமாவளியிலும் ராமபத்ர தீக்ஷிதர் இயற்றிய ராமகர்ண ரஸாயனத்திலும் இந்தப் பாராட்டு மொழி அளவற்று இடம் பெற்றுள்ளது. ஸ்ரீ ராமேசுவரத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து ராமன் வழிபட்டது இவற்றில் இடம் பெறக் காணோம். ஆதர்ச மனிதனாக ஸ்ரீ ராமன் தன் நடைமுறையை வகுத்து அதன்படியே வாழ்ந்து காட்டிய சிறப்பு இடம் பெறக் காணோம்.

ராவணன் ஸீதையை அபஹரித்தது காரணமாக ராமனுக்கு எதிரியானான். அவனை மாய்த்தது ராமனின் சிறப்பே. ராவணன் செய்த பாபத்தின் பின் விளைவாக ஒரு பாபமும் அறியாதவர்களான மண்டோதரியும், தானிய மாலினியும் தம் தாலிபாக்கியத்தை இழந்தனர். பாவம் ஓரிடம், பழி ஓரிடம். ஆனால் ஸ்ரீ ராமபத்ர தீக்ஷிதர் தன் ராம கர்ண ரஸாயனத்தில் இவர்கள் ஸௌமங்கலியத்தை இழக்கச் செய்தது ராம பாணத்தின் சிறப்பென பல சுலோகங்களில்

காட்டியிருப்பது வேதனை தரக்கூடியதே, ராவணனுக்கு ஸீதையை அபஹரித்தது பெருந்தவறெனச் சுட்டிக் காட்டியவர்கள் இவர்களே. ஒரு பாபமும் செய்தறியாத இவர்களது ஸௌபாக்கிய இழப்புக்குக் காரணம் ராவணனுக்கு மனைவியாக இருந்ததே. ராம பாணங்களல்ல. துதிக்கப் புகுந்தவனுக்கு எல்லையினுள் சொற்களைக் காப்பது இன்றியமையாததாகும். இதில் நிலை தவறினால் இகழ்ச்சியையயும் பாராட்டாகக் கொள்கிற மதியீனமாக இது அமையும்.

இவ்வாறே நாமாவளிகளிலும் இலக்கு தவறி பிற தெய்வங்களைத் தாழ்த்துவதையே தன் தெய்வத்தின் சிறப்பாகக் காட்டுவதும் காணப்பெறும். இத்தகைய நெருடல் நேரும் போது தக்க விளக்கம் தந்து ஆதங்கத்தைச் சமனப்படுத்துவதில் ஸ்ரீ மஹாபெரியவாள் நிகரற்றவர்கள். ''சிவனும் விஷ்ணுவும்'' என்ற தலைப்பில் ஸ்ரீ மஹாபெரியவாளின் பேருரைத் தொகுப்பு தனித்துத் தரப் பெற்றுள்ளது.

குல தெய்வமாகவோ இஷ்டதெய்வமாகவோ ஏற்றுக் கொண்ட தெய்வத்திடம் தனது வாழ்க்கையையே ஒப்படைத்து அதனிடத்தில் அடைக்கலமாகப் புக உதவுவது பக்தியோகம். அதற்கு உதவவே இந்த நாமாவளிகளும் துதிகளும். பகவானை விட்டகலாமல் சித்தத்தை நிலை கொள்ளச் செய்யப் பெரிதும் இவை உதவுகின்றன. சிரவணம் கீர்த்தனம் ஸ்மரணம் முதலிய பக்திப் படிகளில் ஏற இவை மட்டுமே பிடிப்பு தருபவை. இதர தெய்வ நிந்தனைக்காக ஏற்பட்டவை அல்ல. துதிக்கப் பெறுபவரின் பெருமைகளை சித்தத்தில் பதிய வைக்கவே வந்தவை. இந்த நோக்கில் நாமாவளியையும் துதிகளையும் அனுஸந்தானம் செய்யும் போது எந்த நெருடலும் உணரப் பெறுவதில்லை.

சித்தம் ஒரு பொருளில் நிலைத்திருப்பது எளிதல்ல. வெகுநாட்களுக்கான தொடர்ந்த பழக்கமும் வழக்கமும் தான் இதனை எளிதாக்கும்.

ஸ்ரீ மஹாபெரியவாள் அவர்களது தொடர்பு பெற மிகச் சிறிய அளவில் வாய்ப்பு பெற்றவன் இவன். பாண்டு ரங்கக்ஷேத்திரத்தின் அருகே சந்திரபாகா நதியின் அக்கரையில் ஸ்ரீ மஹாபெரியவாள் சில நாட்கள் தங்கியிருந்தார்கள். ஸ்ரீ சங்கர விஜய மகரந்தம் என்ற பகவத் பாதரின் வரலாற்று நூலைத் தொகுக்க முற்பட்டவனுக்கு அவர்களை அங்கு தரிசனம் செய்கிற வாய்ப்பு கிட்டியது. அந்த வரலாற்று நூல் அவர்களிடம் படித்துக் காட்டப் பெற்றது.

விஷ்ணு பாதாதிகேசாந்த ஸ்தோத்திரத்தில் रूक्षस्मारेक्षु (சுலோகம் 43) पीठीभूतालकान्तं (சுலோகம் 44) என்ற இரு சுலோகங்களில் விஷ்ணுவின் நெற்றிக்கு மேல் ஸ்படிகத்தாலான சிவலிங்கம் பதிக்கப் பெற்றுள்ளதென்ற செய்தி உள்ளதை நீண்ட நேரம் விளக்கி இந்தப் புத்தம் புதிய காட்சி - பண்டரிநாதரின் நெற்றியில் காணப்படுவதைச் சுட்டிக் காட்டி பகவத் பாதர்கள் இந்த ஸ்துதியை இயற்றிய போது பண்டரிநாதனே அவரது உள்ளத்தில் பிரகாசித்துள்ளார் என்று கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க தொண்டை தழதழக்க அவர்கள் விளக்கிய காட்சி இன்றும் அதே புதுமையுடன் மனக் கண் முன் நிற்கிறது. மறுநாள் ஒரு குறிப்பிட்ட வேளையில் தக்க துணையுடன் பாண்டுரங்கனது ஆலயத்திற்கு அனுப்பி, அலங்காரம் களைந்து நிற்கிற ஈசனின் வடிவைக் கண்டு பகவத் பாதர்களின் அனுபவத்தை இவனும் அனுபவிக்கச் செய்தார்கள்.

ஸப்த சதியில் பிராதானிக ரஹஸ்யத்தில் தேவி மஹாலக்ஷ்மி தன் நெற்றிக்கு மேல் நாகம் லிங்கம் யோநிம்ச என லிங்கத்தைத் தரித்துள்ளாள். இந்த இரு மூர்த்திகள் சிவலிங்கத்தைத் தரித்துள்ளதை இன்றும் காணலாம் எனக் கூறி கொல்ஹாபூர் ஸ்ரீ மஹா லக்ஷ்மியிடம் இந்தச் சிறப்பைக் காணச் செய்தார்கள். சிவலிங்கத்தைச் சிரஸில் தரித்துள்ள நாராயணனையும் நாராயணியையும் இவ்விரு இடங்களிலும் காணலாம்.

நாமாவளிகளால் ஈசனிடம் மனத்தைச் சிறுக சிறுகப் பதித்துப் பின் அவரது ஸகுண ஸ்வரூபத்தில் மனம் நிலைக்க ஸ்தோத்திரங்கள் உதவுகின்றன. ஆயிரக்கணக்கில் அவை உள்ளன. அவற்றில் அவரது வடிவழகைக் கண் முன் நிறுத்த பகவத் பாதர்களின் விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்தோத்திரமும் மதுஸூதன ஸரஸ்வதியின் ஆனந்த மந்தாகினியும் பெரிதும் உதவுகின்றன. ஸ்ரீ பராசரபட்டர் தனது ரங்கராஜஸ்தவத்தில் வானவழியே நமது கைகளைப் பிடித்தழைத்து வந்து ஸ்ரீ ரங்கம் அமைந்துள்ள இரு காவேரிப் பிரிவுகளினிடையே பசுமை மிக்க நிலப்பரப்பு, மதில் சுவர்களிடையே அழகிய தெருக்களின் நடுவே அமைந்த ஆலயம், ஆலயத்தினுள்ளே வலமாகத் தேவன் அமைந்துள்ள மண்டபத்தைச் சுற்றியுள்ள தெய்விக மிக்க ஆலயப் பகுதி, மண்டப வாயில், முன்னணியிலும் பின்னணியிலுமுள்ள தெய்விகக் காட்சிகள், திருவனந்தாழ்வானின் படுக்கை அமைப்பு, அதன் மீது வைகுந்தத்தில் கிடைக்கக் கூடியதை விட அழகான தெய்விகமான பகவானின் தோற்றம், அவரது வடிவழகு என்று சுற்றுலா வருபவனிடம் அவனிடம் பரிவுமிக்க வழிகாட்டி போல் விளக்கி ஆழ்மனத்தில் அந்த சந்நிதியின் தெய்விக அழகு பதியும்படி செய்கிற அழகு அதனை உணந்தவரால் மட்டுமே விளக்க முடியும். ஸ்ரீ ராம பத்திர தீக்ஷிதர் சிறந்த அத்வைதி. ஆனால் ஸ்ரீ ராமபக்தர். தம் அனுபவத்தில் உணர்ந்த ராமனது வரலாற்றுப் பகுதிகளில் பலவற்றை தன் ஸ்ரீ ராம கர்ண ரஸாயனத்தில் விளக்குகிறார். வேறு எங்கேயும் கண்டிராத பல அபூர்வக் காட்சிகள் ஸ்துதி வடிவம் பெறுவது மிகச் சிறந்தது. இந்நான்கு துதிகளுக்கும் ஸாதகர்களின் சிந்தனைக்கு உதவத் தமிழுரை மிகச்சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது. தூரப்பயணத்திற்குப் புறப்பட்டவன் நடுவே பலவற்றைச் சுருக்கிக் கொள்வது போன்றது இந்தச் சுருக்கமெனும் குறை.

ஸ்துதி இலக்கியத்தில் பெருமிடம் கொள்வது தாம் விரும்பியதை இறைவனிடமிருந்து பெற எளிய உபாயமான ரக்ஷா, கவசம், ஹ்ருதயம், மந்திர மாலா ஸ்தவம் போன்றவை பெரியோர்களால் தினமும் பாராயணம் செய்யுமாறு

உபதேசிக்கப் பெறுபவை, முக்கிய இடம் பெறும். விஷ்ணு ஸ்துதி வரிசையில் அவை இடம் பெறுகின்றன.

பகவானுக்கு வியூஹம், அர்ச்சா, விபவம், அவதாரம் என்ற வரிசையில் பல ஸகுண வடிவங்கள் வழிபாட்டிற்குரியவை. அம்மூர்த்திகளை வழிபடப் பல ஸ்துதிகளுண்டு. அவை அடுத்த பாகத்தில் இறையருளால் இடம் பெறலாம். பொதுவாக விஷ்ணு நாராயணன் ஹரி என்று வழிபடுவதுமுண்டு. இதற்கான சில ஸ்துதிகள் மட்டும் இதில் இடம் பெறுகின்றன.

மனத்தில் நெருடல் தோன்றும் போதெல்லாம் விளக்கம் பெற உதவும் நூல் ஸ்ரீ மஹாபெரியவாள் உபதேசித்த ''தெய்வத்தின் குரல்'' 1-7 பாகங்கள். அவற்றில் 'சிவனும் விஷ்ணுவும் பற்றிய விளக்கங்களில் (1,4 பாகங்களிலுள்ளவற்றில்) சிறு பகுதி இங்கே இடம் பெறுகிறது.

இப்பணியில் தம் தம் வீட்டில் காக்கப் பெற்றிருந்த கையெழுத்துப் பிரதிகளையும் நூறாண்டு கடந்த கிரந்த புத்தகங்களையும் அனுப்பி உதவிய நல்லன்பர்களுக்கு ஸ்ரீ மஹா பெரியவாள் டிரஸ்டின் சார்பில் நன்றியுடன் என் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். இவையனைத்தும் நிறைவுற அருளாசி தந்து ஊக்கமளித்து தெளிய வைத்து இயக்கி வருகிற காஞ்சி காமகோடி பீடத்து பூஜ்ய ஸ்ரீ குருவரர்களின் திருவடிகளில் இதனை ஸமர்ப்பித்து வணங்கி நிற்கிறேன்.

தேவீ நாமஸ்தோத்திர மஞ்சஜரியிலிருந்து தொடங்கி இந்த பதினைந்து நூல்களை அழகுபட வடிவமைத்து அச்சிட்டுத் தந்த V.K.N. எண்டர்பிரைஸஸ் நிர்வாகி ஸ்ரீ V.K.நாராயணன் அவர்கள் பெரும் பொறுப்பேற்று நிறைவுறச் செய்ததற்கு என் நன்றி.

22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு, S.V.ராதாகிருஷ்ண சாஸ்திரீ

ஸ்ரீ ரங்கம்.
7.7.2007

# சிவனும் விஷ்ணுவும்

## ஸ்ரீ மஹாபெரியவாளின் உபதேசமொழிகள்

குணங்கள் மூன்று விதம். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பன அவை. ஸத்வம் என்பது சாந்தம், அன்பு. அதன் நிறம் வெண்மை. வெள்ளை வெளேரென்ற வஸ்துவைப் பார்த்தாலே மனசில் ஏற்படுகிற பரிசுத்த மலர்ச்சிதான் சத்வம். ரஜஸ் என்பது வேகம். இதில் நல்லது கெட்டது இரண்டும் கலந்து இருக்கும். இதன் நிறம் சிவப்பு அல்லது செம்மஞ்சள். செக்கச் செவேல் என்று இருப்பதில் அழகும் உண்டு, கண்ணைக் குத்துகிற மாதிரி பயப்படுகிற தினுசும் உண்டு. உதய சூரியனையும் செம்பருத்தியையும் பார்த்தால் சிவப்பே அழகாயிருக்கிறது. ரத்தத்தைப் பார்த்தால் பயமா இருக்கிறது. தமஸ் என்பது முழுக்கவும் கெட்ட குணம். சோம்பல், தூக்கம் எல்லாம் இதைச் சேர்ந்தவை. இதன் நிறம் கறுப்பு. அதாவது அஞ்ஞான இருள் மயமானது.

சத்துவ-ரஜஸ்-தமோ குணங்களில் தான் எல்லா மனிதர்களும் கட்டுண்டு கிடக்கிறோம். எல்லாம் ஒரே பரமாத்மாவிடமிருந்து வந்ததால், சத்துவம், ரஜஸ், தமஸ் இவற்றுக்கும் ரூபகமாக பரமாத்மாவின் மூன்று மூர்த்தி பேதங்களைச் சொல்கிறார்கள்.

காம வேகத்தினால் தான் பிறப்பு உண்டாகிறது. எனவே சிருஷ்டிக்கெல்லாம் காரணமாயிருக்கிற பிரம்மாவை பரமாத்மாவின் ரஜோ குண மூர்த்தி என்று வைத்தார்கள். ப்ரம்மா மஞ்சள் சிவப்பாக இருக்கிறவர்.

பரிபாலனம் செய்வது சத்துவ குணத்தால் நடப்பது. மகா பாபம் செய்கிற நமக்கு ஒரு வேளை சோறு பெறக் கூடலாயக்கில்லை. அப்படியிருந்தும் ஈ எறும்பிலிருந்து சகல ஜீவராசிகளுக்கும் உணவு கிடைக்கும்படி செய்து ரட்சிப்பவர் மகாவிஷ்ணு. இவரை சத்துவ மூர்த்தி என்று வைத்தார்கள்.

சம்ஹாரம் என்பது அழிப்பது. அழிக்கிற குணம் தமஸைச் சேர்ந்தது. இதனால் தான் சம்ஹார மூர்த்தியாகிய சிவனை தமோ மூர்த்தி என்றார்கள்.

இதிலிருந்து தான் சைவ - வைஷ்ணவப் பிணக்கு யாவும் வந்தது போலிருக்கிறது. மகாவிஷ்ணுவின் பரிபாலனத்தை சத்துவம் என்று சைவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். "இந்த நிலையற்ற இகலோக வாழ்க்கையைப் பரிபாலிப்பது என்பது மனிதனை மேலும் மேலும் அஞ்ஞானத்தில் தள்ளுகிற காரியம் தான். இதில் சத்துவம் இல்லை. சிவன் தான் அஞ்ஞானம் நீங்க ஞானோபதேசம் செய்கிறவர். இந்த ஞானோபதேசத்துக்குப் பக்குவமாக இல்லாதவர்களைக் கூட அவர் பரமகிருபையோடு அவ்வப்போது கர்மக் கட்டிலிருந்து விடுவித்து ஓய்வு தருவதற்கே சம்ஹாரம் செய்கிறார். பிறவிகளுக்கு நடுவே சம்ஹாரத்தின் மூலம் விச்ராந்தி தருகிற கருணாமூர்த்தியே சிவபெருமான். இத்தொழில் தமஸ் அல்ல, சத்வமே. பரதெய்வமான பரமேசுவரன் ஆக்ஞைப்படி தான் விஷ்ணு பாலனம் செய்கிறார்' என்று சிவ பக்தர்கள் சொல்கிறார்கள். வைஷ்ணவர்களோ, 'மகா விஷ்ணு இவ்வுலகத்தைப் பரிபாலனம் பண்ணுவார். ஆனால் அதுமட்டுமில்லை. அவரே பரமபதமான மோக்ஷமும் தருவார்; அவரே முழுமுதற் கடவுள்; பரமசிவன் அவருக்குக் கீழ்ப்பட்டுத் தான் சம்ஹாரம் செய்கிறார்' என்கிறார்கள்.

ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களின் சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கிற நாம் சைவரும் அல்ல; வைஷ்ணவரும் அல்ல. நமக்கு ஸ்மார்த்தர் என்று பெயர். ஸ்மிருதிகள் என்கிற தர்ம சாஸ்திரங்கள் சொல்வதை அநுசரிக்கிறவர்களே ஸ்மார்த்தர்கள். நமக்கு சிவன், விஷ்ணு, இன்னும் மீதமுள்ள எல்லாத் தெய்வமுமே ஒரே பரமாத்மாவின் வெவ்வேறு ரூபங்கள் தான். இதில் ஏற்றத் தாழ்வே இல்லை.

இப்படி நாம் சொன்னால் மற்றவர்கள் விடுவார்களா ? தங்கள் தங்கள் தெய்வத்தின் தொழிலைச் சொல்லி இது தானே சத்துவ மூர்த்தி என்று கேட்கிறார்கள். சத்துவ மூர்த்தியைத் தான் வழிபட வேண்டும் ? யோசித்துப் பார்ப்போம். பிரம்மாவின் தொழிலும் ரஜஸ்; நிறமும் ரஜஸ்; அவர் வசிக்கிற தாமரையும் சிவப்பாக ரஜஸ் சம்பந்தமாகவே இருக்கிறது. ஆனால் சிவனையும், விஷ்ணுவையும் பாருங்கள். பரிபாலனம் என்கிற

ஸத்வத் தொழிலைச் செய்கிற விஷ்ணு வெளுப்பாகத் தானே இருக்க வேண்டும் ? ஆனால் இவரோ கரியவராக இருக்கிறார். இது தமஸின் நிறம். அதோடு கூட இவர் ஆதி சேஷன் மேல் நீள நெடுகப் படுத்துக் கொண்டு எப்போது பார்த்தாலும் தூங்கிக் கொண்டிருக்கிறார். தூக்கமும் தமஸைச் சேர்ந்தது தான்.

சிவனைப் பார்ப்போம். அழிவு என்கிற தமோ குணத் தொழிலைச் செய்கிற இவர், கருப்பாக இல்லை ! 'சுத்த ஸ்படிக ஸங்காசம்' என்றபடி சுத்த ஸத்வ வெள்ளையாயிருக்கிறார். இவர் இருக்கிற பனிமலையான கைலாசமும் அப்படியே இருக்கிறது. விபூதிப் பூச்சு, ரிஷப வாகனம் எல்லாம் ஒரே வெளுப்பு. இவர் தூங்கவில்லை, ஒன்று சாந்த தட்சிணாமூர்த்தியாக இருக்கிறார்; அல்லது நடராஜனாக ஆனந்தக் கூத்தாடுகிறார். இதெல்லாம் சத்துவமாகவே இருக்கிறது.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது ? சிவனும் விஷ்ணுவும் தனித் தனியாக ஸத்வ மூர்த்தி, தமோ மூர்த்தி என்று பிரிந்திருக்கவில்லை. இருவரிடமும் சத்துவம் தமஸ் இரண்டும் கலந்திருக்கின்றன. ஒருவர் ரூபத்தில் தமஸ், காரியத்தில் சத்துவம், இன்னொருத்தர் ரூபத்தில் சத்துவம், காரியத்தில் தமஸ். காரிய சத்துவத்தை வைத்து வைஷ்ணவர் விஷ்ணுவை வணங்குகிறார்கள். ஸ்வரூப சத்துவத்தால் சைவர் சிவனையே தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். இரு குணங்களும் இரு மூர்த்திகளிடமும் கலந்திருப்பதால் சாராம்சத்தில் இரண்டும் ஒன்றே என்று தெளியலாம். இரண்டையும் அன்போடு பக்தி செலுத்தி வழி படலாம்.

புராணங்களைப் பார்த்தால் சிவனிடம் விஷ்ணு தோற்றுப் போனதாகச் சில இடங்களில் இருக்கிறது. சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனதாகவும் வரலாறுகள் இருக்கின்றன. சிவன் விஷ்ணுவைப் பூஜித்தார் என்று இன்னோர் இடத்தில் காண்கிறோம். சிவனின் அடியைக் காண முடியாமல் விஷ்ணு தோற்றுப் போனார் என்பது திருவண்ணாமலை ஐதிஹ்யம். 'விஷ்ணு சிவன் இவர்களில் யார்

பலசாலி என்பதற்காக தேவர்கள் வைத்த போட்டியில் சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனுர். அப்போது ஸ்தம்பித்துப் போன சிவதநுசுதான் ஜனகரிடம் வந்து, பிறகு அதை ராமர் முறித்துப் போட்டார்' என்று ராமாயணத்திலிருந்து தெரிகிறது. சிவனுக்கு விஷ்ணு பூஜை பண்ணும் போது ஒரு பூ குறைய உடனே தம் கண்ணேயே ஒரு கமலமாகக் கருதிப் பறித்தெடுத்து அர்ச்சித்தார் என்று திருவீழிமிழலே புராணம் சொல்கிறது. இங்கே சிவனுக்கு நேத்ரார்ப்பணேசுவரர் என்றே பெயர். சிவனுக்கு பிரம்மாவின் தலேயைக் கிள்ளியதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட அதைப் போக்கிக் கொள்ள விஷ்ணுவை அவர் பூஜை செய்து, விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் தோஷத்தைப் போக்கிக் கொண்டார் என்று திருக்கண்டியூரில் ஐதிஹ்யம் இருக்கிறது. இங்கே பெருமாளுக்கு ஹரசாப விமோசனர் என்றே பெயர். இப்படி ஏகப்பட்ட கதைகள் சிவ உத்கர்ஷத்தையும், விஷ்ணு உத்கர்ஷத்தையும் காட்டச் சொல்லலாம்.

'சிவனும் விஷ்ணுவும் ஒன்று தான் என்றீர்களே ! ஒரே ஸ்வாமி தன்னுடனேயே போட்டி சண்டை போட்டுக் கொள்ள முடியுமா ? தன்னேயே பூஜித்துக் கொள்ள முடியுமா ?'. சீதா கல்யாணம் முடிந்து எல்லோரும் அயோத்திக்குத் திரும்பும்போது ராமரைப் பரசுராமர் வழி மறிக்கிருர். ''சிவவிஷ்ணு யுத்தத்தில் 'மக்கார்' செய்த ருத்ர தநுசை உடைத்துப் பெரிய பேர் வாங்கி விட்டாயேடா ! அப்போது அதில் ஜயித்த விஷ்ணுவின் வில் இதோ என்னிடம் இருக்கிறது. இதை நாணேற்றிப் பார்'' என்று ராமனிடம் சண்டைக்கு வருகிருர் பரசுராமர்.

இந்தப் பரசுராமர் யார் ? விஷ்ணுவின் அவதாரம். இவர் சண்டைக்கு அழைத்த ராமர் யார் ? அவரும் அதே விஷ்ணுவின் அவதாரம் தான். ஒரே விஷ்ணுவின் அவதாரங்கள் இங்கே சண்டை போட்டுக் கொள்ளவில்லேயா ? இதில் ஓர் அவதாரம் (பரசுராமர்) இன்னேர் அவதாரத்திடம் (ராமன்) தோற்றுப் போகிறது. சிவனே ஜயித்த விஷ்ணுவின் வில்லே நாணேற்றி, அதே விஷ்ணுவின் அவதாரமான பரசுராமரை ஓட்டிய

இன்னோர் அவதாரமான ராமசந்திர மூர்த்தி, பிறகு இதே சிவனுக்கு லிங்கம் வைத்துப் பூஜை செய்து ராமேசுவரத்தை உண்டாக்கியிருக்கிறார்.

ஜனங்களுக்கு பக்தி உண்டாக்க வேண்டுமானால் அதற்கும் பகவானே வழிகாட்டுகிறார். எப்படி ? தாமே பக்தனாக இருந்து வழி காட்டுகிறார். இதற்காகத் தான் சில இடங்களில் சிவன், பக்தராக இருந்து விஷ்ணுவைப் பூஜிக்கிறார். சில இடங்களில் விஷ்ணு, பக்தனாக இருந்து சிவனைப் பூஜிக்கிறார்.

இரண்டும் ஒன்று தான். ஹரன்-ஹரி என்ற பெயர்களே (பொருளில்) ஒன்றாகத் தான் இருக்கின்றன. இரண்டும் சேர்ந்ததே ஹரிஹரன், சங்கர நாராயணன் என்றெல்லாம் சமரச பாவத்தை வளர்க்கிற மூர்த்திகளாக இருக்கின்றன. ஆழ்வார்கள் பெருமாளையே ஹரிஹரனாகத் தான் கண்டார்கள்.

> தாழ்சடையும்-நீண்முடியும்: ஒண்மழுவும்-சக்கரமும்
> சூழ்அரவும்-பொன்நாணும் தோன்றுமால்-சூழும்
> திரண்டருவி பாயும் திருமலை மேல் எந்தைக்கு
> இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

என்று இரண்டிரண்டாக, அதிலும் முதலில் சிவ அம்சங்களையும் இரண்டாவதாக விஷ்ணு அம்சங்களையும் சொல்லி வேங்கடரமண ஸ்வாமியைப் பாடுகிறார் பேயாழ்வார். 'வெவ்வேறு உருவம் இருந்தாலும் ஒருவன் இன்னொருத்தனில் இருக்கிறான்' என்று சொல்லி, இங்கும் முதலில் சிவனையே பாடுகிறார் பொய்கை ஆழ்வார்.

> பொன் திகழுமேனிப் புரிசடையம் புண்ணியனும்
> நின்றுகலம் தாய நெடுமாலும்-என்றும்
> இரவரங்கத்தால் திரிவேரலும் ஒருவன்
> ஒருவன் அங்கத்தென்றும் உளன்

பெரிய கவி கம்பனோ, அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவது அரிய பரிசு என்று சொல்லிவிட்டார்.

பெரியவர்கள் சொன்னது இருக்கட்டும். சின்ன குழந்தைகள் கூட, 'அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயில் மண்ணு' என்கிறது. இந்தக் குழந்தை வாக்கு ஆயிரம் பதினாயிரம் வருஷமாக இருந்து வந்திருக்கிறது. காலத்தைக் கடந்து நிற்கிறது. இதில் இருக்கிற சாரத்தினால் தான், தத்துவத்தால் தான் நிற்கிறது.

எல்லாத் தேவதைகளும் ஒரே பரமாத்மா தான். சிவனும் விஷ்ணுவும் கொஞ்சம்கூட வேறு வேறில்லை. ஆனாலும் இரண்டையும் வழிபடுகிற போது கொஞ்சம் பிரித்து பக்தி செய்தால் அதிலும் ஒரு ரஸம் இருக்கத் தான் செய்கிறது. பலவாகப் பிரிந்தும் ஒற்றுமையுடன் இருப்பது தான் (Unity in diversity) நம் மதத்தின் சாரம். இப்படியே சிவன், விஷ்ணு என்கிற இரண்டு மூர்த்திகளை வழிபடும் போது சாராம்சத்தில் அவை ஒன்றே என்ற உணர்ச்சி இருந்தாலும், ஒவ்வொரு மூர்த்தியை ஒவ்வொரு தத்துவத்துக்கு ரூபகமாக வைத்துக் கொண்டு பக்தி செய்வதில் ஒரு ருசி இருக்கத்தான் செய்கிறது.

இப்படிச் செய்யும்போது சிவனை எல்லாவற்றுக்கும் அடிப்படையான, ஏக வஸ்துவான ஞானமாக பாவிக்கலாம்; அந்த ஏக வஸ்துவை நானாவிதமாகக் காட்டி ஜகத்தை நடத்தும் சக்தியாக விஷ்ணுவை பாவிக்கலாம். அதாவது சிவத்தைப் பரப்பிரம்மமாகவும் விஷ்ணுவைப் பராசக்தியாகவும் வைத்துக் கொள்ளலாம். அம்பிகையும் விஷ்ணுவும் சகோதரர்கள் என்று சொன்னாலும், அவர்கள் ஒன்றே தான் என்பது பரம ஞானிகளின் அநுபவம். ''அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்க்கே'' என்று அப்பர் சுவாமிகள் பாடியிருக்கிறார். சங்கர நாராயண வடிவத்தையும் அர்த்த நாரீசுவர வடிவத்தையும் பார்த்தால் இந்த உண்மை தெரியும். இரண்டிலும் வலப் பக்கம் பரமேசுவரனுடையது. ஒன்றிலே இடப் பக்கம் விஷ்ணு; இன்னொன்றில் அதே இடது புறம் அம்பாளுடையது.

இருக்கிற ஒன்றே ஒன்றை, இல்லாத பலவாகக் காட்டுகிற சக்தியே அம்பாள் அல்லது விஷ்ணு. அதாவது ஜகத்

முழுதும் விஷ்ணு ஸ்வரூபம். 'விச்வம் விஷ்ணு:' என்று தான் ஸஹஸ்ர நாமம் ஆரம்பிக்கிறது. 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்கிற வாக்கும் இருக்கிறது. உலக பரிபாலனம் விஷ்ணுவுக்குரியது என்று சொல்கிறோம். உலகத்திலே இருக்கிற ஆனந்தங்களை உணர்ச்சிகளை எல்லாம் தெய்விகமாக்குகிற பக்தி மார்க்கமும் விஷ்ணு சம்பந்தமாகவே அதிகம் தோன்றுகிறது. ஹரிகதை, ஹரிநாம சங்கீர்த்தனம் என்றெல்லாம் சொல்வது போல் ஹரகதை ஹரகீர்த்தனம் என்று சொல்வதில்லை. கதை பாட்டு இந்த ஆனந்தமெல்லாம் விஷ்ணுவிடமே அதிகம். 'பாகவதர்' என்றால் பகவானைச் சேர்ந்தவர் என்றே அர்த்தமாயினும், பொதுவாக, பாகவதர், பாகவதம் என்றெல்லாம் சொன்னால் விஷ்ணு பக்தர், விஷ்ணுவின் கதை என்றே எடுத்துக் கொள்கிறோம். பிரபஞ்ச சௌந்தரியங்களையெல்லாம் வைத்துப் பூஜை, பக்தி, பஜனை, கதை செய்வதெல்லாம் விஷ்ணு சம்பந்தமாயிருக்கிறது.

ஆனால் இந்தப் பிரபஞ்சத்தை விட்டு, இதற்கு ஆதாரமான சாந்தத்தில் திளைக்கும் போது சிவசம்பந்தம் அதிகம் தோன்றுகிறது. சிவஞானம், சிவயோகம் என்று சொல்கிற மாதிரி விஷ்ணு ஞானம், விஷ்ணு யோகம் என்பன காணப்படவில்லை. பலவாக இருக்கிற உலகனைத்தும் விஷ்ணு என்பதால் 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்ற வாக்கு தோன்றியிருக்கிறது. பலவாகக் காண்கிறது போனால் 'ஸர்வம்' போய்விடும். ஏகம் தான் இருக்கும் போது 'ஸர்வம்' என்ற வார்த்தைக்கு இடம் ஏது ? அங்கே அந்த ஏகத்தை அநுபவிக்கிறவனைத் தவிர ஜகம் என்கிற ஒன்றும் தனியாக இல்லை. ஜகத்தும் அடிபட்டுப் போச்சு ! சிவம் ஒன்றே எஞ்சி நிற்கிறது. இதனால்தான 'சிவமயம்' என்றே சொல்கிறார்கள்.

எதை எரித்தாலும் முதலில் அது கறுப்பு ஆகிறது. ஆனால் அப்போதும் எரிபட்ட வஸ்துவுக்கு நிறம் மாறினாலும் ரூபம் அப்படியே இருக்கும். நியூஸ் பேப்பரைக் கூடக் கொளுத்திவிட்டு அந்தக் கறுப்புக்குள்ளேயே அதைவிடக் கறுப்பாக எழுத்துக்களும் தெரியும். துணியும் இப்படியே

மடிப்புக் கூடக் கலையாமல் நெருப்பில் கருகுவதுண்டு முழுக்க நீற்றுப் போய் உருவம் இழப்பதற்கு முற்பட்ட நிலை இது. இது தான் 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' இந்த நிலையில் ஜகத் இருப்பது போல் இருக்கிறது; ஆனாலும் இந்திரிய சேஷ்டைகள் எரிந்து போய் விட்டன. உணர்ச்சிகள், ஆனந்தம் எல்லாம் இருப்பது போல் தோன்றினாலும் லௌகிகமாக இல்லாமல் தெய்விகமாகி பக்தி ரூபத்தில் இருக்கின்றன. யோகத்திலும் ஞானத்திலும் மேலும் ஆன்மாவைப் புடம் போட்டால் அதுவும் நீற்றுப் போய் பஸ்மாகிவிடும். எரிகிற வஸ்துகள் முதலில் கறுப்பானாலும், கடைசி வரையில் எரித்தால் எல்லாமே வெள்ளை வெளேரென்று நீறாகின்றன. இது தான் 'சிவமயம்'.

சிவனுக்கும் திருமாலுக்குமிடையே பேதம் கற்பிப்பது கொஞ்சம் கூடச் சரியில்லை. வைஷ்ணவ ஆழ்வார்களும், சைவ நாயன்மார்களும், உயர்ந்த பக்தி நிலையில் இரண்டையும் ஒரே ஸ்வரூபமாகக் கண்டு பாடியிருக்கிறார்கள். ''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து'' என்று ஆழ்வார் பாடினால், அதை அப்படியே எதிரொலிக்கிற மாதிரி ''குடமாடியை இடத்தே கொண்டு'' என்று சைவத் திருமுறை பாடுகிறது. (கோபிகைகளோடு குடத்தை வைத்துக் கொண்டு நர்த்தனம் செய்த கிருஷ்ண பரமாத்மாதான் குடமாடி.)

தமிழ் நாட்டில் ஆதிகாலம் முதற்கொண்டு இந்த சமரச பாவம் இருந்து வந்திருக்கிறது. அதனால் தான் இருபத்தேழு நட்சத்திரங்களுக்குள் சிவனுக்குரிய ஆதிரை விஷ்ணுவுக்குரிய ஓணம் ஆகிய இரண்டுக்கு மட்டும் 'திரு' என்ற கௌரவ அடைமொழி சேர்த்துத் திருவாதிரை, திருவோணம் என்று சொல்கிறோம். குழந்தையாக இருக்கிற போதே இந்த சமரச உணர்ச்சி ஏற்பட வேண்டும் என்பதால் தான் அவ்வைப் பாட்டி ஆத்திச்சூடியில் 'அரனை மறவேல்' என்றும் 'திருமாலுக்கு அடிமை செய்' என்றும் உபதேசம் செய்கிறாள்.

ஒரே தெய்வத்தை இஷ்ட மூர்த்தியாகக் கொண்டு வழிபடுவதே சித்த ஒருமைப்பாட்டுக்கு உதவுவதாகத்

தோன்றலாம். இதில் நியாயம் உண்டு. இதனால் இன்னொரு மூர்த்தியைத் தாழ்வாக எண்ணக் கூடாது. தங்கள் இஷ்ட தெய்வத்தையே, பரம்பரையாக வந்த குல தெய்வத்தையே உபாசிக்கலாம். ஆனால் அப்போதும், 'ரூபமற்ற பரமாத்மாவையே நாம் இந்த ரூபத்தில் வழிபடுகிறோம். எனவே இந்த மூர்த்தி பரமாத்மா தான். அதே பரமாத்மா மற்ற ரூபங்களும் எடுத்துக் கொள்ள முடியும்; அதாவது நம் தெய்வமே தான் மற்றவர்கள் வழிபடுகிற ஏனைய தெய்வங்களாகவும் உள்ளது என்று நினைத்து விட்டால் நமக்கு அந்த மற்ற ரூபங்களில் பிடிப்பு உண்டாகாவிட்டாலும் கூட. அவை நம் தெய்வத்தை விடத் தாழ்ந்தது என்ற எண்ணம் வரவே வராது.

சிவபெருமான், திருமால் இரண்டு பேரையம் உபாசிப்பதற்கு நீண்ட காலமாக ஒரு விதி இருக்கிறது. லோக விவகாரங்களை நாம் அழகாக, தர்மமாக நடத்துவதற்கு ஜகத் பரிபாலகரான மகாவிஷ்ணுவையும், இந்த வியாபாரங்களிலிருந்து மனசைத் திருப்பி ஆதார வஸ்துவில் ஒடுங்குவதற்கு சம்ஹாரமூர்த்தியான பரமேச்வரனையும் தியானிக்கச் சொல்லியிருக்கிறார்கள்.

இதற்கேற்ப, வெளியிலே பார்த்தாலும் மகாவிஷ்ணு தானே திருபுவன சக்கரவர்த்தியாக இருக்கிறார் ? பரமேசுவரனே ஆண்டியாக, பிட்சாண்டியாக அல்லவா இருக்கிறார். சிவனிடம் உள்ளதற்கு விலை மதிப்பு இல்லை (valueless); விஷ்ணுவிடம் உள்ளதோ விலை மதிக்கவே முடியாதது. (invaluable). எல்லாவற்றுக்கும் மேலாக மகாவிஷ்ணுவிடம் ஐசுவரிய தேவதையான மகா லக்ஷ்மியே இருக்கிறாள். பரம சிவனிடம் இருக்கும் அம்பாளுக்கோ 'அபர்ணா' என்று பெயர். ஓர் இலை (பர்ணம்) கூட இல்லாதவள் என்று அர்த்தம். இலையைக் கூட உண்ணாமல் பரம தியாகியாகத் தபஸ் செய்தவள் அபர்ணா.

இதிலிருந்து லோகமெல்லாம் தர்மத்தோடு சந்தோஷமாக இருப்பதற்கு மகாவிஷ்ணுவையும்,

வைராக்கியம் வருவதற்குப் பரமேசுவரனையும் ஆராதிப்பதில் பொருத்தம் இருப்பது தெரியும். மகாவிஷ்ணுவால் ஞானம் தர முடியாது என்றோ, பரமேசுவரனால் லோக வியாபாரம் நன்றாக நடக்க அநுக்கிரகிக்க இயலாது என்றோ அர்த்தமில்லை. இரண்டு மூர்த்திகளை வழிபடுகிறபோது இப்படி இரண்டு விதங்களில் ஆராதிப்பது ஒவ்வொரு விதத்தில் ஒவ்வொருவரிடம் சித்த ஒருமைப்பாடு (ஐகாக்ரியம்) கொள்வதற்கு உதவும்.

இந்த அடிப்படையில் தான் விடியற்காலையில் ஒவ்வொரு வரும் எழுந்தவுடன் 'ஹரி நாராயண, ஹரி நாராயண' என்று கொஞ்ச காலமேனும் ஸ்மரணம் செய்ய வேண்டும் என்றும், சாயங்காலத்தில் 'சிவ சிவ' என்று சிறிது பொழுதேனும் ஸ்மரிக்க வேண்டும் என்றும் பெரியவர்கள் விதித்திருக்கிறார்கள். வெகு சுலபமான சாதனம், எல்லோரும் இதை அவசியம் செய்ய வேண்டும்.

சிவ-விஷ்ணு அபேதத்தைக் காட்டும் ஸ்தலங்கள் பல உள்ளன. திருநெல்வேலிச் சீமையில் சங்கர நாராயணன் கோயிலிலும், (சங்கர நாயினார் கோயில்' என்று தப்பாகச் சொல்கிறார்கள்) மேற்கே ஹரிஹர க்ஷேத்திரத்திலும் இவ்விரண்டு மூர்த்திகளும் ஒன்றாக இணைந்த பிம்பங்கள் உள்ளன. குற்றாலத்தில் விஷ்ணு மூர்த்தியையே அகஸ்திய மகரிஷி சிவலிங்கமாக மாற்றியிருக்கிறார். இவை பிரபலமான ஸ்தலங்கள். இவ்வளவு பிரபலமில்லாத ஒரு க்ஷேத்திரத்தைப் பற்றிச் சொல்கிறேன்.

திருப்பாற்கடல் என்று ஓர் ஊர் இருக்கிறது. காஞ்சிபுரத்திலிருந்து மேலூருக்குப் போகிற வழியில் இருபது மையிலில் இருக்கிறது. முதலில் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு பெருமாள் கோயில் கூடக் கிடையாதாம். ஈசுவரன் கோயில் தான் இருந்ததாம். ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் அநேக க்ஷேத்திரங்களுக்குச் சென்று விஷ்ணு தரிசனம் பண்ணிக் கொண்டு வருகிற காலத்தில் அந்த ஊருக்கும் வந்தாராம். ஒவ்வொரு நாளும் ஓர் ஊருக்குப் போகிறபோது விஷ்ணு தரிசனம் பண்ணாமல் அவர் ஆகாரம் பண்ணுவது இல்லை என்ற நியமத்தை வைத்துக் கொண்டிருந்தார்.

அவர் திருப்பாற்கடலுக்கு வந்து, ''எங்கே விஷ்ணு ஆலயம் இருக்கிறது ?'' என்று ஒவ்வொரு கோயிலாகப் போனார். எல்லாம் சிவன் கோயிலாகவே இருந்தன. கடைசியில் விஷ்ணு ஆலயமாகத் தான் இருக்கும் என்று நினைத்து ஒரு கோயிலுக்குள் நுழைந்தார். உள்ளே போனால் ஈசுவரன் இருந்தார். உடனே வெளியே ஓடி வந்து விட்டார். ஆகாரம் பண்ணவில்லை. வயிறு பசியில் துடித்தது. அதைவிட மனசிலே 'இன்றைக்கு விஷ்ணு தரிசனம் கிடைக்கவே இல்லையே !' என்று துடிதுடித்துக் கொண்டிருக்கிறார் ?

அப்போது ஒரு கிழவர் அவருக்கு முன்னால் வந்து, ''என்ன ஸ்வாமி ! விஷ்ணு தரிசனம் பண்ண வருகிறீர்களா ? '' என்று கேட்டார். ''இந்தப் பிரயோஜனமில்லாத ஊரில் எங்கே ஐயா விஷ்ணு கோயில் இருக்கிறது ?'' என்று அவர் கோபமாகச் சொன்னாராம். ''அதோ தெரிகிறதே. அது சாக்ஷாத் பெருமாள் கோயில் தான்'' என்று கிழவர் சொன்னாராம்.

அந்தக் கோயிலுக்குள் தான் அவர் நுழைந்து பிறகு ஈசுவரன் இருப்பதைப் பார்த்து விட்டு ஓடி வந்திருக்கிறார். அதனால், ''ஏன் ஐயா பொய் சொல்கிறீர் ? அது ஈசுவரன் கோயில்'' என்று சொன்னாராம்.

''இல்லவே இல்லை நீர் தான் பொய் சொல்கிறீர். அது பெருமாள் கோயில் தான். வேண்டுமானால் உள்ளே வந்து பாரும்'' என்று அவர் சொல்ல, ''இப்போது தான் நான் பார்த்தேன்'' என்று இவர் சொல்ல, கடைசியில் கிழவர் பந்தயம் கட்டும்; எதற்காகப் பொய் சொல்கிறீர் என்று ஸ்ரீ வைஷ்ணவரிடம் அடிதடிச் சண்டைக்குப் போய் விட்டாராம்.

இதற்குள் ஊரில் இருந்தவர்களுக்கு இது தெரிந்து அவர்களுக்குள் மந்தியஸ்தம் செய்து வைக்க வந்தார்கள்.

''எதற்காகப் இப்படிச் சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டும் ? எல்லோரும் தான் போய் எது மெய்யென்று பார்க்கலாமே ?'' என்று ஊர் ஜனங்கள் சொன்னார்கள்.

''நான் அந்தக் கோயிலுக்குள் நுழையமாட்டேன்'' என்று விஷ்ணு பக்தர் சொன்னராம்.

''வராவிட்டால் விட முடியாது'' அந்தக் கிழவர் வீம்பு பண்ணிக் கொண்டு, விடமாட்டேன் என்று மல்லுக்கு நின்ருர். கடைசியில் ஊரார் மத்தியஸ்தத்தின் பேரில் இவர்கள் எல்லோரும் கோயிலுக்குள் சென்ருர்கள்.

வாஸ்தவத்தில் அங்கே போய்ப் பார்த்தால் சிவலிங்கம் மாதிரி இருந்தது. கீழே பிரம்ம பீடமாகிய ஆவுடையார் இருந்தது. ஆனுல் அதன் மேலோ லிங்கத்தின் ஸ்தானத்தில் பெருமாள் நின்று கொண்டிருந்தார்.

அதைப் பார்த்தவுடன், ''அடடா ! நாம் ஏமாந்து போய் விட்டாமே. மகாவிஷ்ணு அல்லவா இங்கே இருக்கிருர் ?'' என்று அந்த விஷ்ணு பக்தர் மிகவும் மனம் உருகி அநேக ஸ்தோத்திரங்கள் பண்ணிஞராம்.

கிழவரிடம் மன்னிப்புக் கேட்கத் திரும்பிஞல், அந்தக் கிழவரே விஷ்ணு மூர்த்திக்குள் கலந்து விட்டார். பெருமாளே கிழவராய் வந்திருக்கிருர் !

மஹாவிஷ்ணு மீஞக்ஷியை ஸுந்தரேசுவரருக்கு தாரை வார்த்துக் கொடுக்கிருர். மதுரையில் இந்த ஐதிஹ்யம் சிற்பத்தில் வெகு அழகாக இருக்கிறது. அம்பாள் பத்மநாப சகோதரியாகவும், பரமேசுவர சக்தியாகவும், இருப்பதை அப்படியே கண்ணுக்கு முன்ஞல் கொண்டு வந்து காட்டுகிறது இந்தச் சிற்பம். இதைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் நம் மனசில் சைவ வைஷ்ணவ பேத பாவம் போயே போய்விடும்.

பரமேசுவரனும் ஸ்ரீமன் நாராயணனும் ஒரே வஸ்து; இரண்டல்ல. பெயர் வேறு, உருவம் வேறு, வேலே வேறு. ஆனுல் உள்ளேயிருக்கப்பட்ட வஸ்து ஒன்றே தான். ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் அபிப்பிராயம் இதான். கேள்வியும் பதிலுமாக 'ப்ரச்னேத்தர ரத்னமாலிகா' என்று அவர் ஒரு கிரந்தம் செய்திருக்கிருர்.

அதில் கேள்வி: 'பகவான் யார் ?''

அதற்குப் பதில்: 'சங்கரனுகவும் நாராயணனுகவும் இருக்கிற ஒருவன் : சங்கர நாராயணாத்மா ஏக:'

இதிலிருந்து ஆசாரியாள் மனசில் சிவன், விஷ்ணு என்ற பேத பாவம் கொஞ்சம் கூட இல்லை என்றுகிறது.

இதே மனேபாவத்தில் தான் அவரது சம்பிரதாயத்தைப் பின்பற்றும் ஸ்மார்த்தர்கள் எல்லோரும், ஒவ்வொரு காரியத்தையும் 'பரமேசுவரப் பிரீதிக்காக' என்ற சங்கல்பத்துடன் ஆரம்பித்து, முடிவில் 'கிருஷ்ணூர்ப்பணம்' என்று பூர்த்தி பண்ணுகிறேம். 'பரமேச்வர ப்ரீத்யர்த்தம்' என்று தொடங்கி, 'ஜனர்த்தன: ப்ரீயதாம்' என்று முடிக்கிறேம். ஒருத்தன் பிரீதிக்கு என்று ஆரம்பித்ததை இன்னெருத்தன் பிரீதிக்கு என்று எப்படி முடிக்க முடியும் ? இரண்டும் ஒன்றுகவே இருப்பதால் தான் முடிகிறது. பேர்தான் வேறு வேறு.

தீவிர வைஷ்ணவர்களைக் கேட்டால், விஷ்ணு தான் கடவுள்; சிவன் மற்ற ஜீவராசிகளைப் போல் என்பார்கள். இதே மாதிரி வீர சைவர்களைக் கேட்டால் சிவன் தான் முழு முதல் தெய்வம்; விஷ்ணு ஜீவகோடியைச் சேர்ந்தவர் தான் என்பார்கள். இவர்கள் ஒவ்வொருவரது சித்தாந்தப் படியும் சிவன் அல்லது விஷ்ணு தான் எல்லா ஜீவராசிகளின் இருதயத்துக்குள்ளும் அந்தர்யாமியாக இருக்கிருர். இப்படி வைத்துக் கொண்டாலும் ஒன்று, சிவன் விஷ்ணுவின் இருதயத்தில் இருக்கிருர்; அல்லது விஷ்ணு சிவனின் இருதயத்தில் இருக்கிருர். எப்படிப் பார்த்தாலும் தங்கள் ஸ்வாமியை இருதயத்தில் வைத்துக் கொண்டிருக்கிற அந்த இன்னெருவரையும் பூஜிக்கத் தானே வேண்டும் ?

'ஒரு மூர்த்தி தான் உள்ளது; அதுவே மூன்றுகப் பிரிந்தது இவை ஒன்றுக்கொன்று சமம். ஒன்று உயர்ந்தது—மற்றது தாழ்ந்தது என்றில்லை'' என்கிருர் காளிதாஸன்,

ஏகைவ மூர்த்தி: பிபிதே த்ரிதா ஸா
ஸாமான்யமேஷாம் ப்ரதமாவரத்வம்

அநுபவ சிகரத்திலிருந்து பேசிய மகான்கள் தங்களுக்கென்று ஓர் இஷ்ட தெய்வம் இருந்தாலும் கூட, மற்ற தேவதைகளும் அதுவே தான் என்று தெளிவாகக் கண்டு கூறியிருக்கிறார்கள். 'மகேசுவரனுக்கும் ஜனார்த்தனனுக்கும் இடையே வஸ்து பேதம் துளிக்கூட இல்லாவிட்டாலும் என் மனசு என்னவோ சந்திரனைச் சிரசில் சூடிய சிவ பெருமானிடம் தான் விசேஷமாக ஈடுபடுகிறது' என்று ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் கூறுகிறார். 'நான் சைவன் தான்; சிவ பஞ்சாட்சர ஜபம் செய்கிறவன் தான். இருந்தாலும் காயாம்பூ நிறத்து கோபிகா ரமணனிடமே என் சித்தம் லயிக்கிறது' என்கிறார் 'கிருஷ்ண கர்ணாம்ருத'த்தில் லீலாசுகர்.

ஒரு புராணத்தில் சிவன் விஷ்ணுவை நமஸ்கரிக்கிறார்; இன்னொரு புராணத்தில் விஷ்ணு சிவனை நமஸ்கரிக்கிறார் என்பதால் இவர்கள் சின்னவர்களாகி விடவில்லை. சிவனை நமஸ்காரம் பண்ணு என்று சொல்லாமல் விஷ்ணு அதை நமக்குக் காரியத்தில் உபதேசிக்கிறார்; இப்படியே நமக்கு விஷ்ணு பக்தி உண்டாக்கவே சிவன் விஷ்ணுவைப் பூஜிக்கிறார். ஜனங்களின் விதவிதமான ருசிக்குத் தகுந்த மாதிரி ஒரே பரமாத்மா வேறு வேறு ரூபத்தில் வருகிறார். இவர்களில் ஒருத்தர் இன்னொருத்தரைப் பூஜை செய்கிறார் என்னும் போது கூட, பூஜை செய்பவரை நாம் நமஸ்கரிக்கத் தான் வேண்டும்.

பரமேசுவரனுக்கு எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. மகாவிஷ்ணுவுக்கும் எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. இருந்தாலும் ஒரு ஸத்ஸங்கத்தின் காரியங்களை முடிக்கும் போது 'நம: பார்வதீ பதயே' என்று ஒருவர் சொன்னவுடன் எல்லோரும் 'ஹர ஹர மஹாதேவ' என்ற நாமத்தையே கோஷம் செய்கிறோம். ஒருத்தர் 'கோவிந்த நாம சங்கீர்த்தனம்' என்கிறார் அல்லது 'கோபிகா ஜீவன ஸ்மரணம்' என்று ஒருவர் சொன்னால் அனைவரும் 'கோவிந்தா, கோவிந்தா' என்ற பெயரைச் சொல்லியே கோஷிக்கிறோம். சிவன், ருத்திரன், நடராஜன் என்று எத்தனையோ பெயர்கள் இருந்தாலும் கூட்டமாக கோஷம் செய்யும் போது 'ஹர' நாமமே முன்னால் நிற்கிறது. அப்படியே திருமாலுக்கு நாராயணன்,

மகாவிஷ்ணு, ஸ்ரீ நிவாசன் என்றெல்லாம் பல நாமங்கள் இருந்த போதிலும், பக்த கோடிகள் சேர்ந்து முழங்குவது 'கோவிந்த' என்ற பெயராகவே இருக்கிறது முழக்குமாறு இவற்றுக்கு என்ன சிறப்பு ? குழந்தையின் வாக்குக்கு விசேஷம் உண்டு. கள்ளம் கபடமில்லாத ஒரு குழந்தை சொல்வது மகான்களின் வாக்குக்குச் சமமானது. எல்லாக் குழந்தைகளின் வாக்குக்கும் விசேஷம் உண்டு என்ருல், தெய்வக் குழந்தைகளாக, அவதாரக் குழந்தைகளாக உள்ளவற்றின் வாக்கு அதி விசேஷமானதல்லவா ? ஹர நாமமும் கோவிந்த நாமமும் இரண்டு அவதாரக் குழந்தைகளின் வாக்கில் விசேஷமாக வந்த பெயர்கள்.

ஒருவர் திருஞான சம்பந்தர். அம்பாளின் க்ஷீரத்தை அருந்தியதால் முருகனுகவே போற்றப்படுபவர். மதுரையில் அவரோடு வாதிட்ட சமணர்கள் புனல் வாதமும், கனல் வாதமும் செய்ய வேண்டும் என்றனர். அதாவது இரு கட்சிக்காரர்களும் தங்கள் கொள்கைகளை ஓலையில் எழுதி வெள்ளத்தில் விட வேண்டும். பிரவாகத்தை எதிர்த்துக் கொண்டு எவரது ஏடு வருகிறதோ, அவரது கொள்கைக்கே வெற்றி என்பது புனல் வாதம். இதே போல் அவரவரது சித்தாந்தத்தை எழுதிய ஓலையை நெருப்பிலே போட்டால் எது எரியாமலிருக்கிறதோ அதற்கே வெற்றி என்று கொள்வது கனல் வாதம். மதுரையில் சம்பந்தரும் சமணரும் புனல் வாதம் - கனல் வாதம் செய்ததில் சமணரின் ஏடுகள் ஆற்ருேடு போயின, நெருப்பில் எரிந்தன, திருஞான சம்பந்தரின் ஓலை பிரவாகத்தை எதிர்த்து வந்தது. தீயிலும் எரியாமல் இருந்தது. பிரவாகத்திலே போட்ட ஓலையில் சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் என்ன எழுதினர் ? முடிவாக சைவத்தை நிலை நாட்ட நடந்த இறுதி பரீட்சை புனல் வாதம் தான். இதில் ஜயத்தை வாங்கித் தந்த ஓலையில் சம்பந்தர் என்ன எழுதினர் ?

வாழ்க அந்தணர் வானவர் ஆனினும்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

அரன் என்ருகிறது ''ஹரஹர'' என்று எங்கு பார்த்தாலும் ஜனங்கள் கோஷிக்க வேண்டும் என்று அந்த தெய்வக் குழந்தை போட்ட ஆக்ஞா விசேஷத்தால் தான் இன்றளவும், 'நம: பார்வதீ பதயே'' என்று ஒருவர், சொன்ஞல், நாம் அத்தனை பேரும் 'ஹர ஹர மஹாதேவா'' என்கிருேம். 'அரோஹரா', 'அண்ணுமலேக்கு அரோஹரா', 'தண்டாயுத பாணிக்கு அரோஹரா' என்கிருேம்.

கோவிந்த நாமத்தை சொன்ன தெய்வக் குழந்தை யார்? நம் பகவத் பாதர்களாகிய ஸ்ரீ ஆதி சங்கராசாரியர்களே, எட்டு வயதுக் குழந்தையாக இருந்தபோதே கோவிந்த பகவத்பாதர் என்ற மகானிடம் சந்நியாசம் வாங்கிக் கொண்ட ஸ்ரீ ஆசாரியர்களுக்கு 'கோவிந்த' நாமத்திலே விசேஷமான பற்று. தம் குரு, கீதாசாரியனை ஜகத்குரு கிருஷ்ணன் இருவருக்கும் ''கோவிந்த'' என்ற பெயர் பொதுவாக இருந்ததால் நம் ஆசாரியர்களுக்கு இந்த நாமத்தில் அலாதி அபிமானம் ஏற்பட்டாற் போலிருக்கிறது. ஒரு பண்டிதரை முன்னிலேப் படுத்தி, உலகத்தை எல்லாம் பார்த்து, ''பஜகோவிந்தம், பஜகோவிந்தம்'' என்று பாடிஞர் ஸ்ரீ சங்கர பகவத்பாதாள். பரமேசுவர அவதாரமான அந்தக் குழந்தையின் கட்டளேப்படி தான் இப்போதும் நாம், ''கோவிந்தா, கோவிந்தா''என்று கூட்டத்திலே கோஷிக்கிருேம். தனியாக நாம் பல நாமங்களேயும் மந்திரங்களேயும் சொல்லி சிரேயஸ் பெற்ருலும், 'வையகம் துயர் தீர' வேண்டுமாஞல் நாம் கோஷ்டியாக இந்த இரு நாமங்களேயே கோஷம் செய்ய வேண்டும்.

பரம அத்வைதிகள், பேச்சிலே மட்டுமில்லாமல் அநுபவிகளாக இருந்த அத்வைதிகள், பகவானின் ரூபஸௌந்தர்யத்தை 'ஓஹோ' என்று வர்ணித்து ஆனந்தித்திருக்கிருர்கள். அத்வைதிகள் பக்தர்களாயிருப்பதில் குறிப்பாக க்ருஷ்ணரை இஷ்ட தெய்வமாகக் கொண்டவர்களாகவே அதிகம் இருந்திருக்கிருர்கள்.

''க்ருஷ்ண கர்ணாம்ருதம்'' பண்ணிய லீலாசுகர் அத்வைத ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர் தான். மலையாளத்தைச் சேர்ந்தவர் அவர். அங்கே அத்வைத ஸம்ப்ரதாயம் தான் உண்டு. அதோடு கூட அவர் தங்கள் குடும்பத்தைப் பற்றிச் சொல்லிக் கொள்ளும்போது தங்களுடைய குலதெய்வம் சிவபெருமான் என்றும், தாங்கள் சிவ பஞ்சாக்ஷரி ஜபத்தையே உயர் கதியாகக் கொண்டவர்கள் என்றும் சொல்லக் கொள்கிறார். ''ந கலு விசாரணீயம்'' இதைப் பற்றிக் கொஞ்சம் கூட ஸந்தேஹமில்லை என்று உறுதிப்படுத்திச் சொல்கிறார். அப்படியிருந்தும் க்ருஷ்ணனிடமே உயிரை வைத்து, நம்முடைய மனஸைக் கொள்ளை கொள்வதாக அவர் 'கர்ணாம்ருதம்' செய்திருக்கிறார்.

நானூறு நானூற்று ஐம்பது வருஷத்துக்கு முந்தி மதுஸூதன ஸரஸ்வதி என்று ஒரு பெரியவர் இருந்தார். வங்காளத்தைச் சேர்ந்தவர் என்பது பொது அபிப்ராயம். ''அத்வைத ஸித்தி'' என்று ஒரு உத்தம க்ரந்தம் உபகரித்திருக்கிறார். அத்வைத ஸம்ப்ரதாயத்துக்கு வேறு நூல்களும் உதவியிருக்கிறார். இவரே ''பக்தி ரஸாயனம்'' என்றும் ஒரு க்ரந்தம் செய்திருக்கிறார். நிர்குண ப்ரஹ்ம அநுபவமான ஞானத்துக்கும், ஸகுண ப்ரஹ்ம உபாஸனையான பக்திக்கும் முரண்பாடு இல்லை என்று நிலை நாட்டுவதற்காக இந்த நூலை எழுதினார்.

மதுஸூதன ஸரஸ்வதி க்ருஷ்ண பரமாத்மாவின் பரம பக்தர். 'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்' என்று உயர்ந்த சிவபரமான ஸ்தோத்ரம் ஒன்று உண்டு. இந்த 'சிவ மஹிம்ந ஸ்தோத்ரம்' க்ருஷ்ணனையும் ஸ்தோத்ரம் பண்ணுவதாக அதன் வார்த்தைகளை அர்த்தம் பண்ணி அவர் (மதுஸூதனர்) ஒரு வ்யாக்யானம் எழுதியிருக்கிறார். அதாவது அதற்கு சிவபரமாக அர்த்தம் பண்ணியதோடு விஷ்ணுபரமாகவும் அர்த்தம் பண்ணி எழுதியிருக்கிறார்.

'அத்வைதிக்கு பக்தியே இருக்கக்கூடாது; அப்படி இருந்தாலும் அது ஆசார்யாளுக்கு இருந்த மாதிரி ஸகல

தெய்வங்களையும் ஒன்றாகவே நினைக்கிற பக்தியாகத் தான் இருக்க வேண்டும்' என்று புஸ்தகம் படித்தே அத்வைதத்தைப் பற்றித் தெரிந்துக் கொண்டுள்ள நாம் நினைத்தாலும், அத்வைத அநுபவியான மதுஸூதன ஸரஸ்வதி க்ருஷ்ண பரமாத்மா என்ற ரூபத்திலே விசேஷ பக்தி வைத்திருந்தார்.

உடுபியில் க்ருஷ்ணனை ப்ரதிஷ்டை பண்ணினவர் மத்வாசார்யார். அவருடைய ஸித்தாந்தத்தை வலியுறுத்திச் சொல்லி, (சங்கர) ஆசார்யாளின் அத்வைதத்தை வன்மையாகக் கண்டித்தவர்களுள் வ்யாஸதீர்த்தர் முக்யமானவர். வ்யாஸதீர்த்தருடைய ஆக்ஷேபணைகளுக்கு எதிராகப் 'பாயின்ட்'களை கொடுத்தே மதுஸூதன ஸரஸ்வதி பரம அத்வைதமான நூல்களை எழுதினார். நிர்குண ப்ரஹ்மாநுபவத்தை நிலைநாட்டிய இவரே, குழந்தைக் கண்ணன் விழித்தெழுந்தவுடன் கொட்டாவி விட்டுக்கொண்டு சோம்பல் முறித்ததை நெஞ்சுருகிப் பாடியிருக்கிறார். ''ஆநந்த மந்தாகிநி ஸ்தோத்ரம்'' என்று க்ருஷ்ணர் மேல் நூற்றுக்கு மேல் ச்லோகம் செய்து குணநுபவ ஆனந்தத்தைக் கொட்டியிருக்கிறார். 'அத்வைத தத்வமாவது, த்வைத தத்வமாவது ?' என்கிற மாதிரி ஒரு இடத்தில், ''எனக்கு க்ருஷ்ணனைத் தவிர வேறு ஒரு தத்வமும் தெரியவில்லை''— க்ருஷ்ணாத் பரம் கிமபி தத்வம் அஹம் ந ஜாநே என்று அவர் சொல்லியிருக்கிறார்.

த்யாநாப்யாஸ என்று ஆரம்பிக்கிற ஒரு ச்லோகத்தில், ''யோகிகள் மனஸை அடக்கி, உள்ளுக்குள்ளே நிர்குணமாக, நிஷ்க்ரியமாக (கார்யம் இல்லாததாக) உள்ள ஏதோ ஒரு ஜ்யோதிஸை (ஜோதியை)ப் பார்க்கிறார்களென்றால் நன்றாகப் பார்த்துவிட்டுப் போகட்டும் ! நம்மால் அப்படி த்யான அப்யாஸம் பண்ணி, மனஸை அடக்கி ஜ்யோதி தர்சனம் செய்ய முடியவில்லையே என்று அழவேண்டாம். அந்த ஜ்யோதி நமக்கு வேண்டாம். அதே ஜ்யோதி நல்ல நீல ஒளியாக இந்த யமுனா நதிக்கரையில் ஓடி விளையாடுகிறதல்லவா ? (க்ருஷ்ண பரமாத்மாவைத் தான் சொல்கிறார்.) இதையே நாம் பார்த்துக் கொண்டிருப்போம் !

இது நம் கண்களுக்கு ஆனந்தமூட்டுவதாக, சிரஞ்ஜீவியாக இருந்து கொண்டிருக்கட்டும்'' என்கிறார். (இந்த ஸ்தோத்திரம் இந்த மஞ்சரியில் இடம் பெறுகிறது.)

எல்லாவற்றையும் விட்டு விட்டுப் பரமாத்மாவைப் பிடித்த பிறகு, 'எல்லாவற்றிலும் அந்தப் பரமாத்மாதான் இருக்கிறது; எல்லாம் அந்தப் பரமாத்மாவில் தான் இருக்கிறது; எல்லாமாகவும் அந்தப் பரமாத்மாவேதான் இருக்கிறது' என்று அநுபவ பூர்வமாகத் தெரிந்து விடுவதால் எதையும் விட வேண்டிய அவச்யம் இருப்பதில்லை. இந்த நிலையில் தான் அத்வைதிகள் ஸகுண ப்ரஹ்மத்தை ஸ்தோத்ரம் செய்வது. ''வாஸ்தவத்தில் பிரிவு இல்லையே ! பிரிவு மாதிரி இருப்பது விளையாட்டுத் தானே ? நாமும் தான் பக்தனைப் பிரிந்திருந்து ஸகுணத்தை ரஸிக்கலாமே ! ஸமுத்ரமும் அலையும் மாதிரி ஏகத்திலேயே பிரிந்த மாதிரி இருக்கலாமே ! என்று இருக்கிறார்கள்.

த்வைத, விசிஷ்டாத்வைத, அத்வைத வித்யாஸங்களை நினைக்காமல் பக்தி பரவசத்தில் எப்படியெப்படி பாவம் வருகிறதோ அப்படியெல்லாம் ஆசார்யாள் இந்த ஸ்தோத்ரத்தைப் (ஷட்பதீ ஸ்தோத்ரத்தை)ப் பண்ணிக் கொண்டு போயிருக்கிறார் என்று நடு நடுவே தெரிந்தது அல்லவா ? ஸ்வச்சமான அத்வைதம் என்று பார்த்தால் அதிலே சேராத ஸகுண ப்ரஹ்ம வர்ணனை; ஸமுத்ரத்துக்கு அலை அடக்கமானதே என்பது போல ஈச்வரனுக்கு ஜீவன் அடங்கினவன் என்கிற தத்வம் ஆகியவற்றை இந்த ஸ்தோத்திரத்தில் ஆசார்யாள் சொல்லியிருப்பதைப் பார்த்தோம். முடிக்கிற போதும் அத்வைதத்துக்கு முக்யமான ஞான மார்க்கத்தைச் சொல்லாமல், பக்திக்கு ப்ரதானமாக இருக்கிற சரணாகதியைத் தான் சொல்லியிருக்கிறார். நாராயண கருணாமய சரணம் கரவாணி தாவகௌ சரணௌ. ப்ரஹ்ம பாவனையும் சரணாகதியும் ஒன்றே.

பிற்காலத்தில் ராமாநுஜர் இந்த சரணாகதியைத் தான் முக்யமான உபாயமாக வைத்து விசிஷ்டாத்வைத மதத்தை

உருவாக்கினார். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முக்யமானவை அஷ்டாக்ஷரம், த்வயம் என்ற இரு மந்த்ரங்களும், கீதையின் சரம ச்லோகமான 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' ச்லோகமும், விபீஷண சரணாகதியின் போது ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி தம்முடைய சரணாகத ரக்ஷக வ்ரதத்தைச் சொல்கிற ராமாயண ச்லோகமும் ஆகும்.

'தானே ப்ரஹ்மம்' என்கிற ப்ரஹ்மபாவனை ஞான மார்க்கத்துக்கு மையமாக இருக்கிற மாதிரி, 'தான் ஒன்றுமே இல்லை' என்று பகவானிடம் சரணாகதி செய்து கிடப்பது பக்தி மார்க்கத்துக்கு மையமாக இருக்கிறது. இந்த இரண்டும் ஒன்றே தான்.

'அதெப்படி ? ஒன்றுக்கொன்று மலைக்கும் மடுவுக்குமாக அல்லவா இருக்கிறது ?' என்று மேலெழுந்தவாரியாகப் பார்க்கிற போது தோன்றும். ஆழ்ந்து பார்த்தால் இரண்டும் ஒன்று தான். 'தானே ப்ரஹ்மம்' என்கிற போது சொல்கிற 'தான்' வேறு; 'தான் ஒன்றுமே இல்லை' என்கிற போது சொல்கிற 'தான்' வேறு ! தானே ப்ரஹ்மம் என்று அத்வைதி சொல்கிறபோது தன்னுடைய சரீரம், இந்த்ரியம், புத்தி, மனஸ் இந்த எதுவும் நிஜமான தான் இல்லை என்று தள்ளி விட்டு, மிஞ்சி நிற்கிற ஆத்மாவைத் தான் ப்ரஹ்மம் என்கிறான். 'ஸாதாரணமாக எந்த ஜீவாத்மாவும் அஞ்ஞானத்தினால் "தானாக" நினைக்கும் இந்த சரீரம், இந்த்ரியம் புத்தி, மனஸ் இதுகளிலிருந்தெல்லாம் நாம் விடுபட வேண்டும். இவை இழுத்துக் கொண்டு போகிறபடி ஓடாமல் இவற்றை இறைவனின் பொற்பாத கமலங்களில் ஒன்றுமேயில்லை என்கிற மாதிரி கிடத்திவிட வேண்டும்', என்கிற அர்த்தத்தில் தான் 'தான் ஒன்றுமேயில்லை' என்று பக்தி மார்க்கக்காரன் சரணாகதி பண்ணுகிறான். அத்வைதி "தானாக"ச் சொல்லும் ஆத்மாவுக்கு அந்யமாக அவன் தள்ளுவதையே த்வைத, விசிஷ்டாத்வைதிகள் "தான்" என்று வைத்து பகவானின் பாதத்தில் தள்ளுகிறார்கள் ! ஆகையால் இரண்டும் ஒன்று தான். அஹங்காரம் (ego) போக வேண்டும் என்பது தான் இரண்டு மார்க்கத்துக்கும் பொதுவான லக்ஷ்யம்.

அத்வைத பாஷ்யங்களிலும் ப்ரகரண க்ரந்தங்களிலும் ஞான மார்க்கத்தைச் சொன்ன ஆசார்யாள் இங்கே பக்தராக இருந்து, அதே லக்ஷ்யத்துக்கு சரணுகதியை வழியாகச் சொல்லியிருக்கிருர்; நாராயண கருணுமய சரணம் கரவாணி தாவகௌ சரணௌ உன் இணையடிகளில் சரணுகதி செய்கிறேன்'' என்கிருர். கருணுமய என்றதால் கருணைக் கடலான பகவான் சரணுகதனை நிச்சயம் ரக்ஷிப்பான் என்று உணர்த்துகிருர். இந்த ஷட்பதீ ஸ்தோத்திரமும் இதில் இடம் பெறுகிறது. முதல் ச்லோகத்தில் 'விஷ்ணோ' என்று ஆரம்பித்து விட்டு, ஆருவது ச்லோகத்தில் 'தாமோதர' என்று க்ருஷ்ணுவதாரத்தைச் சொல்லி அழைத்தவர், இங்கு 'நாராயண' என்கிருர். மதத்தின் பெயரைப் பார்க்கும் போது 'விஷ்ணு'வின் பெயரை வைத்து அது 'வைஷ்ணவம்' எனப்பட்டாலும், அதற்கு முக்யமான அஷ்டாக்ஷரீ மந்த்ரத்தில் 'நாராயண' நாமம் தான் வருகிறது. ''கண்டு கொண்டேன் நாராயணு என்னும் நாமம்'' என்று ஆழ்வாரும் பாடியிருக்கிருர். ஆசார்யாளே தமது அத்வைத பாஷ்யங்களில் ஸகுண ப்ரஹ்மத்தைச் சொல்லும் போது நாராயணன் என்றே குறிப்பிட்டிருக்கிருர். ஸந்யாஸிகளுக்கு யார் நமஸ்காரம் பண்ணிஞலும் அவர்கள் ''நாராயண நாராயண'' என்றே ஆசீர்வதிக்கணுமென்று அவர் ஏற்பாடு பண்ணியிருக்கிருர்.

இங்கே ஆசார்யாள் 'நாராயணனின் சரணத்தை நான் சரண் அடைகிறேன்' என்கிருர் அல்லவா? இதே அர்த்தத்தில் தான், ஏறக்குறைய இதே வார்த்தைகளிலேயே வைஷ்ணவர்களின் த்வய மந்த்ரம் இருக்கிறது.

இந்த மாதிரி அத்வைத, விசிஷ்டாத்வைத ஒற்றுமைகளைப் பார்க்கிற போது ரொம்பவும் ஸந்தோஷமாயிருக்கிறது.

*(தெய்வத்தின் குரல் - 1, 4 பாகங்களிலிருந்து நன்றி - ஸ்ரீ ரா.கணபதி, வானதி பதிப்பகம்.*

# विषयानुक्रमणिका

## कवचरक्षादिस्तोत्राणि

## विष्णुस्तोत्राणि



ஸீதாஸமேத

ஸ்ரீ ராமசந்த்ரமூர்த்திக்கு

ஸமர்ப்பணம்

ओं नमो नारायणाय

# श्रीविष्णुस्तुतिमञ्जरी

## द्वितीयो भागः

श्री गुरुभ्यो नमः

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम्।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥ १

दयमानदीर्घनयना देशिकरूपेण दर्शिताभ्युदया।
वामकरनिहितदण्डा भाति पुरः सा गुरोर्मूर्तिः ॥ २

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काऽप्यन्यतमिका।
मदाराध्य श्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे धीमार्गे नटति मम देवी करुणया ॥ ३

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम्।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥ ४

अपारकरुणासिन्धुं ज्ञानदं शान्तरूपिणम्।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणमामि मुदाऽन्वहम् ॥ ५

परित्यज्य मौनं वटाधःस्थितिं च
व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम्।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे
नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥ ६

नमामि शङ्करान्वाख्यविजयेन्द्रसरस्वतीम्।
श्रीगुरुं शिष्टमार्गानुनेतारं सन्मतिप्रदम् ॥ ७

श्री गुरुभ्यो नमः ।

प्रार्थना

शुक्लांबरधरो विष्णुः शशिवर्णश्चतुर्भुजः ।
प्रसन्नवदनः पायात् सर्वविघ्नोपशामकः ।।

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युः तं नमामि गजाननम् ।।

यस्य द्विरदवक्त्राद्याः पारिषद्याः परः शतम् ।
विघ्नं निघ्नन्ति सततं विष्वक्सेनं तमाश्रये ।।

ओं नमो गजवक्त्राद्यैः पारिषद्यैः प्रशासते ।
श्रीरङ्गराजसेनान्ये सूत्रवत्या समेयुषे ।।

श्रीरङ्ग चन्द्रमसमिन्दिरया विहर्तुं
विन्यस्य विश्वचिदचिन्नयनाधिकारम् ।
यो निर्वहत्यनिशमङ्गुलिमुद्रयैव
सेनान्यमन्यविमुखाः तमशिश्रियाम ।।

सच्चिदानन्दरूपाय कृष्णायाक्लिष्टकारिणे ।
नमो वेदान्तवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ।।

कृष्णद्वैपायनं व्यासं सर्वभूतहिते रतम् ।
वेदाब्जभास्करं वन्दे शमादिनिलयं मुनिम् ।।

सहस्रमूर्तेः पुरुषोत्तमस्य सहस्रनेत्राननपादबाहोः ।
सहस्रनाम्नां स्तवनं प्रशस्तं निगद्यते जन्मजरादिशान्त्यै ।।

ध्यानं तपः सपर्या नामस्मरणं गुणानुभव इत्थम् ।
संपन्ना सर्वा मे भगवत्सेवा गुरोः कृपया ।।

# श्रीगणेशदशोत्तरशतनामावलिः

ओं विघ्नेशाय नमः । विश्ववरदाय । विश्वचक्षुषे । जगत्प्रभवे । हिरण्यरूपाय । सर्वात्मने । ज्ञानरूपाय । जगन्मयाय । ऊर्ध्वरेतसे । महाबाहवे । अमेयाय । अमितविक्रमाय । वेदवेद्याय । महाकालाय । विद्यानिधये । अनामयाय । सर्वज्ञाय । सर्वगाय । शांताय । गजास्याय नमः ।। २०

ओं चित्तेश्वराय नमः । विगतज्वराय । विश्वमूर्तये । अमेयात्मने । विश्वाधाराय । सनातनाय । सामगाय । प्रियाय । मंत्रिणे । सत्वाधाराय । सुराधीशाय । समस्तसाक्षिणे । निर्द्वंद्वाय । निर्लोकाय । अमोघविक्रमाय । निर्मलाय । पुण्याय । कामदाय । कांतिदाय । कामरूपिणे नमः ।। ४०

ओं कामपोषिणे नमः । कमलाक्षाय । गजाननाय । सुमुखाय । शर्मदाय । मूषकाधिपवाहनाय । शुद्धाय । दीर्घतुंडाय । श्रीपतये । अनंताय । मोहवर्जिताय । वक्रतुंडाय । शूर्पकर्णाय । परमाय । योगीशाय । योगधाम्ने । उमासुताय । आपद्धंत्रे । एकदंताय । महाग्रीवाय नमः ।। ६०

ओं शरण्याय नमः । सिद्धसेनाय । सिद्धवेदाय । करुणाय । सिद्धाय । भगवते । अव्यग्राय । विकटाय । कपिलाय । ढुंढिराजाय । उग्राय । भीमोदराय । शुभाय । गणाध्यक्षाय । गणेशाय । गणाराध्याय । गणनायकाय । ज्योतिःस्वरूपाय । भूतात्मने । धूम्रकेतवे नमः ।। ८०

ओं अनुकूलाय नमः । कुमारगुरवे । आनंदाय । हेरंबाय । वेदस्तुताय । नागयज्ञोपवीतिने । दुर्धर्षाय । बालदूर्वांकुरप्रियाय । भालचंद्राय । विश्वधात्रे । शिवपुत्राय । विनायकाय । लीलासेविताय । पूर्णाय । परमसुंदराय । विघ्नांधकाराय । सिंदूरवदनाय । नित्याय । विभवे । प्रथमपूजिताय नमः ॥ १००

ओं दिव्यपादाब्जाय नमः । भक्तमंदाराय । महाशूराय । रत्नसिंहासनाय । मणिकुंडलमंडिताय । भक्तकल्याणाय । अमेयाय । कल्याणगुरवे । सहस्रशीर्ष्णे । महागणपतये नमः ॥ ११० ॥

## श्री विष्णुसहस्रनामस्तोत्रम्

(पाद्ममहापुराणे उत्तर खण्डे)
(वासुदेवसहस्रनामस्तोत्रमित्यपि नाम)
(ब्रह्मनारद - पार्वतीशिवसंवादात्मकम् ।)

अस्य श्रीविष्णोर्नामसहस्रस्तोत्रस्य, श्रीमहादेव ऋषिः । अनुष्टुप् छन्दः । श्रीविष्णुः परमात्मा देवता । ह्रीं बीजं, श्रीं शक्तिः, क्लीं कीलकं, धर्मार्थकाममोक्षप्राप्त्यर्थे नामपारायणे विनियोगः । श्रीवासुदेवः परं ब्रह्म इति अंगुष्ठाभ्यां नमः । मूलप्रकृतिरिति तर्जनीभ्यां नमः । महावराह इति मध्यमाभ्यां नमः । सूर्यवंशध्वज इति अनामिकाभ्यां नमः । ब्रह्मादिकाम्यललितजगदाश्चर्यशैशव इति कनिष्ठिकाभ्यां नमः । यथार्थखण्डिताशेष इति करतल करपृष्ठाभ्यां नमः । एवं हृदयादिन्यासः । ओं नमो नारायणायेति दिग्बन्धः । ध्यानं-

(१) ओं नमो नारायणाय पुरुषाय महात्मने।
विशुद्धसत्त्वधिष्ण्याय महाहंसाय धीमहि॥

लमित्यादि पञ्चपूजा। ओं नमो नारायणाय इति, (२) ओं ह्रां ह्रीं ह्रूं ह्रैं ह्रौं ह्रः - क्लीं कृष्णाय विष्णवे ह्रीं रामाय धीमहि । तन्नो देवः प्रचोदयात् इति, क्ष्रौं नृसिंहाय विद्महे श्रीं श्रीकण्ठाय धीमहि। तन्नो विष्णुः प्रचोदयात् इति, ओं वासुदेवाय विद्महे देवकीसुताय धीमहि । तन्नः कृष्णः प्रचोदयात्, इति, ओं ह्रां ह्रीं ह्रूं ह्रैं ह्रौं ह्रः । क्लीं कृष्णाय गोविन्दाय गोपीजनवल्लभाय स्वाहा इति वा मन्त्रं यथोचितं जप्त्वा ध्यायेत्।

विष्णुं भास्वत्किरीटांगदवलयगलाकल्प हारोदरांघ्रिं
श्रीभूषं श्रीसुवक्षोमणि मकरमहाकुण्डलं मण्डिताशम्।
हस्तोद्यच्चक्र शंखांबुजगलममलं पीतकौशेयवासं
विद्योतद्भासमुद्यद्दिनकरसदृशं पद्मसंस्थं नमामि॥

ओं वासुदेवः परं ब्रह्म परमात्मा परात्परः।
परं धाम परं ज्योतिः परं तत्त्वं परं पदम्॥ १

परः शिवः परो ध्येयः परं ज्ञानं परा गतिः।
परमार्थः परं श्रेयः परानन्दः परोदयः॥ २

परोऽव्यक्तात्परं व्योम परमर्द्धिः परेश्वरः।
निरामयो निर्विकारो निर्विकल्पो निराश्रयः॥ ३

निरञ्जनो निरातङ्को निर्लेपो निरवग्रहः।
निर्गुणो निष्कलोऽनन्तोऽभयोऽचिन्त्यो बलोचितः॥ ४

अतीन्द्रियोऽमितोऽपारोऽनीशोऽनीहोऽव्ययोऽक्षयः।
सर्वज्ञः सर्वगः सर्वः सर्वदः सर्वभावनः॥ ५

सर्वशास्ता सर्वसाक्षी पूज्यः सर्वस्य सर्वदृक्।
सर्वशक्तिः सर्वसारः सर्वात्मा सर्वतोमुखः ।। ६

सर्वावासः सर्वरूपः सर्वादिः सर्वदुःखहा।
सर्वार्थिः सर्वतोभद्रः सर्वकारणकारणम्।। ७

सर्वातिशायितः सर्वाध्यक्षः सर्वसुरेश्वरः।
षड्विंशको महाविष्णुर्महागुह्यो महाविभुः ।। ८

नित्योदितो नित्ययुक्तो नित्यानन्दः सनातनः।
मायापतिर्योगपतिः कैवल्यपतिरात्मभूः ।। ९

जन्ममृत्युजरातीतः कालातीतो भवातिगः।
पूर्णः सत्यः शुद्धबुद्धस्वरूपो नित्यचिन्मयः ।। १०

योगप्रियो योगगम्यो भवबन्धैकमोचकः।
पुराण पुरुषः प्रत्यक्चैतन्यं पुरुषोत्तमः ।। ११

वेदान्तवेद्यो दुर्ज्ञेयः तापत्रयविवर्जितः।
ब्रह्मविद्याश्रयोऽनाद्यः स्वप्रकाशः स्वयं प्रभुः ।। १२

सर्वोपेय उदासीनः प्रणवः सर्वतः समः।
सर्वानवद्यो दुष्प्राप्यस्तुरीयस्तमसः परः ।। १३

कूटस्थः सर्वसंश्लिष्टो वाङ्मनोगोचरातिगः।
संकर्षणः सर्वहरः कालः सर्वभयंकरः ।। १४

अनुल्लंघ्यश्चित्रगतिर्महारुद्रो दुरासदः।
मूलप्रकृतिरानन्दः प्रद्युम्नो विश्वमोहनः ।। १५

महामायो विश्वबीजं परशक्तिः सुखैकभूः।
सर्वकाम्योऽनन्तलीलः सर्वभूतवशंकरः ।। १६

अनिरुद्धः सर्वजीवो हृषीकेशो मनःपतिः ।
निरुपाधिप्रियो हंसोऽक्षरः सर्वनियोजकः ।। १७

ब्रह्म प्राणेश्वरः सर्वभूतभृद्देहनायकः ।
क्षेत्रज्ञः प्रकृतिः स्वामी पुरुषो विश्वसूत्रधृक् ।। १८

अन्तर्यामी त्रिधामाऽन्तःसाक्षी त्रिगुण ईश्वरः ।
योगिगम्यः पद्मनाभः शेषशायी श्रियः पतिः ।। १९

श्रीसदोपास्यपादाब्जो नित्यश्रीः श्रीनिकेतनः ।
नित्यं वक्षःस्थलस्थश्रीः श्रीनिधिः श्रीधरो हरिः ।। २०

वश्यश्रीर्निश्चलः श्रीदो विष्णुः क्षीराब्धिमन्दिरः ।
कौस्तुभोद्भासितोरस्को माधवो जगदार्तिहा ।। २१

श्रीवत्सवक्षा निःसीमकल्याणगुणभाजनम् ।
पीतांबरो जगन्नाथो जगत्त्राता जगत्पिता ।। २२

जगद्बन्धुर्जगत्स्रष्टा जगद्धाता जगन्निधिः ।
जगदेकस्फुरद्वीर्योऽनहंवादी जगन्मयः ।। २३

सर्वाश्चर्यमयः सर्वसिद्धार्थः सर्वरञ्जितः ।
सर्वामोघोद्यमो ब्रह्मरुद्राद्युत्कृष्ट चेतनः ।। २४

शंभोः पितामहो ब्रह्मपिता शक्राद्यधीश्वरः ।
सर्वदेवप्रियः सर्वदेवमूर्तिरनुत्तमः ।। २५

सर्वदेवैकशरणं सर्वदेवैकदैवतम् ।
यज्ञभुग्यज्ञफलदो यज्ञेशो यज्ञभावनः ।। २६

यज्ञत्राता यज्ञपुमान् वनमाली द्विजप्रियः ।
द्विजैकमानदो विप्रकुलदेवोऽसुरान्तकः ।। २७

त्वं मां निन्दति बिम्बविद्रुमलताश्रीतस्करोऽयं श्रुतौ
एवं जल्पितुमागते किसलये स्थानेऽधरो रागवान् ।। १९

19. ராதையின் கணவரே ! சிவந்த துளிர் ஒன்று உம் காது அருகில் வந்தது. ''உமது திருவடித் தாமரையின் ஒளியின் துளியைப் பெற்றுச் செந்துளிரானேன். அதனால் கற்பக மரத்தின் உச்சியில் ஆபரணமானேன். கோவைப் பழம், பவழக் கொடி இவற்றின் அழகைத் திருடிய இவன் (இந்த உதடு) என்னைப் பழிக்கிறான்'' என்று உம்மிடம் சொல்ல வந்ததைக் கண்டு உதடு சிவந்தது. இது உசிதம் தானே !

दृग्भङ्गीः स्फुरदिन्द्रनीलनिचयः पक्ष्माणि कस्तूरिका
जिह्वेयं तव पद्मरागनिकरः शोणाधरो विद्रुमः ।
दन्ताली गजमौक्तिकानि मधुजिन्मन्दस्मितं चन्दनं
पण्यस्थानमिदं मनोजवणिजो जाने तवास्ते मुखम् ।। २०

20. மன்மதன் என்ற வணிகனுக்கு உமது முகம் விரித்த கடையாயிற்று. விற்பனைக்குரிய பொருள் - பார்வை வீச்சுகள் - ஒளிமிக்க இந்திர நீலக்கல் குவியல், இமைகள் - கஸ்தூரி, இந்த நாக்கு - பத்மராக ரத்னக் குவியல், சிவந்த உதடு - பவழம். பல் வரிசை - யானைமத் தகத்தில் கிடைக்கிற முத்துக்கள். மதுவை வென்ற உமது மென் சிரிப்பு - சந்தனம்.

या रक्ता वदनेन्दुमण्डलगतं माधुर्यमुच्चैस्तरां
आस्वाद्येह सरस्वती स्थितवती सत्यं रसज्ञेव सा ।
यत्सप्तस्वरमण्डलानि बहुधा त्वत्कण्ठदेशाद्बहिः
प्रादुर्भूय मुदं श्रुतौ सुकृतिनां यच्छन्ति नन्दात्मज ।। २१

21. நந்தனின் புதல்வரே ! சந்திரன் போன்றழகிய உமது முக மண்டலத்தின் இனிமையை நன்கு பருகிச் சிவந்த ஸரஸ்வதி நாக்காகியுள்ளாள். இது ஸத்யம். ஏழு ஸ்வர வரிசைகளும் உமது தொண்டையிலிருந்து வெளிப்பட்டு புண்யம் செய்தவர்களின் காதில் இனிய ஆனந்தத்தைத் தருகின்றன.

साम्यं त्वद्वदनस्य वाञ्छति विधुर्दोषाकरो यद्यपि
क्षिप्तोऽप्यम्बुनि पद्मरागशकलो दन्तच्छदं स्पर्धते।
दृष्ट्वैवं कुशलः कुशेशयभवः क्लेशाद्यशोदात्मज
व्यक्तं त्वच्चिबुकं तथैव विदधे यत्तुल्यता न क्वचित्॥ २२

22. யசோதையின் புதல்வனே! இரவை அமைக்கிற (குறைகளின் இருப்பிடமான) சந்திரன் உமது முகத்துக்கு ஒப்பாயிருப்பதை விரும்புகிறான். நீரில் போடப்பட்டாலும் பத்மராகத் துண்டு எயிறுகளுடன் போட்டியிடுகிறது. இதனைக் கண்ட செயல்வீரரான பிரும்மா கஷ்டப்பட்டு உமது தாவடையை ஈடிணையற்றதாக அமைத்தார்.

माधुर्यं न लवं मधूनि दधति द्राक्षा तु साक्षाद्विषं
पीयूषान्यपि यान्ति निम्बसमतां के दुग्धखण्डादयः।
प्रालेयानि न शीतलानि सरसं नो कोकिलाकूजितं
गोधुग्वंशवतंस जातु जयति त्वद्वाग्विलासोदये॥ २३

23. இடையர்களின் வம்சச் செம்மலே! உன் விளையாட்டான பேச்சு வெளிப்பட்டதும் தேனில் இனிப்பில்லை. திராக்ஷை விஷமாயிற்று. அமுதும் வேம்பாகிக் கசந்தது. பாற்கட்டி முதலியவை எம்மாத்திரம்? பனிக்கட்டியில் குளிர்ச்சி இல்லை. குயிலின் கூவுதல் ருசிக்கவில்லை.

वेदाश्चन्द्रमसं वदन्ति भवतः स्वान्तं कथं तद्वृथा-
कुर्वन्त्यत्र विवादमात्रकुशला गोविन्द नन्दादयः।
तस्यैवामृतपङ्किलास्तव मुखादाविर्भवन्तो बहि-
र्ध्वान्तं यत्तिरयन्ति हन्त किरणा मन्दस्मितव्याजतः॥ २४

24. கோவிந்த! வேதங்கள் சந்திரனை உமது உள்ளமாகச் சொல்லுகின்றன. அது பற்றி நந்தர் முதலானோர் வீணே விவாதம் புரிகின்றனர். உம் உள்ளத்திலுள்ள சந்திரனின்

கிரணங்கள் உம் வாய் வழியே அமுதத்தால் குழம்பிய புன் சிரிப்பாக வெளி வந்து இருட்டைப் போக்குகின்றனவே.

**சந்திரமா மநஸோ ஜாத:** என வேதம் கூறும். கிருஷ்ணனின் மென் சிரிப்பு, வெள்ளைச் சிரிப்பு, சந்திரனின் கிரணம் போன்று தாபமகற்றும். மென் சிரிப்பைக் கண்டதும் காண்பவர் மனத்தில் கோப-சோக-தாப இருள் அகன்று தெளிவு உண்டாகும்.

**यन्नामस्मरणादपि श्रवणतः प्रक्षीणरागाशयाः**
**यान्ति त्वत्परमं सदाशिवपदं यद्योगिनां दुर्लभम्।**
**तस्याप्याननपङ्कजे तव जयत्युच्चैस्तरां रागिता**
**येनाभीरकुलप्रदीप तदलं ताम्बूलमास्तां मुदे।। २५**

*25. ஆயர் குல விளக்கே ! உம் நாமத்தை நினைத்தாலும் கேட்டாலும் அவர்கள் மனத்திலுள்ள ராகம் (வெளிப்பொருள் பற்று) உடன் நீங்கி, யோகிகளுக்கும் கிட்டாத எப்போதும் மங்களமான பெரு நிலை பெறுவர். அத்தகைய உமது தாமரை போன்ற முகத்திலேயே ராகம் (செம்மை) தெரிகிறதே. அதன் காரணமான தாம்பூலம் எமது ஆனந்தத்திற்காக இருக்கட்டும்.*

**पीयूषद्रवसारसारघमधुद्रोणी त्वदीयाधरा-**
**स्वादायार्कसुतातटे श्रितवती सद्वंशजाता तपः।**
**तत्पुण्यैर्मुरलीमिषेण रसिका माधुर्यमुच्चैस्तरां**
**आस्येन्दोरनुभूय गोकुलपते गीतामृतं मुञ्चति।। २६**

*26. கோகுலத்தைக் காப்பவரே ! அமுதத்தின் ஸாரத்தைத் தேனீ சேமித்துத் தேன் கூட்டில் வைத்தது. நற்குலத்தில் தோன்றிய அந்தத் தேன் கூடு உனது உதட்டைச் சுவைக்க விரும்பி யமுனைக் கரையில் தவமிருந்தது. தவப்புண்யத்தால் அந்த ரஸிகையான தேன் கூடு புல்லாங்குழலாகி உம் சந்திரன் போன்ற முகத்திலிருந்து மிகவும் ருசிமிக்க இனிமையை அனுபவித்து இனிய பாட்டாகிய அமுதத்தை வெளியிடுகிறது.*

साफल्यं श्रुतिसंपदां त्रिजगतां प्रालेयधाराप्रपा
पीयूषद्रवमाधुरी परिभवक्लेशाम्बुधेः शोषणम् ।
ब्रह्मानन्दतिरस्कृतिः कुलवधूधैर्याद्रिवज्राहतिः
कंसध्वंसन शंस किं न भवतो वंशीनिनादोदयः ।। २७

*27. கம்ஸனை அழித்தவரே ! உமது புல்லாங்குழலின் நாதம் வெளிப்பட்டது. அதன் பயனாக வேதத்திலுள்ள செல்வக் குவியல் பயன் பெற்றது. மூவுலகிற்கும் பனிமழையருவி போன்று அமுதத் திரவ இனிப்பு கிட்டியது. அவமதிப்பால் நேர்ந்த துயரக் கடல் வற்றிற்று. பிரும்மானந்தம் கசந்தது. குலப் பெண்டிரின் மன உறுதியாக மலை மீது இடிவிழுந்து அது நொருங்கியது. குழலொலியின் விளைவல்லவா இது ?*

धैर्यं धिक्कुरुते त्रपां विचिनुते कौलं यशः प्रोञ्छति
प्रत्येकं गुरुवर्गगञ्जनशतं विस्मारयत्यञ्जसा ।
साध्वीनाम निराकरोति भवनं भर्तुर्विधत्ते विषं
किं किं नो विदधाति हन्त सुदृशां वंशीनिनादस्तव ।। २८

*28. புல்லாங்குழலின் இனிய ஒலி வெளியாகியது. பெண்களின் உறுதியைக் குலைக்கிறது. வெட்கத்தைத் தேடச் செய்கிறது. குலப் பெருமையைத் துடைத்தெறிகிறது. அவரவரது குடும்பத்து மூத்தோரின் நூற்றுக்கணக்கான கூக்குரலை மறக்கடிக்கிறது. கற்புக்கரசி என்ற பெயரை தவிர்க்கச் செய்கிறது. கணவனின் வீட்டை விஷமாக்குகிறது. அது என்னென்ன செய்யாது ?*

लावण्यैरखिलैस्त्वदास्यमुकुरं निर्माय धाता चिरा-
न्मुष्टिं मारकतं विधाय तदधः कण्ठस्थलव्याजतः ।
ध्यायं ध्यायमशेषवस्तुसुषमाधाराय रेखात्रयं
ब्रूते नास्ति बभूव नो न भविता सौन्दर्यमेतादृशम् ।। २९

29. அழகனைத்தையும் கொண்டு உம் கண்ணாடி போன்ற முகத்தைப் பிரும்மா வெகுநாட்கள் உழைத்துப் படைத்தார். அதனைத் தாங்கக் கழுத்தென்ற பெயரில் மரகத ரத்னத்தாலான முஷ்டியை அமைத்தார். எல்லாப் பொருட்களின் அழகிற்கும் வைப்பிடமாக கழுத்தில் மூன்று மடிப்புகளை (கோடுகளை) அமைத்தார். இத்தகைய அழகு வேறு முன்னரிருந்ததில்லை. இப்போதும் இல்லை. இனி இருக்கப் போதும் இல்லை.

आशानागकरप्रसारिमहसा निःशेषवामभ्रुवां
आशाभिस्त्रिदशेशनिर्भरशुभैः कंसादिनाशश्रिया।
प्रेम्णा नन्दयशोदयोस्तनुजुषां निःसीमभाग्यैर्दृशां
सौभाग्यैर्व्रजसुभ्रुवां व्रजपते किं ते भुजौ निर्मितौ ॥ ३०

30. இடைச்சேரியின் காப்பாளரே! உமது கைகள், எட்டு திக்கஜங்களின் நீண்ட துதிக்கைகளின் வலிவு, அனைத்துயுவதிகளின் எதிர்பார்ப்பு, தேவர்களின் புண்யம், கம்ஸனின் அழிவுக்கான வீரம், நந்த யசோதைகளின் அன்பு, மாந்தரனைவரின் கண்களின் பாக்கியக் குவியல், கோகுலப் பெண்களின் ஸௌபாக்யம் இவையனைத்தையும் கொண்டு அமைக்கப் பெற்றதோ?

कं यस्मादलमभ्युदेति भवतः सर्वाङ्गमेतादृशं
साम्यं वा भजतां कथं जलरुहे सर्वज्ञमध्यस्यतोः।
मत्तर्कः पुनरत्र गोकुलपते त्रैलोक्यलक्ष्मी यत-
स्त्वत्पाण्योरिति तौ वदन्ति कमले सा यत्तदेकालया ॥ ३१

31. கோகுலத்தின் நாதரே! உமது அனைத்து அங்கங்களும் உம் கைகளைக் கொண்டே நிறைவுடன் ஸுகம் பெறுகின்றன. எல்லாமறிந்த உம் மீது இடம் பெற்றுள்ள அவற்றிற்கு இரு தாமரைகள் ஈடாகுமா? லக்ஷ்மி தாமரையிலேயே வசிப்பவளானதால், உம் திருக்கைகளில் மூவுலக லக்ஷ்மியும் இடம் பெற்றுள்ளதால் இரு கைகளையும் இரு தாமரைகளாகக் கூறுகின்றனரோ என்பது என் ஊகம்.

अङ्गुल्यस्तव हस्तयोर्मुरहर प्रायो रसालाङ्कुर-
श्रेणी यत्परितोऽङ्गुलीयकमिषस्निग्धालवालावलिः।
किं वा पञ्चशरप्रचण्डतपसा पञ्चाशुगाः पञ्चतो-
त्तीर्णाः सत्फलिनः पुनर्भवरुचा पुष्णन्ति नेत्रोत्सवान्॥ ३२

*32. முரனை அழித்தவரே! உமது இரு கைகளிலும் உள்ள விரல்கள் ஒட்டு மாமரத்தின் முளைகளின் வரிசை. அவற்றைச் சுற்றி மோதிரங்களாகக் காணப்படுகிற பாத்திகளின் வரிசை. அல்லது மன்மதனின் கடும் தவத்தால் அவனது ஐந்து அம்புகளும் (தாமரை, அசோகப் பூ, மாம் பூ, நவமல்லிகை, நீலோத் பலம்) இயற்கை எய்தாமல் (அழியாமல்) நல்ல பயன் தருபவையாக மறுபடி மறுபடி வளர்கிற நக ஒளியால் கண்களுக்குக் கொண்டாட்டம் தருகின்றன.*

भक्तानुग्रहकातरेण भवता कृत्वा नृसिंहाकृतिं
रागान्धस्य पुरा हिरण्यकशिपोर्वक्षःस्थली पाटिता।
तेनाभूत्तव पाणिपङ्कजयुगे रागः स राधापते
गोपीनां कुचकुङ्कुमैर्द्विगुणितो नाद्यापि विश्राम्यति॥ ३३

*33. ராதையின் மணாளரே! பக்தனுக்கு அருள் புரிவதில் பரபரப்புற்ற உம்மால் ந்ருஸிம்ஹ வடிவம் ஏற்று, ராகத்தால் (பொருளாசையால் - சிவப்பால்) பார்வையிழந்த ஹிரண்ய கசிபுவின் அகன்ற மார்பு பிளக்கப்பட்டது. அதனால் உம் துளிர் போன்ற கைகளில் செந்நிறம் ஒட்டியது. இன்று கோபிகளின் மார்பகத்துக் குங்குமப் பூ லேபத்தால் இருமடங்கானது. இன்னம் அது மாறவில்லை.*

एतौ पञ्चशिरस्त्विषा दशदिशः संभावयन्तौ भृशं
दैत्यप्राणसमीरसंहतियमौ श्यामौ भुजंगोत्तमौ।
तन्मौलिद्युतिशालिनी पुनरियं रत्नावली जृम्भते
यां प्राहुस्तव गोकुलेश नखरश्रेणीं करस्थां जनाः॥ ३४

34. கோகுலத் தலைவரே! இரு கைகளும் இரு ஐந்து தலை நாகங்கள். பத்து திசைகளையும் விரல்களாகிற தலைகளால் ஒளிரச் செய்பவை. அசுரர்களின் மூச்சுக் காற்றை அடக்குபவை. நாகங்களின் தலைகளில் விளங்கும் ரத்தினங்கள் போன்று நகங்களின் வரிசை உள்ளது என மக்கள் கூறுவர்.

दोर्दण्डद्वयबन्धनानि विदधुर्नन्दोपनन्दादय-
स्तद्ग्रन्थित्रुटिशङ्कयाऽतिचकिता गोवर्धनोद्धारणे।
तान्येवाप्रतिमप्रभाणि हरितो विद्योतयन्त्यद्भुतं
विद्वांसस्तव कङ्कणाङ्गदतया गोविन्द यज्जानते ।। ३५

35. கோவிந்த! நந்தர் உபநந்தர் முதலானோர், கோவர்த்தன மலையைத் தூக்கும் போது உம் கைகளுக்கு ரக்ஷை கட்டினர். (மலையைத் தூக்கும் போது கைகளின் விம்மலில்) ரக்ஷைக் கயிறு முடிப்பு அறுந்து விடுமோ என்று பயந்தனர். அவையே இன்று இணையற்ற ஒளியுடன் திக்கின் வெளியெங்கும் ஒளிபடரச் செய்கின்றன. அறிவாளிகள் அவற்றை கங்கணம் என்றும் தோள்வளை என்றும் உணர்கின்றனர்.

शृङ्गारद्रुमसारकण्डनवशात्त्रैलोक्यसीमन्तिनी-
क्रीडामन्दिरमण्डनाय विधिना स्तम्भौ प्रलम्बौ कृतौ।
तन्मध्ये पुनरिन्द्रनीलमणिभिः संपादिता वेदिका
तौ बाहू मधुजिद्वदन्ति भवतो वक्षःस्थलीं तामपि ।। ३६

36. மூவுலகத்து யுவதிகளுக்காக உள்ள விளையாட்டு மாளிகையை அழகுபடுத்த பிரும்மா இரு நீண்ட தூண்களை சிருங்காரமெனும் மரங்களைச் செதுக்கி அமைத்தார். மண்டபத்தின் நடுவே இந்திர நீல ரத்தினங்களால் ஒரு மேடை அமைத்தார். மதுவை வென்றவரே! அந்தத் தூண்களே உம் இரு புஜங்கள். அந்த மேடையே உம் மார்பு எனக் கூறுவர்.

यद्रक्तः कमलाकरं करतलेनालम्बते भास्कर-
स्त्वच्चक्षुर्मुखपाणिपादकमले जातस्ततः शोणिमा।

तन्मित्रं पुनराकलय्य स धृतः कण्ठे त्वया कौस्तुभ-
व्याजेनेति मुकुन्द मादृशि जने तर्कः समुज्जृम्भते ।। ३७

37. முகுந்த ! (உதயத்தில்) சிவந்த ஸூர்யன் தாமரைக் குளத்தை தம் ஒளிக்கதிராகிய கைகளால் தூக்கிப் பிடிக்கிறார். அதனால் உம் கண்கள் முகம் கைகள் கால்கள் இவற்றில் செம்மை படர்ந்தது. அவரை நண்பனாகக் கருதுகிற நீர் அவரை கௌஸ்துபமாகக் கழுத்தில் தரித்தீர். என்னைப் போன்றவரின் ஊகம் இவ்வாறு சொல்லுகிறது.

आलोक्याखिलवेदशास्त्रजलधेस्तत्त्वं यदेकान्ततः
कृत्वा संकलितं स्वकीयनिलये क्षीराब्धिमध्ये धृतम् ।
सर्वार्थप्रतिभासकं व्रजकुलालंकार तत्कौस्तुभ-
व्याजाद्विस्मृतिशङ्कयेव भवता कण्ठे कृतं सांप्रतम् ।। ३८

38. இடையர் குலத்தணியே ! பாற்கடலின் நடுவே தன் இருப்பிடத்தில் தனிமையில் அனைத்து வேத சாஸ்திர தத்துவம் திரட்டி வைக்கப்பட்டது. அனைத்துப் பொருளையும் நினைவுபடுத்துகிற அந்த தத்துவத் திரட்டை கௌஸ்துபமாக்கி இப்போது மறதி நேராதிருக்கக் கழுத்தில் ஏற்கப்பட்டுள்ளதாகக் கருதுகிறேன்.

यात्वा विष्णुपदं समाश्रितवती नक्षत्रमाला स्फुर-
द्दीप्तिर्योग्यमिदं कथं मुररिपो नक्तंदिनं द्योतते ।
आं ज्ञातं दयितं तवाननविधुं यान्तीमिमां यामिनी
रोमश्रेणिमिषात्तलो धृतवती ज्ञात्वा सपत्नीमियम् ।। ३९

39. முரனின் எதிரியே ! பிரும்மாண்டத்தின் உச்சியில் விஷ்ணு பதம் உள்ளது. ஒளி மிக்க நக்ஷத்ர மாலை அதனைச் சென்றடைந்து இரவும் பகலும் ஒளிர்கிறது. அது தக்கதே. அதே நக்ஷத்திர மாலை உம்முகமாகிய சந்திரனை நெருங்குகிறது. இதனைக் கண்ட இரவு உரோம வரிசையாகி நக்ஷத்ர மாலையை சக்களத்தியாக மதித்துத் தடுக்கிறது. (நக்ஷத்ரமாலை 27

நக்ஷத்திரங்களின் வரிசை. 27 முத்துக்களாலான மாலை என்ற பொருள் உண்டு. சந்திரனை நக்ஷத்திரங்கள் கணவனாக எண்ணி நெருங்கும் போது இரவும் சக்களத்தி போல் சந்திரனை அணுகும். நக்ஷத்திர மாலை என்ற முத்துமாலை கருத்த மார்பின் மேல் படர்ந்த ரோம வரிசையுடன் அழகாகக் காட்சி தருகிறது).

यः पाशेन यशोदया नियमितो येनापराधं विना
तस्मिन्नस्ति वलिस्त्रिधा मयि पुरः सोऽयं बलिध्वंसिनः ।
एवं चिन्तनतत्परः कृशतरस्त्वन्मध्यदेशो भृशं
याशोदेय स शोकमुद्गिरति ते रोमावलिव्याजतः ॥ ४०

40. யசோதையின் புதல்வரே ! ஒரு தவறு மிழைக்காதிருந்தும் யசோதையின் கயிற்றால் கட்டுப்பட்டதனால் வயிற்றில் மூன்று வலி(மடிப்பு)கள் பலியை அழித்தவன் முன் நிற்கின்றன. (व.ब என்ற எழுத்துக்கிடையே வேற்றுமையில்லை. वलिः बलिः) என்று கவலைப்பட்டு இடைப்பகுதி மிகவும் இளைத்து விட்டது. அது தன் சோகத்தை உரோம வரிசையாக வெளிப்படுத்துகிறது.

सृष्ट्यादौ प्रकृतिर्गुणत्रयमयी या स्वीकृताऽऽसीत्त्वया
सेयं सत्त्वमयी सुखाय जगतां हाराकृतिस्ते भुवि ।
गुञ्जादाममिषान्मुकुन्द दधती रागाद्रजोविग्रहं
नाभीसीम्नि तमोमयी पुनरियं रोमावली राजते ॥ ४१

41. முகுந்தரே ! படைப்பின் தொடக்கத்தில் பிரக்ருதி (இயற்கை) முக்குணங்கள் கொண்டதாக உம்மால் ஏற்கப்பெற்றது. பூமியில் அந்த ஸத்வ குணம் கொண்ட இயற்கை உலகம் இனிது வாழ ஹாரமாக (உம் மார்பில்) துலங்குகிறது. ரஜோகுணப் பிரகிருதி உம்மிடமுள்ள காதலால் குந்துமணிமாலையானது. தமோகுணப் பிரகிருதி தொப்புள் பகுதியில் உரோம வரிசையாக விளங்குகிறது.

सौन्दर्यामृतवारिधौ स्मरमहायादःसमारम्भतः
संभूता भ्रमिरम्भसां सुललिता जातास्ततो वीचयः ।
तां जाने स्फुरदिन्द्रनीलघटितश्रीसंपुटार्धद्युतिं
त्वन्नाभीमपि तां वलित्रयमिति श्यामाभिरामाकृते ।। ४२

*42. மேக வண்ணத்தில் அழகியவரே! அழகெனும் அமுதக் கடலில் மன்மதன் எனும் பெரும் நீர்வாழ் பிராணியின் பரபரப்பால் நீரின் நடுவே சுழல்கள் ஏற்பட்டன. அதிலிருந்து ஒய்யாரம் மிக்க அலைகள் எழுந்தன. பளபளக்கிற இந்திர நீலக் கற்கள் பதிந்த அணி கொண்ட உம் தொப்புளும் மூன்று மடிப்புகளுமே அவை.*

नीलाम्भोरुहवल्लिरुल्लसति ते नाभीसरस्यां ध्रुवं
यत् श्रीवत्समिषाद्बिभर्ति कुसुमं नालं च रोमावली ।
यं वा वक्षसि कौस्तुभं बुधजना जानन्ति नन्दात्मज
प्रायः सोऽप्यनुराग एव भविता त्रैलोक्यवामभ्रुवाम् ।। ४३

*43. நந்தரின் புதல்வரே! உம் தொப்புள் என்ற ஓடையில் நீலத் தாமரைக் கொடி துலங்குகிறது. அது ஸ்ரீ வத்ஸம் எனும் தாமரையைத் தாங்கி நிற்கிறது. அதன் கொடியே உரோமவரிசை. அறிவாளிகள் எதனை கௌஸ்துபம் என மதிக்கின்றனரோ, அது மூவுலகத்து யுவதிகளின் பேரன்பாகவே இருக்கக் கூடும்.*

नीरूपोऽपि घनद्युतिर्मुनिमनोमात्रैकपात्रीकृतो-
ऽप्याभीरीगणसंगतः सुखघनोऽप्यानन्दितो बन्धकैः ।
ज्ञानात्माऽप्यतिमुग्धतामुपगतो वामभ्रुवां विभ्रमैः
इत्थं ते त्रिवलीमिषान्मुरहर त्र्यस्ति चित्रार्पिता ।। ४४

*44. முரனின் எதிரியே! உருவ மற்றவரே மேகவண்ணர். முனிவர் மனத்தில் மட்டும் தங்குபவரே இடைச்சேரிப் பெண்களுடன் உறவாடுபவர். ஆனந்தம் நிறைந்தவரே*

உறவினரால் மகிழ்விக்கப்படுகிறார். பேரறிவே வடிவானவர் யுவதிகளின் விளையாட்டில் கிரங்கி நிற்பவர். மூன்று வேதங்களும் மடிப்புகளாகி சித்திரத்தில் உள்ள பாவை போல் உணர் விழந்து காணப்படுகின்றன.

देव्यः पल्लवसंपदा विदधते सौभाग्यलक्ष्मीं श्रुतौ
स्वच्छन्दं सुमनःफलानि विबुधा विन्दन्ति ते सेवया।
वेदेनापि निगद्यते मुरहर त्वं भक्तकल्पद्रुमः
प्रायः कल्पलता ततः श्रितवती त्वां वैजयन्तीच्छलात्॥ ४५

45. முரனை அழித்தவரே! தேவருலகத்துப் பெண்கள் ஸௌபாக்ய லக்ஷ்மியை இலையாகக் காதில் செருகியுள்ளனர். உம் அடி பணிந்து பணிவிடை செய்து தேவர்கள் (அறிவாளிகள்) நன் மனமாகிய பழங்களை விருப்பப்படிப் பெறுகின்றனர். வேதமோ உம்மை அடியார்களுக்கு கல்பகமரமெனக் கூறுகிறது. கற்பகக் கொடியோ வனமாலையாக உம்மை அடைந்துள்ளது.

विश्वानन्दकदम्बसंपदमतिस्निग्धं तमालद्युतिं
दृष्ट्वा निर्भरविभ्रमं घन इति त्वां संगता विद्युतः।
त्वद्रूपामृतसिन्धुसंगमवशात्प्राप्याम्बरप्रच्यवं
चाञ्चल्यात्किमु नन्दनन्दन भवत्पीताम्बरत्वं दधुः॥ ४६

46. நந்தரை மகிழ்ப்பவரே! உலகின் பேரானந்தக் குவியலே வடிவானவரும் பேரன்பு கொண்டவரும் பச்சிலை மர நிறம் கொண்டவருமான உம்மைக் கண்டு மேகம் எனக் கருதி மின்னல்கள் உம்முடன் இணைந்துள்ளன. உமது தோற்றமாகிய அமுதக் கடலுடன் இணைந்ததால் வானிலிருந்து நழுவி சலனமிக்க தன் இயல்பால் உம் பீதாம்பர ஆடையாக மாறின. (மேக வண்ணனை மேகம் எனக் கருதி மின்னல் கொடிகள் தக தக என ஒளி விடும் பீதாம்பரமாயின. கனத்த மேகம் கடலுடன் இணையும். மின்னல் சலனம் மிக்கது. அதனால் சஞ்சலா என்பர். ஜரிகையால் தள தளக்கும் பீதாம்பரமாக அவை மாறின.)

काञ्ची ते धृतयोगसंपदभितो जाता विशालाकृतिः
यावन्ती मधुरा ध्वनिं विदधती पश्चादयोध्याऽभवत्।
माया द्वारवती शिवाधिवसतिः सा काशिका दृश्यते
तच्चित्रं न वदामि माधव यतस्त्वां सा सदा संश्रिता ॥ ४७

*47. (காஞ்சீ என்ற இடுப்பணி மோக்ஷபுரிகள் எட்டும் இணைந்த ஒன்று. காஞ்சீ, விசாலா (பத்ரீ) அவந்தீ (உஜ்ஜயின்) மதுரா, அயோத்தியா, மாயா (ஹரித்வாரம்) துவாரவதீ (துவாரகை) காசி என அவை) மாதவரே! உமது காஞ்சீ யோகச் சிறப்பால் பருத்து விசாலா (விரிவு மிக்கது)வானது. அது அவந்தீ (காப்பாற்றுபவள்) ஆக, மதுரா (இனியவள்)வாக, இனிய சலங்கை ஒலி கொண்டது. பின்னர் அது அயோத்யா (எதிர்க்க இயலாதவள்) ஆனது. மாயா (இருப்பது உணரப் பெறுதவளாக) துவாரவதீ (ஓட்டையுள்ளவளாக). இனிய மணி ஒலி செய்தது. சிவனின் இருப்பிடமான (மங்களத்தின் இருப்பிடமாக) காசியாகியது. இது வியப்பிற்கு இடமல்ல. அது தான் உம்மை அண்டியுள்ளதே.*

जानीमः सहजां त्वदङ्गमिलितामालोक्य पद्मालया
तत्संगस्थितिभङ्गकातरतमौ कल्पद्रुमैरावतौ।
आद्यः पल्लवसंपदं करपदे बिम्बाधरे चापरः
शुण्डादण्डगुणं तवोरुयुगले येनादधे माधव ॥ ४८

*48. மாதவரே! (கல்பகமரமும் ஐராவதமும் பாற்கடலில் லக்ஷ்மியுடன் கூடத் தோன்றியவர்கள். அதனுல் லக்ஷ்மியின் சகோதரர்கள்.) கற்பக மரமும் ஐராவதமும் தாமரையை இருப்பிடமாகக் கொண்ட தன் கூடப் பிறந்த லக்ஷ்மி உமது மார்பில் இணைந்து விட்டதைக் கண்டு, அவளுடன் வாழ இயலாதெனப் பயந்தனர். கல்பகமரம் இளந்துளிராக கைகால் விரல்களிலும் கோவை போன்ற உதட்டிலும் ஐராவதம் உமது இரு துடைகளிலும் துதிக்கைத் தடி போன்ற நிலையிலும் இடம் பிடித்தனர்.*

रम्भास्तम्भयुगं न तद्यदुपरि स्थूलं तथोरुद्वयं
तूणीरौ मकरध्वजस्य सुमनोमोदेन विद्मो वयम्।
हा कष्टं मधुकैटभौ स्फुटमदौ किं कैटभारे हठा-
न्निष्पिष्टौ शतकोटिकोटिकठिनौ तस्मिन्स्थले कोमले॥ ४९

*49. கைடபனின் எதிரியே! அந்த இருபருத்த துடைகளும் வாழை அடி மரமல்ல. அவற்றின் மணத்தைக் கொண்டு அவை மன்மதனின் அம்புறுத்தூணி என்று உணர்கிறோம். (பூவாலான அம்புகளின் இருப்பிடமானதால் மணப்பவை மென்மை மிக்கவையும் கூட. பூக்குடலை போன்றவை) கோடி வஜ்ராயுதங்களை விடக் கடினமான மதுவும் கைடபனும் மதம் பிடித்தவர்கள். அவர்கள் இந்த மென்மைமிக்க துடையின் மீது வைத்து உருத்தெரியாமல் பலவந்தமாகக் கூழாக்கப்பட்டனர். இது கஷ்டம் தானே!*

स्तम्भद्वैतमिदं पयोनिधिसुतागेहस्य मन्दाकिनी-
स्यन्दामन्दमरन्दिताङ्घ्रिकमलद्वन्द्वस्य नालायुगम्।
त्वज्जङ्घायुगलं विमुक्तिकलशीनिर्माणदण्डद्वयं
संपत्तिद्विपसंघयन्त्रणविधावालानयुग्मं भजे॥ ५०

*50. உமது இரு கணுக்கால்களும் கடல் மகளின் மாளிகையின் இரு தூண்கள். கங்கையின் பெருக்கில் நனைந்து மகரந்தம் நிரம்பிய உமது திருவடிகளாகிய தாமரைகளின் தண்டுகள். முக்தி எனும் (மண்) கலசத்தை உண்டாக்குகிற இரு கோல்கள். செல்வமெனும் யானைக் கூட்டத்தைக் கட்டும் இரு கட்டுத்தறிகள். அவற்றை வழிபடுகிறேன்.*

विद्वान्सोऽपि कथं कठोरकमठीपृष्ठेन तुल्यं वद-
न्तीदृक्पादयुगं कथं नु कमला वक्षोजशैले दधत्।
धिङ्मन्दां वसुधामिदं मधुरिपो गोचारणे संचर-
त्पाषाणाङ्कुरकण्टकादिषु हठाद्दृष्ट्वा विदीर्णा न यत्॥ ५१

51. உமது இரு புறங்கால்களையும் கடினமிக்க ஆமையின் முதுகோட்டுடன் உவமித்துக் கூறுபவனும் அறிஞனு ? எப்படி ? அத்தகைய திருவடிகளை லக்ஷ்மி தன் மலை போன்ற மார்பகத்தின் மீது வைத்து அணைத்தது எப்படி ? மதுவின் எதிரியே ! உமது திருவடிகள் மாடுமேய்ப்பதற்காகக் கரடு முரடான கற்களின் மீதும் செடி முளைகள், முள் மீதும் பலவந்தமாக நடப்பதைக் கண்ட பூமி இன்னமும் பிளக்கவில்லையே ! இது மிகக் கொடுமை.

यद्रत्नौघमरीचयोऽपि समताव्यावर्तनं विश्वतः
कृत्वा दिग्वलयं भ्रमन्ति महिता नादैर्मधुस्यन्दिभिः ।
यच्च ब्रह्मशिवेन्द्रवन्दितपदद्वन्द्वोपरि द्योतते
तत्कृष्णस्य पदाङ्गदद्वयमतः किं वर्ण्यतां मादृशैः ।। ५२

52. கிருஷ்ணரின் இரு திருவடிக் காப்புகளில் பதித்த ரத்தினங்களின் ஒளிகள் எல்லாம் சமம் என்பதைப் பல தடவை கோஷித்து தேனொழுகுகிற ஒலிகளால் பெருமை மிக்கதாகி திக்கெட்டும் சுற்றி வருகின்றன. அந்த காப்புகள் பிரும்மா சிவன் மற்றும் இந்திரனால் வணங்கப் பெற்ற இரு திருவடிகளின் மேல் விளங்குகின்றன. அந்த இரு காப்புகளை வர்ணிக்க எம் போன்றவரால் எவ்வாறு இயலும் ?

शेते यत्कमलालया तव पदाम्भोजद्वये संगता
धाता तत्र तनूपधानयुगलं गुल्फच्छलान्निर्ममे ।
किं वा मन्मथकारुणा विरचिते तस्या मुदे कन्दुके
सा यत्क्रीडति पाणिपङ्कजतले कृत्वा सखीभिः सह ।। ५३

53. உம்முடன் இணைந்த லக்ஷ்மி உம் திருவடிகளின் மீது தலை வைத்துப் படுத்திருக்கிறாள். அங்கு பிரும்மா கணுக்காலென்ற மெல்லிய இரு தலையணைகளை அமைத்தாரோ ? அல்லது மன்மதன் என்ற சிற்பி லக்ஷ்மியை மகிழ்விக்க இருபந்துகளை அமைத்துத் தர அதனைக் கையில் ஏந்தித் தோழிகளுடன் அவள் விளையாடுவாளோ ? (கணுக்கால்

லக்ஷ்மிக்குத் தலையணையாக, அதிலுள்ள முண்டு விளையாடப் பந்தாகக் காட்சி தருகிறது.)

या रक्ता दशलोकपालमुकुटप्रान्तत्विषः संततं
कल्पक्ष्मारुहपुष्पसंभृतरुचस्त्वत्पादमूले बभुः।
ता दीप्यन्नखराञ्चिताङ्गुलितया जानन्ति सत्यं जनाः
स्वस्मिन्नेव सदाऽधरेण दधते लेखा यदूर्ध्वंश्रियम्॥ ५४

54. பத்து திசைகளின் அதிபர்களின் கிரீடங்களின் ஓரத்து ஒளிக்கதிர்கள் சிவந்து கற்பக மரப்பூக்களின் அழகு பெற்று உம் திருவடிகளில் காணப்பட்டன. அவற்றை உமது கால் நகங்களாக மக்கள் உணர்ந்தனர். தாழ்ந்த நிலையிலும் தம் பெருமை மேனோக்கி நிற்பதாகக் கொள்வது தேவர்களின் இயல்பு. (தேவர்கள் திருவடிகளின் கீழே வணங்குகின்றனர். அவர்களது கிரீட ஒளி திருவடிகளின் மேல்புறத்தில் உள்ள நகங்களாகத் தெரிகிறது.)

पीयूषद्युतिबिम्बमम्बरतले विद्योतमानं पुरः
प्रेक्ष्योत्फुल्लदृशा त्वया मुहुरिदं देहीति यद्भाषितम्।
तन्मन्ये तव पङ्कजेक्षण महच्चित्रं यशोदार्थनं
यत्त्वत्पादसरोजयोर्नखमणिव्याजेन शीतांशवः॥ ५५

55. தாமரைக் கண்ணரே ! அமுத ஒளி பரப்புகிற சந்திரனின் பிம்பம் உம் முன் வானில் தெரிந்தது. அதனைக் கண்ட உம் கண்கள் மலர்ந்து விரிந்தன. யசோதையிடம் நீ எனக்கு அதனைத் தருவாய் என அடிக்கடி வேண்டினீர். இது விசித்திரமானது. உம் தாமரை போன்ற திருவடிகளில் நகமென்ற ரத்னமாக எத்தனை சந்திரன்கள் உள்ளனர் ?

सत्यं यद्विबुधा वदन्ति पदयोर्द्वन्द्वं तवाम्भोरुहे
गोधूलिच्छलतः स्थितानि परितो हंसालिचेतांस्यलम्।
पीत्वैतन्मकरन्दबिन्दुमसकृद्बृन्दावनीभूपते
मञ्जीरद्वयमञ्जुशिञ्जितमिषादञ्चन्ति यत्पञ्चमम्॥ ५६

56. பிருந்தாவனத்தின் தலைவரே! உம் இரு திருவடிகளும் தாமரைப் பூக்களே என அறிஞர்கள் கூறுவது மெய்யானது. பசுவின் காலடித் தூசி என்ற பெயரில் ஹம்ஸங்களின் (அன்னப் பறவைகளின் - யோகிகளின்) கூட்டத்தின் சித்தங்கள் (எண்ணங்கள்) உம் திருவடிகளைச் சுற்றி வளைய வருகின்றன. இவற்றிலிருந்து வெளியாகிற மகரந்தச் சொட்டுகளைப் பருகிய அன்னபட்சிகள் சிலம்புகளின் இனிய ஒலிகளாகி பஞ்சமஸ்வரத்தில் கூவுகின்றன.

आकृष्याखिलवस्तुतः प्रथमतो रागं मुनीन्द्रैस्ततः
कृत्वा मानसपङ्कजे तव पदद्वन्द्वं स तस्मिन्धृतैः ।
येनास्मिन्नरविन्दलोचन पुनस्तत्केसराणां द्युति-
स्तोमेनापि समन्वितः समुदयत्युच्चैस्तरां शोणिमा ।। ५७

57. தாமரைக் கண்ணரே! சிறந்த முனிவர்கள் எல்லா வெளிப் பொருளிலிருந்தும் ராகத்தை (நாட்டத்தை - செம்மையை) வெளியே இழுத்து அகற்றி உள்ளத் தாமரையில் உம் இரு திருவடிகளைப் பதித்து அங்கேயே நிலை கொண்டனர். திருவடித் தாமரைகளின் கேஸரங்களிலிருந்து வெளிப்பட்ட செம்மையுடன் இணைந்த செம்மை (ராகம்) இப்போது மிக்க வலிவுடன் வெளியாகிறது. (பற்று என்ற செம்மை மறைந்த பின்னரும் திருவடித் தாமரைக் கேஸரச் செம்மை படர்கிறது.)

हंसास्त्वामुपनीय मानससरोजन्मप्रदेशेऽनिशं
क्रीडन्तः कमलालयेन भवता सार्धं प्रमोदं दधुः ।
स त्वं लोचनलोहिता(लोहितलोचना)धरपदद्योतः श्रितो हंसतां
तत्संपर्कवशादिति व्रजकुलालंकार शङ्कामहे ।। ५८

58. கோபர் குலத்திற்கு அணியே! ஹம்ஸங்(ர்)கள் உம்மை மானஸஸரஸ் உற்பத்தியாகுமிடத்திற்கு அடிக்கடி இட்டுச் சென்று கமலையின் (கமலத்தின்) இருப்பிடமான உம்முடன் விளையாடிக் களிக்கின்றனர். அதனால் கண்களும் உதடும் திருவடிகளும் சிவக்க அவர்களின் கூட்டுறவால் ஹம்ஸத் தன்மை அடைந்தீர் என ஐயப்படுகிறோம்.

क्षुद्रात्मा नितरां किमुन्नततरः काठिन्यवान्निर्भयं
किं वा केवलकोमलः श्रयति चेत्किंचिन्मदीयं पदम्।
धन्यः सोऽयमितीव लोकमखिलं संबोधयन्माधव
त्वं धत्से पदयोर्यवं ध्वजवरं दम्भोलिमम्भोरुहम्।। ५९

59. மாதவரே ! உம் இரு திருவடிகளிலும் யவை, சிறந்த கொடி, வஜ்ராயுதம், தாமரை இவை ரேகைகளாயின. இவன் எளியவனே ! உயர்ந்தவனே ! பயமற்றுக் கடினம் கொண்டவனே ! மென்மை மிக்கவனே ! எவனாயினும் என் திருவடியைப் புகலடைந்தவன் கொடுத்து வைத்த பாக்கியமுள்ளவன் என உலகமனைத்திற்கும் போதிக்க முறையே இந்த ரேகைகளைத் தாங்குகிறீர்.

त्वां नित्यं समुपास्य दास्यविधया स्थास्याम इत्याशया
ब्रह्मेन्द्राद्यमरैस्त्वदीयपदयोः स्वीया धृताः संपदः।
तासामङ्कुशनीरजाशनिलसच्छत्रध्वजाद्याकृतिं
बिभ्राणा विजयश्रियं त्रिजगतां वन्द्याऽरविन्दालया।। ६०

60. தினமும் தாஸனாக உமக்குப் பணிபுரிவோம் எனக் கருதி. பிரம்ஹா இந்திரன் முதலானோரால் உமது திருவடிகளில் தம் தம் செல்வமனைத்தும் சமர்ப்பணம் செய்யப்பட்டது. அச்செல்வங்களை துரட்டி, தாமரை, வஜ்ராயுதம், குடை, கொடி முதலிய ரேகைகளின் வடிவில் கொண்ட மூவுலகின் வெற்றிச் செழிப்பை தாங்கி நிற்கிற லக்ஷ்மீ தேவி வணங்கத் தக்கவள்.

त्वत्पादाम्बुजसंगमात् त्रिजगतां वन्द्याऽरविन्दालया
स्थाने स्थानगुणाद्भवन्ति हि जनाः प्रायः पदं संपदाम्।
किं त्वेकं शतपत्रलोचन महच्चित्रं यदस्मादधः
पाता पुण्यतमा विमुक्तिनगरीनिःश्रेणिका स्वर्धुनी।। ६१

61. தாமரைக் கண்ணரே ! உமது திருவடியுடன் இணைந்தமையால் தாமரையில் குடி கொண்டுள்ள லக்ஷ்மீ

தேவி வணங்கத் தக்கவளாகிருள். தங்குமிடத்தின் பெருமையால் மக்கள் செல்வங்களின் இருப்பிடமாகின்றனர். இதில் ஒரு பெரும் விசித்திரமுள்ளது. முக்தி நகரத்தின் ஏணிப்படியான கங்கை இதிலிருந்து கீழே விழுகிறது. (மற்றவர் மேலே ஏற உதவுகிற ஏணிப்படி தான் கீழே விழுவதைத் தவிர்க்க இயலவில்லை என்பதே இதில் விசித்திரம்.)

கேசாதிபாதாந்தவர்ணனையை ஒட்டி, இனி கிருஷ்ண லீலைகள் வர்ணிக்கப்படுகின்றன.

यत्पादाम्बु विधाय मूर्धनि चितावासः शिवत्वं हठात्
प्राप्तो भक्षितकालकूटनिकरो मृत्युंजयत्वं ययौ।
दिग्वासा नृकपालमात्रविभवश्चाविन्ददीशानतां
स त्वं नन्दसि यस्य मन्दिरगतो नन्दाय तस्मै नमः ॥ ६२

62. மயானத்தில் வசிப்பவர் உம் திருவடி நீரைத் தலையில் தரித்ததும் சிவ நிலையை வலிவில் பெற்ருர். காளகூட விஷம் பருகி யமனை வென்றவராஞர். திசையே ஆடையாகக் கொண்டவர் (உடுத்த ஆடைகிட்டாதவர்) மனிதனின் தலையோட்டை மட்டும் சொத்தாகக் கொண்டவர் ஈசானஞக (பேராளுனராக) ஆஞர். அந்த நீர் நந்தர் மாளிகையில் குடியேறியதால் மகிழ்ச்சியுறுகிறீர். அந்த நந்தருக்கு வணக்கம்.

धूलीधूसरितं मुखं तव शरत्पूर्णेन्दुनिन्दावहं
व्यालोलालककुण्डलद्युति चलन्नेत्रश्रिया प्रोल्लसत्।
यालोक्यार्द्रविलोचना स्मितमुखी प्रस्यन्दमानस्तनी
पाणिभ्यामवलम्ब्य चुम्बितवती तां नन्दजायां भजे ॥ ६३

63. சரத் காலத்துச் சந்திரனைப் பழிக்கிற உமது முகம் தூசி படிந்துள்ளது. முன்னுச்சி மயிர் கலைந்து குண்டலத்தின் ஒளியை மறைக்கிறது. அங்குமிங்கும் அலைகிற பார்வையால் அழகுற்றது. இந்த உம் உருவத்தைக் கண்டதும் ஆனந்தக்

கண்ணீர் மல்க, புன் சிரிப்புடன், மார்புப்பால் கசிய, கைகளால் உம்மை ஏந்தி முத்தமிடுகிற நந்தரின் மனைவி யசோதையை வழிபடுகிறேன்

पीत्वा स्तन्यविषं सहासुपवनैः संपातिते पूतना-
देहे वै भवता जनार्दन तृणावर्ते च नीते क्षयम्।
राहून्मुक्तसुधामयूखसुषमा यादृक्चकोरालिभिः
याभिस्त्वद्वदनद्युतिश्चुलुकिता ता गोपकन्याः स्तुमः ॥६४

64. முலைப்பால் விஷத்தை அவளது மூச்சுக் காற்றுடன் பருகிப் பூதனையின் உடலை வீழ்த்தி, திருணாவர்த்தனையும் யமனுலகம் அனுப்பிய பின், கோப கன்னிகைகள் சகோர பட்சிகள் போல ராகுவிடமிருந்து விடுபட்ட அமுத கிரணனான சந்திரனின் அழகுக்கு ஈடான உமது முக காந்தியைப் பருகினர். அவர்களைப் பாராட்டுவோம்

यद्बन्धस्य विधित्सयापि विवशः कीनाशपाशैर्दृढं
बद्धः सानुगपुत्रबान्धवजनो दुर्योधनोऽन्तं गतः।
तं त्वां येन निबध्य नन्ददयिता बृन्दारकैर्वन्दिता
जाताऽऽनन्दमयी मुकुन्द महते भावाय तस्मै नमः ॥ ६५

65. முகுந்த ! உம்மைக் கட்டிப் போட விரும்பிய துர்யோதனன் தன் வசமிழந்து தம்பிகள் புதல்வர் பந்துக்களுடன் யமனது பாசத்தால் கட்டுண்டு முடிவை அடைந்தான். அந்த உம்மைக் கட்டிய நந்தரின் மனைவி தேவர்களால் வணங்கப் பெற்று ஆனந்த வடிவினளாக ஆனாள். அந்தப் பெரும் எண்ணத்திற்கு நமஸ்காரம்.

निर्भिन्ने यमलार्जुनेऽतिचकितास्तूर्णं गृहान्निर्गताः
पीत्वा दृक्चषकैस्त्वदक्षततनूरूपामृतं निर्वृताः।
त्वामादाय विधाय नेत्रसलिलैः सिक्तं त्वरामाश्रिताः
ये बृन्दावनमागताः कृतधियस्तान्गोपवृद्धान्स्तुमः ॥ ६६

66. இரட்டை மருத மரங்கள் முறிந்து விழுந்ததும் மிகவும் பயத்துடன் வீட்டை விட்டு வெளியே வந்த முதிய கோபர்கள் சிறிதும் அடிபடாத உம் சரீரமாகிய அமுதத்தைக் கண் என்ற குவளைகளால் பருகி நிம்மதி பெற்று உம்மை எடுத்துக் கண்ணீரால் நீராட்டி முனைவுடன் விரைந்து பிருந்தாவனம் சென்றடைந்தார்கள். அவர்களைப் பாராட்டுவோம். (கோகுலத்தில் தொடர்ந்து கிருஷ்ணனுக்கு ஏதேனும் கேடுவிளைவதும் தெய்வ வசத்தால் காப்பாற்றப்படுவதும் முதிய கோபர்களைக் கோகுலத்தை விட்டகன்று பிருந்தாவனம் செல்லத் தூண்டின.)

कृत्वा कालियदन्दशूकदमनं त्वय्यास्थिते ताण्डवं
तस्योत्तब्धसमस्तमस्तकमणिस्तोमे समुत्तस्थुषि ।
येनालम्भि विभातभास्करसुरप्राग्भारशोभास्फुर-
द्रत्नाम्भोजयुगद्युतिः प्रतिपदं तत्तेऽङ्घ्रियुग्मं भजे ।। ६७

67. காளிய நாகத்தை அடக்கி சீறி எழுந்த அதன் திமிரால் நிமிர்ந்த எல்லாத் தலைகளிலுமுள்ள ரத்னக் குவியல் மீது நீர் தாண்டவமாட முனைந்ததும் ஒவ்வொரு மிதியிலும் உதித்த ஸூரியனின் ஒளியுடன் கூடிய உதய மலையின் அழகால் மலர்ந்த இரு ரத்னத் தாமரைகளின் பிரபையுள்ள உம் திருவடிகளை வழிபடுகிறேன்

उत्फुल्लैः परिपीय कर्णपुटकैर्वंशीनिनादामृतं
तच्च घ्राणमुदस्य दत्तकवलं प्रोद्भिन्नरोमाङ्कुरम् ।
निःस्पन्दैर्नयनैरमन्दमधुरैः श्यामं महस्तावकं
येनोद्वीक्षितमम्बुजेक्षण भजे तद्गोकदम्बं तव ।। ६८

68. தாமரைக் கண்ணா ! பசுக்களின் கூட்டம், உம் குழலொலியாகிற அமுதத்தை விரிந்த காது மடல்களால் நன்கு பருகி, மூக்கை உயர்த்திக் கொண்டு வாயிலிட்ட புல் கவளத்துடன் மயிர் கூச்செறிய, அசையாத கண்களால் உமது மேக வண்ண ஒளியை உற்று நோக்கிக் கொண்டுள்ளது. அந்த உம் பசுக் கூட்டத்தை வழிபடுகிறேன்.

जम्भारेः स्फुरदायुधस्य भवता दम्भाद्रिविद्रावणं
कृत्वा वामभुजेन सप्तदिवसान्योऽसौ धृतः पर्वतः।
सोऽस्तु स्निग्धतमालसारघटितस्तम्भैकसंभावित-
प्रासादद्युतिनिन्दकः प्रतिपदं भव्याय गोवर्धनः ॥ ६९

69. தன் ஆயுதமான வஜ்ரம் பளபளக்க நின்ற இந்திரனது கொட்டமெனும் மலையைச் சிதறச் செய்து ஏழு நாட்கள் இடது கையால் உம்மால் தூக்கிப் பிடிக்கப்பட்ட கோவர்த்த மலை, பச்சிலை மரத்தின் வைரம் பாய்ந்த நடுப்பகுதியாலான ஒற்றைத் தூண் மீது அமைக்கப்பட்ட உப்பரிகையின் பெருமையை அவமதிப்பது போன்று உள்ளது. அது எமது மேன்மைக்கு உதவட்டும்.

त्वद्बाहूद्धृतपर्वतार्पितदृशः प्रेक्ष्य प्रियायाः स्खल-
द्वासःपीनपयोधरक्षितिधरौ दोःस्तम्भकम्पे तव।
शैले चञ्चलतां गते व्रजपते त्रासाकुले गोकुले
नन्दे मन्दमुखद्युतौ जयति ते मन्दाक्षमन्देक्षणम्॥ ७०

70. உம் கைகளால் தூக்கப்பட்ட மலையின் மீது கண்களைப் பதித்த அன்புக்குரியவளின் தோளிலிருந்து ஆடை நழுவ அவளது மலை போன்று பருத்த மார்பகத்தை கண்டு தூண் போன்ற உம் தோள் அசைய மலை ஆட்டம் கண்டதும் அதன் கீழிருந்த கோகுலம் திகிலடைய, நந்தர் முக ஒளி குன்றி நிற்க, அவர்கள் மீது உமது மென்மை மிக்க கனிந்த கண்களின் பார்வை அழகுற விளங்குகிறது.

पौगण्डं मदखण्डनं बलभिदः किं ते हरे स्तूयते
कौमारं चरितं यतो विजयते व्यामोहनं ब्रह्मणः।
किं स्तव्यं तव यौवनं त्रिपुरजिद्यद्बाणयुद्धे जितः
संमोहं गमितास्त्वया यदबला भावेऽपि नेत्रश्रिया॥ ७१

71. ஹரே! உம் சிறு வயதில் இந்திரனது திமிரை அடக்கியது (கோவர்த்தன மலையைத் தூக்கியது) இளமையில்

பிரும்மாவை மயக்கியது (கோபச் சிறுவர்களாக பசுக்களாக நடித்தது) பாணாஸுரனுடன் யௌவனத்தில் போரிடும் போது சிவன் வெல்லப்பட்டது, கண் பார்வையாலேயே கோகுலப் பெண்கள் மயக்கப்பட்டது. இவை பாராட்டப் பெறுகின்றனவா?

पीते दावहुताशने निजजनत्राणैकहेतोस्त्वया
निःस्पन्दं पशुपौघपक्षिपशुभिः पेपीयमाने त्वयि।
प्रेमार्द्राण्यतिनिर्मलानि दिविषच्चित्तानि सत्यं मुहु-
स्त्वद्गात्रे नु वितीर्यमाणकुसुमव्याजेन भान्ति प्रभो॥ ७२

72. தம் மக்களைக் காப்பாற்ற காட்டுத் தீயை நீர் பருகியதும், கோபாலர்களும் பறவைகளும் பசுக்களும் அசைவின்றிக் கண்களால் உம்மை பருகினர். அப்போது இதனைக் கண்ட தேவர்களின் உள்ளங்கள் அன்பால் நெகிழ்ந்து தெளிந்தன. அந்த உள்ளங்கள் உம் மீது வாரி இறைக்கப்பட்ட பூக்களாக விளங்கின.

कङ्केल्लिस्तबकं मुहुः कमलिनीकान्तं प्रतीचीगतं
पर्यालोच्य विलोक्य धूमपटलं गोधूलिबुद्ध्याकुलाः।
उच्चैः कोकिलकूजितं च मुरलीनादं विदित्वा गृहा-
त्त्वां या वीक्षितुमागताः पथि गवां गोपाङ्गनास्ताः स्तुमः॥ ७३

73. அசோக மரத்தின் பூ மொட்டுகள், மேற்கை அடைந்த ஸூரியன், இவற்றைக் கண்டதும் (மாலை வேளை நெருங்கி விட்டதாக உணர்ந்து) வானில் புகை மண்டலம் காண, பசுக்களின் கால் புழுதி வானில் பரவுவதாக எண்ணி, குயில் உரக்கக் கூவுவதையும் குழலொலியையும் உணர்ந்து வீட்டை விட்டு வெளியேறிப் பசுக்கள் வரும் பாதையைக் கண்காணித்து, உம்மைக் காண வாயிலில் காத்திருக்கிற கோபிகளைத் துதிக்கிறோம்.

सायाह्ने समुदञ्चति श्रुतिपथं वंशीनिनादे हठात्
नेपथ्यस्य समापनेन शपथैरालीजनैः प्रार्थिते।

पाणिभ्यामवलम्ब्य नीविरशना निर्गम्य तूर्णं बहि-
र्दृग्भ्यां ते मुखसौरभं चुलुकितं याभिर्भजे ता जनीः ॥ ७४

74. மாலை நெருங்க, குழலின் நாதம் வலிவில் காது வழியே நுழைய, தோழிகள் பிடிவாதமாக வேண்ட, அலங்காரத்தை முடித்துக் கொண்டு இடுப்பிலிருந்து நழுவுகிற கொசுவ முடிப்பைக் கைகளால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வெளியேறிக் கண்களால் உம் முகத்தழகை உறுஞ்சிச் சுவைக்கிற கோபியரை வழிபடுகிறேன்.

यत्राघासुरकेशिधेनुकबकारिष्टप्रलम्बादयः
क्रोधाग्नौ भवता हुता दितिसुताः संतर्पिता देवताः ।
यस्मिंस्ते पदपङ्कजद्वयरजः पद्मोद्भवप्रार्थितं
भेजुर्गोमृगपक्षिभूरुहलता वृन्दावनं तद्भजे ॥ ७५

75. அங்கு (பிருந்தாவனத்தில்) அகன், கேசி, தேனுகன், பகன், அரிஷ்டன், ப்ரலம்பன் முதலிய அசுரர்கள் உம் கோப நெருப்பில் ஹோமம் செய்யப்பட்டனர். தேவர்கள் மகிழ்விக்கப்பட்டனர். உமது இரு திருவடித் தூசுகள் காளை, பசு, மான், பறவை, மரம், கொடி முதலியவற்றால் பெறப்பட்டன. அந்த பிருந்தாவனத்தை வழிபடுகிறேன்.

देवेन्द्रस्य पराभवं किमपरं व्यामोहनं ब्रह्मणः
संपश्यन्नपि वैभवं व्रजकुलोत्तंस प्रचेतास्तव ।
नन्दं यत्पितरं जहार भवतः स्थाने जलात्मन्यदः
स्थाने तादृशि ते बभूव न मनाक्क्रोधस्य लेशोऽपि तत् ॥ ७६

76. கோபர்குலத்துப் பெருமானே ! தேவேந்திரனின் தோல்வி, பிரும்மாவை மயக்கியது என்று உமது பெருமையை அறிந்த பின்னரும் வருணன் உம் தந்தை நந்தரைக் கடத்திச் சென்றார். ஜல(ஜட) வடிவிலுள்ள அவரிடம் அது நேரத்தக்கதே. ஆனால் அத்தகையவரிடம் உமக்குச் சிறிதளவும் கோபம் வரவில்லையே ! அது உமக்குத் தகும்.

मञ्जीरद्वयकङ्कणावलिलसत्काञ्चीघटाशिञ्जिते
वीणावेणुमृदङ्गझर्झरकरोत्ताले दिशश्चुम्बति।
कामं पूर्णकलानिधौ विलसति भ्रश्यत्पटे स्वर्वधू-
वृन्दे वर्षति दैवते सुमनसो रासस्तवास्तां मुदे ॥ ७७

77. கால் சதங்கை, கை வளைகள், இடுப்பணிகள் இவைகளில் கலகல ஒலியும், வீணை, குழல், மிருதங்கம், ஜாலரா, கைத் தாளம், இவற்றின் ஒலியும் வானைத் தொட, பூர்ண சந்திரன் வானில் துலங்க, தேவயுவதிகள் ஆடை நழுவத் திரண்டு நிற்க, மழை பெய்ய, நன்மனம் கொண்ட உமது ராஸ விளையாட்டு மகிழ்ச்சி தரட்டும்.

नृत्यद्भ्रूनयनोत्पलस्मितमुखस्विद्यत्कपोलस्थलं
लीलाचञ्चलकुण्डलं भुजलतान्दोलकणत्कङ्कणम्।
त्रुट्यत्कञ्चुकबन्धमुन्नतकुचं तिर्यक्त्रिकं प्रस्खल-
न्नीवि व्यञ्जितशिञ्जितं जयति ते रासः प्रियाभिः सह ॥ ७८

78. புருவங்களும் கண்களும் நடனமாட, முகம் சிரிக்க, கன்னப்பகுதி வியர்க்க, விளையாட்டால் குண்டலங்கள் ஆட, புஜத்தின் ஆட்டத்தால் கங்கணங்கள் ஒலிக்க, ரவிக்கை முடிச்சவிழ, மார்பகம் விம்ம, இடுப்பும் கழுத்தும் குலுங்க, கொசுவமுடிப்பு நெகிழ கால் சதங்கை ஒலிக்க அன்புக்குரிய பெண்களுடன் ராஸம் அழகுடன் விளங்குகிறது.

आकुञ्चद्वदनं क्वचिद्विलसिताम्भोजास्यशोभं क्वचित्
मन्दस्यन्दिविलोचनं क्वचिदलं दृक्चापलं कुत्रचित्।
क्वाप्युद्दाममदान्धसिन्धुरगतं कुत्रापि विद्युल्लता-
चाञ्चल्यं स्मरवर्धनं विजयते लास्यं प्रियाणां तव ॥ ७९

79. முகத்தில் இறுக்கம், முகமலர்ச்சி, கண்ணீர் மல்க விழித்தல், கண்ணின் நொடிப்பு, மதம் பிடித்த யானையுடையது போன்ற பீடு நடை, மின்னல் போல்

நொடியில் பனிச்சிடுதல், இப்படி பலவகைப்பட அசைவுகளுடன் கூடிய உம் அன்புக்குரிய பெண்களின் காதலே வளர்க்கிற நடனம் அழகாக ஒளிர்கிறது.

अध्यास्योरुतलं वपुः पुलकितं स्विद्यत्कपोलस्थलीं
दोर्वल्लीमपि तावकांसमिलितां कम्पाकुलां बिभ्रति।
प्रोद्यत्पूर्णकलानिधावरुचिरे स्मेरे मुहुःसीत्कृते
राधा धन्यतमा दधार वदने ताम्बूलकल्कं तव ॥ ८०

80. உமது துடைகள் மீதமர்ந்து, புல்லரிப்பு கொண்ட உடலேயும் வியர்க்கிற கன்னங்களேயும் உம் தோள்களுடன் இணேந்து நடுங்குகிற தோள்களேயும் கொண்ட ராதை உதிக்கிற பூர்ண சந்திரனேப் போன்றழகியதும் மென்மையுடன் சிரிப்பதும் அடிக்கடி இஸ் இஸ் என ஒலிப்பதுமான வாயில் உம் தாம்பூலக் கலவையை ஏற்கிருள். அவள் பாக்யசாலிகளில் உயர்ந்தவள்.

यस्यां तुङ्गतरङ्गसंगमवशाद्भीता भुजंगभ्रमा-
दालिङ्गन्ति वराङ्गनास्तव जलक्रीडाजुषोऽङ्गं हठात्।
सा नित्यं दलितेन्द्रनीलनिकरश्रीतस्करा भास्कर-
स्यापत्यं तटिनी शिवं दिशतु मे गोपालभूपालज ॥ ८१

81. இடையரரசர் மகனே! ஜலக்கிரீடையில் ஈடுபட்டுள்ள உமது உடலே யமுனேயின் உயர்ந்து மேலெழுகின்ற அலேயிடமும் பாம்பு என்ற பிரமையிலும் பயந்த அந்த அழகிகள் வலிவில் கெட்டியாக அணேத்துக் கொள்கின்றனர். ஸூரியனின் மகளான அந்த யமுனே உடைக்கப் பெற்ற இந்திர நீலக் கற்களின் நீல ஒளியைத் திருடியவளாக ஓடுகிருள். அவள் மங்களத்தை வழங்கட்டும்.

उत्फुल्लाम्बुजमाकलय्य दयितास्मेराननं विभ्रमद्
भृङ्गश्रेणिमनङ्गभङ्गुरदृशस्तस्याः कटाक्षच्छटाम्।

शैवालं परिगृह्य कुन्तलधिया द्राक्चुम्बनायोद्यतः
त्वं यस्यां हसितः प्रियाभिरभितस्तां भानुकन्यां भजे ॥ ८२

82. யமுனையில் மலர்ந்த தாமரையை அன்புக்குரியவளின் மென் சிரிப்புள்ள முகமாகவும் சுற்றிச் சுற்றி வருகிற தேனீக் கூட்டத்தை குறையற்ற பார்வையுள்ள அவளது கடைக்கண்பார்வை வீச்சாகவும், பாசியை அவளது கூந்தலாகவும், எண்ணி யமுனையை முத்தமிடத் தொடங்கிய நீர் அருகிலுள்ள காதலிகளால் பரிகாசம் செய்யப்பட்டீர். அந்த் யமுனையை வழிபடுகிறேன்.

पुष्पं त्वय्यवचिन्वति प्रियतमावृन्देन सार्धं मुदा
बृन्दारण्यमहीरुहस्य निकरे कम्पाकुले निर्भरम्।
तस्मिन्वर्षति कौतुकेन कुसुमान्युच्चैः पुनर्दैवत-
स्तोमेऽपि व्रजभूपते विजयते तैस्तैश्चितं ते वपुः ॥ ८३

83. பிருந்தாவனத்து மரத்திலிருந்து உம் காதலிகளுடன் சந்தோஷத்துடன் பூப்பறிக்கத் தொடங்கியதும் மரம் குலுங்கி ஆடியதால் உம் மீது அதிலிருந்து பூக்கள் நிறைய உதிர்ந்தன. ஆயர்பாடியின் அரசரே ! தேவர்களும் பூமாரி பொழிய, அவரவர் உம்மைப் பூக்குவியலிலிருந்து தேடிப் பிடித்தனர்.

कान्ताकोटिकलाकुलस्य भवतः संतोष्य रासे स्मर-
क्षीणां वीक्ष्य निशां निशाकरकरस्तोमे परं मुञ्चति।
सातङ्कं समुपागतस्य सदनाद्यान्तं शयाने जने
कीरस्यापि गिरा जयन्ति परितः पर्याकुला दृष्टयः ॥ ८४

84. நீர் பல அன்புக்குரிய கோபிகளுடன் ராஸ விளையாட்டில் திளைத்திருந்த போது உம்மை மகிழ்வித்து மன்மத லீலையால் இரவு கழிந்ததும், சந்திரனின் கிரணங்களும் அகன்றதும், கவலையுடன் வீட்டிற்கு வந்து வீட்டிலுள்ள மக்கள் தூங்குவதைக் கண்டு வீட்டை விட்டு வெளியேறுகிற உம்மைக் கண்டு கிளிகள் கூவின. பரபரப்படைந்த மக்களின் பார்வைகள் சிறப்புடன் விளங்குகின்றன.

उद्यन्नेव भवानिव व्रजभुवां सर्वापदां संहति-
ध्वान्तस्तोममनुत्तमं तमनयत्कान्तः सरोजन्मनाम् ।
सोल्लासानि सरोरुहाणि नयनानीव त्वदालोकने
लोकानां किल नन्दवंशतिलक स्वापस्य नायं क्षणः ।। ८५

85. திருப்பள்ளியெழுச்சி - உம்மைப் போல் வெளிப்பட்ட உதித்த தாமரைகளின் காந்தனுன ஸூரியன் எல்லா ஆபத்துக் கூட்டமாகிற இருளை அகற்றினார். உம்மைக் கண்ட கண்கள் போல தாமரைகள் மலர்ந்தன. உலகத்திற்கு இனி தூங்குவதற்கான நேரமில்லை.

मित्रेणेह तमस्विनीं विनिहतां नाथ त्वया पूतनां
व्याधूतामिव कैरवेष्वपि भवद्विद्वेषिवक्त्रद्युतिम् ।
आशां पश्य पुरंदरस्य दयितां रक्ताम्बरालंकृतां
सिन्दूरान्वितकुम्भमम्बरमणेर्बिम्बं वहन्तीं पुरः ।। ८६

86. நீர் பூதனையை மாய்த்தது போல ஸூரியனும் இருள் குவியலான இரவை அழித்தான். உம்மை எதிர்ப்பவரின் முகத்து ஒளியை அல்லிப்பூவின் ஒளியைப் போல அழித்தான். இந்திரனுக்கு இனியாளான கிழக்குத் திசை செவ்வாடை உடுத்தி ஸூரியனின் சிந்தூரமிட்ட கும்பம் போன்ற பிம்பத்தைத் தாங்கி நிற்பதைக் காண்பீர்.

गीतज्ञाः कवयो नटा बहुकलाशिक्षासु दक्षाः परे
विप्रेन्द्राः कुशपाणयोऽपि भवनद्वारेषु सन्त्युत्सुकाः ।
तल्पं मुञ्च ददस्व लोचनफलं त्वं देहभाजामिति
प्रातर्वन्दिगिरो जयन्ति भवतः संबोधने नित्यशः ।। ८७

87. கானம் செய்யவல்ல கவிகளும், நர்த்தனம் புரிபவர்களும், பலகலைகளில் தேர்ந்தவர்களும் தர்பத்தைக் கையில் ஏந்திய சிறந்த அந்தணர்களும் உம் மாளிகை வாயிலில் உற்சாகத்துடன் நிற்கின்றனர். படுக்கை விட்டு

எழுவீர் ! அனைவரது கண்களுக்கும் விருந்தளிப்பீர் !'' எனத் தினமும் காலையில் உம்மை எழுப்ப வந்தவர்களின் குரல் அழகாக விளங்குகிறது.

भानोर्मण्डलमाविरस्ति पुरतो नाद्यापि निद्राहतिः
किं ते तात बलानुजेति जननीवाग्वीचिमाचामतः ।
अर्धोन्मीलितपाटलाक्षियुगलं पर्यस्तनीलालकं
जृम्भारम्भविशेषशोभि वदनाम्भोजं भजामस्तव ॥ ८८

88. ''ஸூர்ய மண்டலம் எதிரே தோன்றுகிறது. குழந்தாய் ! பலராமனின் தம்பியே ! உன் தூக்கம் இன்னமும் அகலவில்லையா'' என்று தாயின் குரல் வரிசையை விழுங்குகிறீர். சிவந்த இரு கண்களும் பாதி திறந்துள்ளன. கருத்த கேசங்கள் கலைந்துள்ளன. தாமரை போன்ற முகம் கொட்டாவி விடத் துவங்கி மிகவும் அழகு பெறுகிறது. இந்த முகத் தாமரையை வழிபடுகிறோம்.

मुञ्चन्तं शयनं भवन्तमभितः संगम्य गोपाङ्गनाः
तैलाभ्यञ्जनमञ्जनादि दधतीः संवीक्ष्य देव्यश्चिरम् ।
उज्झन्त्यः सुमनोऽम्बराणि सुमनोभावा वरं संगताः
भूयो गोपवधूत्वलब्धिमनसैवाकाशसाम्यं दधुः ॥ ८९

படுக்கை விட்டெழுகிற உம்மைச் சுற்றிக் கூடி எண்ணெய் தேய்த்தல் கண்களுக்கு அஞ்சனமிடுதல் முதலியவற்றை கோபஸ்திரீகள் செய்யத் தொடங்குகின்றனர். இதனை வெகு நேரம் உற்று நோக்கிய தேவமாதர் பூக்களாலான ஆடைகளை அவிழ்த்து விட்டு நல்ல மனோபாவத்துடன் கூடியவர்களாகக் கூடி, கோபிகளாகப் பிறக்கிற பேற்றைப் பெற அங்குவிட்டு அகலாமல் ஆகாசம் போன்று பரவி நின்றனர்.

प्रातर्भोजनमारचय्य विपिनं प्रस्थातुकामे त्वयि
प्रायो गोपवधूलतासु मिलितः कंदर्पदावानलः ।

यद्गोधूलिमिषादुदेति परितो धूमालिरभ्रंलिहा
तासामश्रुरसाः स्रवन्ति च मुहुर्दन्दह्यमानेऽन्तरे ।। ९०

90. காலையுணவு ஏற்றுக் காட்டுக்கு நீர் புறப்பட, கோபிகளாகிய கொடிகளில் மன்மத தாபம் என்ற காட்டுத் தீ பற்றியது. பசுக்களின் கால் புழுதி வானளாவி புகை போல் பரவியது. அவர்களது கொதிக்கிற உள்ளத்தில் கண்ணீர் பெருகுகிறது.

पञ्चास्ये चतुरानने दशशतीनेत्रादिपूर्वे गवा-
मध्वन्यध्वनि लोकपालनिवहे भूमीलुठन्मूर्धनि ।
तद्व्याघ्राजिनभूषणादिभिरलं त्रस्ते समस्ते पशौ
गोपाः कोपवशाद्गृहीतलगुडा हीहीरवाः स्युर्मुदे ।। ९१

91. சிவபெருமானும் பிரும்மாவும் ஆதிசேஷனும் மற்றவரும் மாடுகள் செல்லும் பாதையில் வழியில் தலை பூமியில் புரள வணங்குகின்றனர். அவர்கள் தரித்த புலித் தோல் பாம்பாபரணம் போன்றவற்றால் பசுக்களனைத்தும் மிரள, கோபர்கள் கோபத்தால் கைகளில் தடி ஏந்தி ஹி ஹீ எனக் குரல் எழுப்பி மாடுகளை ஓட்டுகின்றனர். அக்காட்சி நமக்கு மகிழ்ச்சி தரட்டும்.

तिग्मांशौ तपति क्वचिज्जलमुचां स्तोमे जलं मुञ्चति
प्रेमार्द्रः प्रतनोति यः स्ववपुषा चित्रातपत्रं तव ।
सोऽयं भास्करकोटिभास्वरमहःसंभारपाटच्चरः
पारीन्द्रोऽसुरदन्तिनां दिशतु मे भव्यं भुजंगान्तकः ।। ९२

92. ஓரிடத்தில் சூரியன் கொளுத்துகிறான். மறுபுறம் மழை பெய்கிறது. யாரோ ஒருவர் அன்பால் நெகிழ்ந்து அழகிய பல வர்ணக் குடை பிடிக்கிறார். அவர் கருடன். பல ஸூரியர்களின் பேரொளிக் குவியலைத் திருடியவர். அஸுரர்களாகிய யானைகளுக்குச் சிங்கமானவர். அவர் நமக்கு நன்மை தரட்டும்.

मध्याह्ने यमुनातटे विटपिनां मूले वयस्यैः समं
दध्यन्नान्युपभुज्य रज्यति पुनस्तत्क्रीडने च त्वयि ।
देवेन्द्रस्त्रिपुरान्तकः कमलभूरन्ये च नाकालयाः
काकाकारजुषो मुहुः कवलयन्त्युच्छिष्टमिष्टं तव ।। ९३

*93. நடுப்பகலில் யமுனைக் கரையில் மரங்களின் அடியிலமர்ந்து நண்பர்களுடன் தயிர் சாதம் சாப்பிட்டு மகிழ்ந்து விளையாட்டில் நீர் ஈடுபட்டதும், இந்திரனும் சிவனும் பிரும்மாவும் மற்ற தேவர்களும் காக்கை வடிவேற்று நீர் உண்ட மீதியை அடிக்கடி கொத்தி விழுங்குகின்றனர்.*

निद्राणे त्वयि शीतले तरुतले तल्पे दलैः कल्पिते
संवीक्ष्याम्बुजपत्रमन्दमरुता संवाहिते पादयोः ।
रुद्रब्रह्ममहेन्द्रतर्जनविधौ गोपार्भकाणां कर-
व्याधूतानि जयन्ति भङ्गुरदृशां कान्तिश्च शोणायिता ।। ९४

*94. குளிர்ந்த மரத்தடியில் இலைகளாலான படுக்கையில் நீர் உறங்கும் போது, உம் திருவடிகளைத் தாமரை இலையால் கோபர்கள் வருடிப் பிடித்து விடும் போது, சிவனும் பிரும்மாவும் இந்திரனும் நெருங்காமல் கோபச் சிறுவர்களை விரட்டுவதற்காக கைகளை உதறுவதும் சிவந்த அழகிய அவர்களின் கண்களின் அழகும் மேலாக நிற்கின்றன.*

स्फूर्जन्तस्तपसा पुलस्त्यपुलहागस्त्याः सदुर्वाससः
सन्त्युच्चैर्यशसः परेऽपि स परं धन्यो मुनिर्नारदः ।
यस्य त्वद्गुणगानमग्नमनसो व्यापादिते केशिनि
प्रालेयाद्रिविनिःसृतामरधुनीधारायतेऽस्रावलिः ।। ९५

*95. தவத்தால் துடிக்கின்ற புலஸ்தியர், புலஹர், அகஸ்தியர், துர்வாஸர் முதலானோர், பெரும் புகழ்பெற்ற மற்றவர், பாக்யசாலியான நாரதர் முதலானோர் கேசியை நீர் மாய்த்ததும் உம் பெருமையைப் பாடுவதில் ஈடுபட்டுள்ளனர்.*

இமயமலையிலிருந்து வெளிப்பட்ட கங்கையின் பெருக்கு போன்று அவர்களது ஆனந்தக் கண்ணீர் ஓடுகிறது.

लक्ष्माणि ध्वजवज्रपङ्कजयवच्छत्रोर्ध्वलेखायुता-
न्यालक्ष्याम्बुरुहाक्ष ते चरणयोः क्षोणीतलेऽह्नाय यः ।
ध्यायत्पुत्पुलकत्युदश्चति लुठत्याक्रन्दति प्रीयते
कोऽन्यो धन्यतमस्ततस्त्रिभुवने स्याद्गान्दिनीनन्दनात् ॥ ९६

96. உம் திருவடிகளிலுள்ள கொடி, வஜ்ரம், தாமரை, யவை, குடை, மேல் நோக்கிய ரேகை முதலிய அடையாளங்களைக் கண்டு திருவடிகளைத் தியானிப்பவனும் அதனால் புல்லரிப்பு கொண்டவனும், உயர எழும்பி கீழே விழுந்து உருண்டு அழுது அன்பு கொண்டவனுமானவன் அக்ரூரரைத் தவிர மூவுலகில் வேறொருவர் இல்லை.

धन्यं तस्य जनुस्तथैव पितरौ धन्यं तदीयं कुलं
धन्या तेन वसुंधरा किमधिकं तेनैव धन्यं जगत् ।
यः कंसैकनिदेशवर्त्यपि भवत्पादाम्बुजालोकना-
दक्रूरोऽश्रुनिरुद्धकण्ठकुहरः प्रेमाब्धिमग्नोऽजनि ॥ ९७

97. அக்ரூரன் கம்ஸனது ஆணைக்கு மட்டும் கட்டுப்பட்டவனாயினும் உம் திருவடிகளைக் கண்டதும் கண்ணீர் மல்கிக் குரல் கம்மி, அன்புக் கடலில் மூழ்கினான். அவனது பிறவி, அவனது பெற்றோர், குலம், வாழ்ந்த இடம், ஏன் இந்த உலகமும் கூட எல்லாம் பாக்கியம் பெற்றவை.

पर्यावृत्त्य पशूनशेषसखिभिः साकं त्वया स्वीकृते
गोपीलोचनपङ्कजालिनिचिते सायं गवामध्वनि ।
जीयासुर्दयितानेनेषु नितरां साकूतनृत्याकुलाः
कालिन्दीसदृशाः स्मितेन सुरसास्त्वच्चक्षुषोः कान्तयः ॥ ९८

98. நண்பர் அனைவருடன் பசுக்களைத் திருப்பி ஓட்டிக் கொண்டு பசுக்கள் செல்லும் பாதையை மாலையில் ஏற்றதும்,

கோபிகளின் பார்வை அங்கேயே பதிந்தது. உம் கண்களின் ஒளிகள் காதலிகளின் முகத்தில் ரகசியச் செய்திகளுடன் யமுனை போல் புன் சிரிப்பால் கவர்ச்சியுற்று நடனமாடின.

यो वाचो मनसोऽपि नैव विषयस्तं त्वां विधायात्मजं
याऽभ्यङ्गस्नपनाशनप्रभृतिभिः संलालयत्यन्वहम्।
नो दानेन न चेज्यया न तपसा नो सांख्ययोगादिभि-
र्यल्लभ्यं तदवाप गोपदयिता साऽऽस्तां यशोदा मुदे॥ ९९

99. வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத உம்மை பிள்ளையாகப் பெற்றாள். தினமும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி உணவு முதலியவற்றால் லாலனை செய்கிறாள். தானத்தாலோ வேள்வியாலோ தவத்தாலோ, தத்துவ ஆராய்ச்சி யோக முறை முதலியவற்றாலோ, கிடைக்கப் பெறாத ஒன்றை நந்தனின் மனைவி யசோதை பெற்றாள். அவள் நமக்கு ஆனந்தமளிக்கட்டும்.

पूर्णे दानपतेर्मनोरथशतैः सार्धं प्रलम्बारिणा
तल्पे निन्दितदुग्धसिन्धुसुषमासारे त्वया स्वीकृते।
संदष्टोष्ठमुदश्रु मर्दितकरं तच्चेष्टितं शृण्वतः
कंसध्वंसमभीप्सतो जयति ते भ्रात्रा समं मन्त्रणा॥ १००

100. பாற்கடலின் சாரமான வெண்ணெய்யைப் பழிக்கின்றதும் அக்ரூரரின் பல விருப்பங்களை நிரப்பியதுமான கட்டிலில் பிரலம்பனின் எதிரியான பலராமனுடன் படுத்து, பற்களைக் கடித்துக் கொண்டு கைகளைப் பிசைந்து கொண்டு கம்ஸனின் நடவடிக்கைகளைப் பற்றிக் கேட்டுணர்ந்து கம்ஸனின் அழிவை விரும்புகிற நீர் சகோதரரான பலராமருடன் கூடி ஆலோசித்தது சிறப்புடன் விளங்குகிறது.

या संव्याप्य सुवर्णभूधरपदं जाता गिरीशार्चिता
स्वच्छा हंसकविप्रिया कमलमुद्राम्भीर्यमभ्यञ्चति।

येयं कृष्णपदाब्जभक्तिवसुधापातालमालम्बिता
सा तापं मम सर्वतः प्रशमयत्वानन्दमन्दाकिनी ।। १०१

*101. இந்த ஆநந்தம் பெருகிற மந்தாகினி (கங்கை) ஸுவர்ண (நல்ல அக்ஷரங்கள்) மலையடிவாரத்தை வியாபித்து சிவனால் வணங்கப் பெற்றது, தெளிவானது. ஹம்ஸர்களான கவிகளுக்குப் பிரியமானது. கம்பீரத்துடன் தாமரையைக் குளிர்விக்கிறது. கிருஷ்ணரின் திருவடிகளில் பக்தியென்ற பூமியையும் பாதாளத்தையும் அடித்தளமாகக் கொண்டது. இந்த ஆனந்தமந்தாகினீ என்னுள் உள்ள தாபமனைத்தையும் சமனம் செய்யட்டும்.*

ये पाण्डित्यकवित्वसूनुधरणीधर्मार्थकामाणिमा-
दीशित्वेन्द्रपदाप्तिमोक्षमथवा वाञ्छन्ति भक्तिं हरौ ।
संभूतां मधुसूदनप्रपदतः सन्तो भजन्त्वादरात्
ते संसारदवाग्नितापशमनीमानन्दमन्दाकिनीम् ।। १०२

*102. பண்டித அறிவு, கவிதை, பிள்ளைப் பேறு, பூமி, அறம், பொருள், இன்பம், அணிமா முதல் ஈசித்வம் வரை உள்ள சித்திகள், இந்திர பதவி, முக்தி அல்லது ஹரியிடம் பக்தி இவற்றை விரும்புபவர், மது ஸூதனரிடமிருந்து தோன்றிய ஆனந்த மந்தாகினியை தனக்கெனக் கொள்ளட்டும். அது பிறப்பு இறப்புத் தொடர் என்ற காட்டுத் தீயைச் சமனம் செய்வது.*

इति

श्रीमन्नन्दनन्दनपदद्वन्द्वसमुदञ्चन्नखचन्द्रचन्द्रिकाचयदत्तचित्तचकोर
श्रीमधुसूदनसरस्वतीविरचितानन्दमन्दाकिनी संपूर्णा ।

श्रीपराशरभट्टविरचितः

# श्रीरङ्गराजस्तवः

ஸ்ரீ பராசரபட்டர் இயற்றிய

# ஸ்ரீரங்கராஜஸ்தவம்

## पूर्वशतकम् - பூர்வശதகம்

**अस्ति वस्त्विदमित्थन्त्वप्रसङ्ख्यानपराङ्मुखम्।**
**श्रीमत्यायतने लक्ष्मीपदलाक्षैकलक्षणम्॥ १**

*இன்னதென்றும் இவ்வாறுள்ளதென்றும் அறுதி இட்டுக் கூற முடியாததான பெரும் பொருள் ஒன்று சீர்மிக்க (ஸ்ரீரங்க) ஆலயத்தினுள் உள்ளது. அது லக்ஷ்மீ தேவியின் திருவடியிலிட்ட செம்பஞ்சுக் குழம்பைத் தன் அடையாளமாகக் கொண்டது. (பகவானின் திருமேனியில் திருமார்பில் அமர்ந்துள்ள தேவியின் காலிலிட்டச் செம்பஞ்சுக் குழம்புபட்டுள்ளது.) (1)*

**लक्ष्मीकल्पलतोत्तुंगस्तनस्तबकचञ्चलः।**
**श्रीरङ्गराजभृङ्गो मे रमतां मानसांबुजे॥ २**

*ஸ்ரீரங்கராஜர் ஒரு வண்டு. லக்ஷ்மியாகிய கற்பகக் கொடியிலுள்ள மேடிட்ட மார்பகமாகிய பூங்கொத்தைச் சுற்றி வருகிறது. அது என் மனத் தாமரையில் களிக்கட்டும். (2)*

**स्वस्ति श्रीस्तनकस्तूरीमकरीमुद्रितोरसः।**
**श्रीरङ्गराजात् शरदः शतमाशास्महे तमाम्॥ ३**

*தேவியின் மார்பகத்தில் இட்ட கஸ்தூரியாலான பூச்சு ரேகைகள் ஸ்ரீரங்கராஜரின் மார்பில் ஒட்டிக் கொண்டுள்ளன. அவ்விதத் திருமார்புள்ள ஸ்ரீ ரங்கராஜரிடமிருந்து நன்மையையும் நூற்றாண்டு வாழ்வையும் மிகவும் வேண்டுவோம். (3)*

पातु प्रणतरक्षायां विलम्बमसहन्निव ।
सदा पञ्चायुधीं बिभ्रत् स नः श्रीरङ्गनायकः ॥ ४

*அண்டியவரைக் காப்பதில் தாமதத்தைப் பொறுக்காதவர் போல் எப்போதும் ஐந்து ஆயுதங்களையும் ஏந்தி நிற்கிற ஸ்ரீ ரங்கநாயகர் நம்மைக் காக்கட்டும். (சக்கிரம், சங்கு, கதை, சார்ங்கவில், உடைவாள் என்று ஐந்து ஆயுதங்கள்.) (4)*

अमतं मतं मतमथामतं स्तुतं परिनिन्दितं भवति निन्दितं स्तुतम् ।
इति रङ्गराजमुदजूघुषत्त्रयी स्तुमहे वयं किमिति तन्न शक्नुमः ॥ ५

*பரமன் அறிய முடியாதவர் என உணர்ந்தால் அறியப்பட்டதாகும். பரமன் அறியக் கூடியவர் எனக் கருதினால் அறியப்படாதவர் ஆவர். அவரைத் துதிக்க முடியுமெனில் இகழப்பட்டதாகும். பாராட்டமுடியாதவர் என்றால் துதித்ததாகும் என வேதம் ரங்கராஜரை உரக்கக் கூறும். எவ்வாறு நாம் துதிக்க முடியும் ? துதிக்க இயலாதவராக உள்ளோம்.*

*அவரது பெருமையை முழுவதும் உணர்ந்தவரே அவரைத் துதிக்க இயலும். அப்பெருமை மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதது. அவரைப் பற்றி அறிய இயலவில்லையே எனக் குறைப்பட்டால் அதுவே அவரைப் பற்றிச் சரியாக உணர்ந்ததாகும். (5)*

यदि मे सहस्रवदनादिवैभवं निजमर्पयेत्स किल रङ्गचन्द्रमाः ।
अथ शेषवन्मम च तद्वदेव वा स्तुतिशक्त्यभाव विभवेऽपि भागिता ॥ ६

*(பகவானைத் துதிக்க எனக்கு எள்ளளவாவது தகுதி இருந்தால் அவரை முழுவதும் துதிக்க இயலாதெனலாம்.) (புருஷ ஸூக்தம் முதலானவை குறிப்பிடுகின்ற) ஆயிரம் வாய்கள் உள்ளவன் என்பது முதலான தனது தனிச் சிறப்புகளை அந்த ஸ்ரீ ரங்கசந்திரன் எனக்கு அளித்திருந்தாலும், அல்லது ஆயிரம் தலைபடைத்த ஆதிசேஷனே அல்லது அவராகவோ ஆகியிருந்தாலும் அவரைத் துதிக்கிற தகுதியில்லை என்று*

பெருமையுடன் கூறிக் கொள்ள வாய்ப்பிருக்கும். (ஆயிரம் நாபடைத்த ஆதிசேஷனே அல்லது ஸ்ரீ ரங்கநாதப் பெருமானே கூட அவரது பெருமையை முழுவதும் கூற முடியாதெனில், அடியேனுக்கு ஏது தகுதி ? தகுதியற்றவன் எனக் கூறிக் கொள்ளக் கூட தகுதி இல்லை) (6)

**सो अङ्ग वेद यदि वा न किलेति वेदः**
**सन्देग्ध्यनर्घविदमात्मनि रंगनाथम्।**
**स्थाने तदेव खलु दोषमलीमसाभिः**
**मद्वाग्भिरैशमतिशायनमावृणोति ॥ ७**

அவர் தன் பெருமையை அறிந்தாரோ இல்லையோ என வேதமும் தனக்குள் ஐயப்படுகின்றது. அது உசிதமே. ஆனால் இந்தப் பெருமானே குறைமிக்க என் சொற்களால் தனது பேராளுமையின் உயர்வை மறைத்துக் கொள்கிறார். (7)

**स्वं संस्कृतद्राविड वेद सूक्तैर्भान्तं मदुक्तैर्मलिनीकरोति।**
**श्रीरङ्ग कम्रः कलभं क एव स्नात्वाऽपि धूलीरसिकं निषेद्धा ॥ ८**

ஸ்ரீரங்கத்தில் நாட்டமிக்க பெருமான் ஸம்ஸ்கிருதம் மற்றும் தமிழ் வேத நல்லுரைகளால் நன்கு விளக்கம் பெற்ற தன்னை என் சொற்களால் மலினமாக்கிக் கொள்கிறார். நீராடிய பின்னரும் புழுதியில் ரஸித்து விளையாடுகிற யானையை யார் தான் தடுக்கமுடியும் ? (8)

**किन्तु प्रपत्तिबलतारितविष्णुमाय-**
**मद्वंश्यराजकुलदुर्ललितं किलैवम्।**
**श्रीरङ्गराजकमलापदलालितत्वं**
**यद्वाऽपराध्यति मम स्तुतिसाहसेऽस्मिन् ॥ ९**

ஆனால், என் முன்னோர்கள் உயர் குலப் பிறப்பாலும் ஈசனைச் சரணடைந்த வலிவாலும் விஷ்ணுமாயையைக் கடந்தவர். அக்குலத்தில் பிறந்த செருக்கும் ஸ்ரீ ரங்கராஜர் மற்றும் லக்ஷ்மியின் திருவடிகளில் சீராட்டி வளர்க்கப்

பெற்றதும் என்னை இந்தத் துதியாகிய அடாத செயலில் இறங்குகிற குற்றத்திற்கு உள்ளாக்கி உள்ளது. (9)

नाथस्य च स्वमहिमार्णवपारदृश्व-
विज्ञानवाग्विलसितं सहते न वेदः ।
आपेक्षिकं यदि तदस्ति ममापि तेन
श्रीरङ्गिणः स्तुतिविधावहमध्यकार्षम् ॥ १०

வேதமும், ஈசனுக்கே தன் பெருமைக் கடலின் கரை காண ஜ்ஞானமுண்டு என்று சொல்வதற்குத் துணியவில்லை. மற்றவரை விட இவருக்கு அதில் தகுதி உண்டு என ஏற்றுக் கொண்டால், அதே தகுதி எனக்கும் (மற்றவரை விட) ஸ்ரீ ரங்கத்தாரைத் துதிப்பதில் உண்டு என இதில் பொறுப்பேற்கிறேன். (10)

अन्यत्रातद्गुणोक्तिर्भगवति न तदुत्कर्षचौर्यैः परेषां
स्तुत्यत्वाद्यावदर्था फणितिरपि तथा तस्य निःसीमकत्वात् ।
आम्नायानामसीम्नामपि हरिविभवे वर्षबिन्दोरिवाब्धौ
संबन्धात्स्वात्मलाभो न तु कवलनतः स्तोतुरेवं न किं मे ॥ ११

துதிக்கவிருப்பவரிடம் இல்லாத சிறப்பை அவர் மீதேற்றிப் புகழ்வதென்பது எம்பெருமானைத் தவிர மற்றவரிடம் பொருந்தும். பகவானிடத்தில் பொருந்தாது. அவரது பெருமைகளைத் திருடித் தான் மற்றவரைத் துதிக்க நேரும். பகவானிடம் அவரது பெருமைகளுள்ள அளவில் வாயால் துதித்து முடிப்பதும் இயலாததே. அவரது பெருமை அளவு கடந்தது. எல்லையற்ற வேதங்களுக்கும் பகவத் குணத்தைச் சொல்வதில் மழைத்துளி கடலில் கலப்பது போன்று பகவானுடன் தாமும் கலந்து கொண்டதாக ஒரு ஆத்ம திருப்தி. முழுவதையும் கரைத்துக் குடித்ததான நிறைவல்ல அது. எனக்கும் அவ்வாறு ஒரு தொடர்பு கிட்டாதா ? (11)

कावेरीमवगाहिषीय भगवद्भोगान्तरायीभवत्
कर्मक्लेशफलाशय प्रशमनोद्वेलामलस्रोतसम् ।
जन्तोः संसरतोऽर्चिरादि सरणिव्यासङ्गभङ्गाय या
लोकेऽस्मिन् विरजेव वेल्लितजला श्रीरङ्गमालिङ्गति ॥ १२

*காவேரியாறு விரஜாநதி போன்று பிறப்பிறப்புச் சுழலில் சிக்கி அர்ச்சிராதி மார்க்கத்தில் அலேபடுவதை நீக்க இவ்வுலகில் பேரலே மிக்கதாக ஸ்ரீரங்கத்தை அணேத்துக் கொள்கிறது. பகவானின் அருளுக்கு ஆட்படுவதில் இடையூருக உள்ள விணேகளும் அவற்ருல் நேர்கிற உள்ளத்து குறைபாடுகளும் விணேப் பயனும் அதனுல் ஏற்படுகிற உள்ளத்தில் பதிகிற வாஸனே மற்றும் ஸம்ஸ்காரங்களும் நீங்க அலேபாய்கிற தூய நீர்ப்பெருக்குள்ள காவேரியில் அமிழ்ந்து நீராடுகிறேன். (12)*

दुग्धाब्धिर्जनको जनन्यहमियं श्रीरेव पुत्री वरः
श्रीरङ्गेश्वर एतदर्हमिह किं कुर्यां इतीवाकुला ।
चञ्चच्चामर चन्द्रचन्दन महामाणिक्यमुक्तोत्करान्
कावेरीलहरी करैर्विदधती पर्येति सा सेव्यताम् ॥ १३

*பாற்கடல் தந்தை. நானே தாய், இந்த ரங்கநாயகி என் புதல்வி. ஸ்ரீரங்கத்தீசனே அவளது மணவாளன். இவ்விருவருக்குமேற்ப என்ன செய்யலாம் எனக் காவேரி கவலேப்பட்டு அழகிய சாமரம், பச்சைக் கற்பூரம், சந்தனம், சிவப்பு ரத்தினம், மற்றும் முத்துக் குவியலேத் தனது அலேகளாகிற கைகளில் ஏந்தி எம்பெருமானே அணுகுகிருள். அதில் நீராடுவீர். (13)*

तीर्थं शुन्धति पाति नन्दनतरून् रथ्याङ्गणान्युक्षति
स्नानीयार्हणपानवारि वहति स्नातः पुनीते जनान् ।
श्यामं वेदरहो व्यनक्ति पुलिने फेनैर्हसन्तीव तत्
गङ्गां विष्णुपदीत्वमात्रमुखरां हेमापगा हन्त्यघम् ॥ १४

பொன்னி (காவேரி) புண்ணிய தீர்த்தங்களைத் தூயவையாக்குகிறது. நந்தனத் தோட்டத்து மரங்களைக் காக்கிறது. வீதிகளில் நீர் தெளிக்கிறது. நீராடவும் வழிபடவும் பருகுவதற்கும் நீர் வழங்குகிறது. நீராடுகிற மக்களைத் தூயவராக்குகிறது. வேதத்தின் உட்பொருளான பெருமாளை மணல் திட்டில் காட்டுகிறது. விஷ்ணுவின் திருவடிகளில் தோன்றியவள் என்று தன்னை முன் நிறுத்திக் கொள்கிற கங்கையைக் கண்டு நுரைகள் மூலம் சிரிக்கிறாள் போலும். அந்தக் காவேரி நம் பாபத்தைப் போக்கட்டும். *(14)*

अगणितगुणावद्यं सर्वं स्थिरत्रसमप्रति-
क्रियमपि पयः पूरैराप्याययन्त्यनुजाग्रती।
प्रवहति जगद्धात्री भूत्वेव रङ्गपतेर्दया
शिशिरमधुरा गाधा सा नः पुनातु मरुद्वृधा ॥ १५

காற்றடிப்பதற்கேற்ற நீர் பெருக்கு அதிகமாகிற காவேரி, பிராயச்சித்தம் செய்ய இயலாத அசைவதும் அசையாததுமான பொருட்களனைத்தையும் குணதோஷங்களை ஆராயாமல் நீர்ப் பெருக்கால் போஷித்தும் எப்போதும் கடமை புரிய விழித்திருந்தும், ரங்கபதியின் பரிவு போல் உலகைத் தாங்குகிற தாயாகிப் பெருக்கெடுத்தோடி வருகிறாள். குளிர்ந்தும் இனித்தும் ஆழ்ந்தும் ஓடுமவள் நம்மைத் தூயவராக்கட்டும். *(15)*

तरलतनुतरङ्गैर्मन्दमान्दोल्यमान-
स्वतटविटपिराजीमञ्जरी सुप्तभृङ्गा।
क्षिपतु कनकनाम्नी निम्नगा नारिकेल-
क्रमुकजमकरन्दैः मांसलापा मदंहः ॥ १६

எப்போதும் அலைகிற சிற்றலைகளால் அசைந்தாடுகிற தன் கரையிலுள்ள சோலையின் பூங்கொத்துகளில் (தேனுண்டு) வண்டுகள் உறங்க, தென்னையிலும் பாக்குமரத்திலும் உள்ள பூந்தாதுக்களால் குழம்பிய நீருள்ள பொன்னியாறு என் பாபத்தைப் போக்கட்டும். *(16)*

कदलवकुलजंबूपूगमाकन्दकण्ठ-
द्वयससरसनीरामन्तरा सह्यकन्याम्।
प्रबलजलपिपासालंबमानांबुदौघ-
भ्रमकरतरुबृन्दं वन्द्यतामन्तरीपम्॥ १७

வாழை, மகிழ், நாவல், பாக்கு மற்றும் தேன் மாமரங்களின் கழுத்தளவில் இனிய நீர் பெருகுகிற காவேரியின் இடையே, நீரைப் பருகுவதில் மிக அதிக நாட்டத்தால் கீழ் இறங்கிய மேகக் கூட்டமோ என்று திகைப்பூட்டுகிற சோலையுடன் ஒரு தீவு உள்ளது. அது வணங்கப் பெறட்டும். (17)

यद्विष्णोः पदमतमः परोरजोऽग्र्यं
मुक्तानामनुविरजं विदीप्रमाहुः।
तत्पुण्यं पुलिनमिदन्तयाऽद्य मध्ये-
कावेरि स्फुरति तदीक्षिषीय नित्यम्॥ १८

விரஜையாற்றங்கரையில் தமோகுணமும் ரஜோகுணமும் அற்ற சிறந்த விஷ்ணுவின் இருப்பிடமான பரமபதம் ஒன்று முக்தி பெற்றவர்களுக்கு மட்டும் புலப்படுவதாகச் சொல்கின்றனர். அந்தத் தீவு இன்று இதோ எனக் காட்டத்தக்கதாக காவேரியின் நடுவில் துலங்குகிறது. அதனை எப்போதும் காண்பேன். (18)

त्र्यन्तप्रहतिमतीषु वैष्णवानां प्राप्यासु प्रचुरभवश्रमापहासु।
कावेरीपरिचरितासु पावनीषु श्रीरङ्गोपवनतटीषु वर्तिषीय॥ १९

வேதாந்தக் கருத்துக்களில் ஆழ்ந்து ஆராய்பவையும் பிறப்பிறப்புத் தொடரின் தளர்ச்சியைப் போக்குபவையும் தூயவையும் தூயதாக்குபவையும் ஸ்ரீ விஷ்ணுவின் அடியார்களுக்குப் புகலிடமும் காவேரியால் சுற்றிப் பாசனம் பெற்றவையுமான ஸ்ரீ ரங்கத்துச் சோலைகளில் வாழ்வேன். (19)

स्फुरित शफरदीर्णनालिकेरीगुलुच्छ-
प्रसृमरमधुकुल्यावर्धितानोकहानि ।
रतिमविरति रङ्गारामरम्यस्थलानि
क्रमुकपनसमोचामेचकानि क्रियासुः ॥ २०

ஸ்ரீ ரங்கத்துத் தோட்டங்களின் அழகிய நிலங்கள் பாக்கு பலா வாழை முதலியவற்றால் பசுமையுடன் உள்ளவை. துள்ளிப் பாய்கிற மீன்கள் குத்தி விரிசலடைந்த தென்னங்குலைகளிலிருந்து பெருகுகிற இளநீர் கலந்து இனிக்கிற வாய்க்கால் நீரால் போஷிக்கப் பெறுபவை. அந்த சோலைப் புறங்கள் நம்மை இடைவிடாமல் மகிழ்விக்கட்டும். (20)

अधिपरमपदं पुरीमयोध्यां अमृतवृतां अपराजितामुशन्ति ।
पुलिनमुपरि रङ्ग राजधानी पिशितदृशामपि सा पुरश्चकास्ति ॥

பரமபதத்தில் அயோத்யை என்றும் அபராஜிதா என்றும் பெயருடைய அமுதத்தால் சூழப்பட்ட பட்டணம் உள்ளது என்பர். (அது பிறரால் வென்று தன் வசப்படுத்த முடியாதது என அப்பெயர்.) அதே பட்டணம் காவேரியின் மணல் திட்டில் ரங்கராஜதானியாக மாமிசக் கண்களுக்கும் புலப்படும்படி நம் முன் விளங்குகிறது. (அம்ருதே நாவ்ருதாம் புரீம். தேவா நாம் பூரயோத்த்யா விவேசாபராஜிதா என வேதவாக்கு) (21)

भवपदमपि दिव्यधाम कर्तुं तदुभयतन्त्रितहर्म्यमालिकेव ।
भवनमणितलैर्विजृंभमाणा जयतितरामिह रङ्ग राजधानी ॥ २२

பிறப்பும் இறப்புமுள்ள உயிரினம் வாழ்கிற இவ்வுலகையும் தேவலோகமாகச் செய்ய இவ்விரு உலகங்களின் இயல்பான சீரும் சிறப்பும் பெற்ற மாடமாளிகை வரிசைகளின் ரத்னங்கள் பதித்த தளங்களால் பெருவளர்ச்சி பெற்ற ரங்கத்தலை நகரம் இங்கு பெருமையுடன் விளங்குகிறது. (22)

मणिमकररुचीर्वितत्य पाशान् विसृमरकेतुकरैर्मृगं हिमांशोः ।
श्रिय इव नवकेलये जिघृक्षुः सुखयति रङ्ग पुरी चकासती नः ॥२३

*ரத்தின மயமான மகரதோரணங்களின் ஒளியை வலையாகப் பரப்பி, மேலே பறக்கும் கொடிகளாகிய கைகளால் சந்திரனிடமுள்ள மானை லக்ஷ்மீ தேவியின் புதுப் புது விளையாடலுக்காகப் பிடிக்க விரும்பியது போன்று ரங்க நகரி விளங்குகிறது. அது நம்மை மகிழ்விக்கிறது. (வானளாவிய மாடமாளிகைகளின் மீதுள்ள கொடிகள் வானில் சந்திர மண்டலத்தைத் தொடுகின்றன.) (23)*

जनपदसरिदन्तरीपपुष्यत्पुरपरिपालननित्यजागरूकान् ।
प्रहरणपरिवारवाहनाढ्यान् कुमुदमुखान्गणनायकान्नमामि ॥ २४

*மக்கள் வாழ்கிற காவேரித் தீவில் வளர்ந்து வருகிற நகரைக் காப்பதில் எப்போதும் விழித்துள்ளவர்களும் தக்க ஆயுதங்கள் பரிவாரங்கள் மற்றும் வாஹனங்கள் கொண்டவர்களுமான குமுதன் முதலிய நகரப் பாதுகாப்புக் குழுத்தலைவர்களை வணங்குகிறேன். (குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்ககர்ணன், ஸர்ப்பநேத்ரன், ஸுமுகன் ஸுப்ரதிஷ்டிதன் என அவர்கள் எண்மர்.) (24)*

अहृतसहजदास्याः सूरयः स्रस्तबन्धाः
विमलचरमदेहा इत्यमी रङ्गधाम ।
महितमनुजतिर्यक्स्थावरत्वाः श्रयन्ते
सुनियतमिति ह स्म प्राहुरेभ्यो नमः स्तात् ॥ २५

*இயல்பாகவே இறையடிமை நிலை கொண்ட நித்ய ஸூரிகளும் பற்றற்ற முக்தர்களும் வினை நீங்கியதால் கடைப் பிறவியாக உடலைப் பெற்றவர்களும் ஸ்ரீ ரங்கத்தில் மனிதராக மிருகமாகப் பறவையாக மரமாகப் பிறப்பதை விரும்பி ஏற்று வாழ்கின்றனர் எனப் பெரியோர் கூறுவர். இவர்களை வணங்குவோம். (25)*

श्रीरङ्गदिव्यभवनं भुवि गोपुराणां प्राकारितेन निकरेण गरुत्मतेव।
पार्श्वप्रसारित पतत्रपुटेन भक्त्या नानातनूभिरुपगूढमुपघ्नयामः ॥ २६

சுற்றி மதில்கள் கொண்ட கோபுர வரிசை இருபுறங்களிலும் சிறகுகளை விரித்த கருடனைப் போன்றுள்ளது. பக்தியுடன் பூமியில் பல வடிவங்களை ஏற்று ஸ்ரீ ரங்க திவ்ய ஆலயத்தை மறைத்து அவர் காக்கிறார் போலும். அதனை அண்டி நிற்போம். (26)

प्राकारमध्याजिरमण्डपोक्त्या सद्वीपरत्नाकररत्नशैला।
सर्वंसहा रङ्गविमानसेवां प्राप्तेव तन्मन्दिरमाविरस्ति ॥ २७

ஸ்ரீ ரங்க ஆலயத்தில் மதில்கள், இடைகழி, மண்டபங்கள் எனும் சாக்கில் துவீபங்களும் கடலும் மேரு போன்ற ரத்தின மலைகளும் தொடரப் பூமிதேவி தானே ரங்க விமானத்தின் சேவையைப் பெற்றுள்ளாள் போலும். அந்த ரங்கனின் திருக்கோயில் எதிரே தென்படுகிறது. (27)

जितबाह्यजिनादिमणिप्रतिमा अपि वैदिकयन्निव रङ्ग पुरे।
मणिमण्टपवप्रगणान्विदधे परकालकविः प्रणमेमहि तान् ॥ २८

திருமங்கை மன்னர் என்ற பரகாலர் தன்னால் வெல்லப்பட்ட ஜைனர் முதலானோரின் தங்க விக்ரஹங்களை வைதிகமாக்க (இறைபணியில் பயன்படத்தக்கதாக்க) ஸ்ரீ ரங்க நகரில் (விக்ரஹங்களைப் பொன்னாக்கிப் பெற்ற செல்வத்தால்) பல மணிமண்டபங்களையும் மதில்களையும் அமைத்தார். அவற்றை வணங்குவோம். (28)

स्मेराननाक्षिकमलैर्नमतः पुनानान्
दंष्ट्रागदाभ्रुकुटिभिर्द्विषतो धुनानान्।
चण्डप्रचण्डमुखतः प्रणमामि रङ्ग-
द्वारावलीषु चतसृष्वधिकार भाजः ॥ २९

கோயிலின் நான்கு வாயில்களிலும் காவல் அதிகாரம் பெற்ற சண்டர் பிரசண்டர் முதலானோர், மலர்ந்த தாமரை

போன்ற புன் சிரிக்கும் முகத்துடன் வணங்குபவர்களைப் புனிதராக்குகின்றனர். கோரைப் பற்கள் தடி மற்றும் புருவ நெரிப்பால் எதிரிகளை நடுங்கச் செய்கின்றனர். அவர்களை வணங்குகிறேன். (29)

सर्वात्मसाधारणनाथगोष्ठीपूरेऽपि दुष्पूरमहावकाशम्।
आस्थानमानन्दमयं सहस्रस्थूणादिनाऽऽम्नातमवाप्नवानि॥ ३०

ஆயிரக் கால் மண்டபம் எனப் பெயர் பெற்றது அது. எல்லோருக்கும் பொதுவான ஸ்ரீ ரங்கநாதரின் கோஷ்டியால் நிரப்பப் பெற்றது. நிரப்ப முடியாத பேரிடம். ஆநந்தமே வடிவெடுத்த ஆஸ்தான மண்டபம். அதனை அடைகிறேன். (30)

विहरति हरौ लक्ष्म्या लीलातपत्रपरिष्क्रिया-
विनिमय विधासूना सूनिक्रिया सफलोत्पलाम्।
अथ मुनिमनःपद्मेष्वब्जासहायविहारज-
श्रमहरतटीं यामस्तामैन्दवीमरविन्दिनीम्॥ ३१

சந்திர புஷ்கரிணியை அடைகிறோம். ஸ்ரீ ரங்கநாதர் லக்ஷ்மியுடன் ஜலக் கிரீடை செய்யும் போது, லீலையாக ஏந்துகிற குடையாக, காதணி போன்ற அணிகலனாக, பூப்பந்தாட மற்றும் விளையாட உதவுவதால் பயன் பெற்ற அல்லி மலர்களைக் கொண்டது. முனிவர்களின் இதயத் தாமரைகளில் லக்ஷ்மியுடன் விளையாடியதன் களைப்பை அகற்றவல்ல கரையைக் கொண்டது. (31)

तापत्रयीमैन्दवपुष्करिण्यां निमज्ज्य निर्वापयिताऽस्मि यस्याः।
अभ्यासतोऽपामघमर्षणीनां चन्द्रः सुधादीधितामवाप॥ ३२

சந்திரன் இந்த புஷ்கரிணியின் பாபம் தீர்க்க வல்ல நீரில் மூழ்கி அம்ருதகிரணன் ஆனான். அதில் நானும் நீராடி ஆத்யாத்மிக - ஆதிபௌதிக - ஆதிதைவிக தாபங்களைத் தணிப்பேன். (32)

पूर्वेण तां तद्वदुदारनिम्न प्रसन्न शीताशयमग्रनाथाः ।
पराङ्कुशाद्याः प्रथमे पुमांसो निषेदिवांसो दश मां दयेरन् ।। ३३

*சந்திர புஷ்கரிணியின் கிழக்கே அந்தப் புஷ்கரிணி போன்றே பெருந்தன்மையும் கம்பீரமும் தெளிவும் கொண்ட இதயத்தில் பெருமானைக் கொண்ட பராங்குசர் (நம்மாழ்வார்) முதலிய பத்து ஆழ்வார்களும் என் மீது பரிவு காட்டட்டும். (33)*

आधारशक्तिमुपरि प्रकृतिं परेण तां कूर्ममत्र फणिनं पृथिवीं फणासु ।
पृथ्व्यां पयोधिमधि तन्नलिनं निधाय श्रीरङ्गधाम सुनिविष्टमभिष्टवानि ।।

*கீழே ஆதார சக்தி, அதன் மீது பிரக்ருதி, அதன் மீது கூர்மர், அவர் மீது ஆதிசேஷன், அவரது படங்கள் மீது பூமி, அதன் மீது கடல், அதில் எட்டு தளத் தாமரை, அதன் மீது ரங்க விமானம். இதனைத் துதிக்கிறேன். (34)*

परेण नाकं पुरि हेममय्यां यो ब्रह्मकोशोऽस्त्य पराजिताख्यः ।
श्रीरङ्गनाम्ना तमपौरुषेयं विमानराजं भुवि भावयानि ।। ३५

*ஸ்வர்கத்திற்கும் அப்பால் தங்கமயமான பட்டணத்தில் அபராஜிதா என்ற பிரும்ஹகோசம் (பரம்பொருளிடம்) உள்ளது. அது மனித ஆற்றலால் அமைந்ததல்ல. அந்தச் சீர்மிக்க விமானமே, ஸ்ரீ ரங்கம் என்ற பெயரில் இவ்வுலகில் உள்ளது. அதனை உள்ளத்தில் உருவகப்படுத்திக் கொள்கிறேன். (35)*

अनाद्याम्नातत्वात्पुरुषरचनादोषरहितं
जने तांस्तान्कामान् विदधदपि सायुज्यहृदयम् ।
असन्देहाध्यासं भगवदुपलंभस्थलममी
प्रतीमः श्रीरङ्गं श्रुतिशतसमानर्द्धि शरणम् ।। ३६

*ஆதியற்றுத் தானே வெளிப்பட்டதால், மனித ஆற்றலால் நிகழ்கிற குறை ஏதும் அற்றது. மக்களின் அந்த அந்த விருப்பத்தை அளிப்பதெனினும் தன்னோடு இரண்டறக்*

கலப்பதையே முக்கியமாகக் கருதுவது. ஐயமோ மாறுபாடோ இன்றி பகவானைக் கண்டுணருமிடம். நூற்றுக்கணக்கான வேதங்களோடொத்த சீர் மிக்கது. இந்த ஸ்ரீரங்கத்தைப் புகலிடமாக நம்பி ஏற்போம். (36)

**अपि फणिपतिभावात् शुभ्रमन्तःशयालोः**
**मरकतसुकुमारैः रंगभर्तुर्मयूखैः ।**
**सकलजलधिपानश्यामजीमूतजैत्रं**
**पुलकयति विमानं पावनं लोचने नः ॥ ३७**

இந்த விமானம் ஆதிசேஷரின் வடிவமானதால் வெண்ணிறம் கொண்டதெனினும் அதனுள் சயனித்திருக்கிற ரங்கநாதரின் மரகதப் பச்சையொளிக் கதிர்களால், கடல் முழுவதையும் பருகிக் கருத்த மேகத்தையும் வெல்கிறது. அது நம் கண்களைச் சிலிர்க்கச் செய்கிறது. (37)

**व्यापि रूपमपि गोष्पदयित्वा भक्तवत्सलतयोज्झितवेलम् ।**
**तद्द्विषन्तपनृकेसरिरूपं गोपुरोपरिविजृंभितमीडे ॥ ३८**

மேட்டழகிய சிங்கர் - வானளாவுகிற தன் உருவை மாட்டுக் குளம்படியளவில் குறுக்கிக் கோபுரத்தின் மீது விளங்குகிறதும் பக்தன் பிரஹ்லாதனிடம் அன்பால் தன் வரம்பை மீறி வந்து ஹிரண்யகசிபு எனும் எதிரியை அழித்ததுமான நரஸிம்ஹ வடிவைத்துதிக்கின்றேன். (38)

**अहमलमवलंबः सीदतामित्यजस्रं निवसदुपरिभागे गोपुरं रंगधाम्नः ।**
**क्वचन नृपरिपाटीवासितं क्वापि सिंहक्रमसुरभितमेकं ज्योतिरग्रे चकास्ति ॥**

துயருற்றவருக்கு நானே போதுமான பிடிப்பு தருபவன் என ரங்கனின் கோபுரத்தின் மேற்புறத்தில் எப்போதுமுள்ள அந்தப் பெருஞ்சோதி, ஒரு பகுதியில் மனித வடிவால் அழகுற்றும் மற்றொரு பகுதியில் சிங்க வடிவில் பொலிகிறது. அது எதிரே விளங்குகிறது. (39)

संशोध्य पावनमनोहर दृष्टिपातैः
देवाय मामपि निवेदयतां गुरूणाम्।
सव्योत्तरे भगवतोऽस्य कटाक्षवीक्षा-
पंक्तिं प्रपद्य परितः परितो भवेयम्॥ ४०

குரு - என்னையும் தூயக் கடைக் கண் பார்வையால் தூயவனுக்கிப் பெருமானிடம் சேர்ப்பிக்கிற ஆசாரியர்கள் இந்த பகவானின் இடது வடபுறத்தில் உள்ளனர். அவர்களது கடாக்ஷ வரிசையைப் பற்றி அவர்களைச் சுற்றிச் சுற்றி வலம் வருவேன். (40)

श्रीरङ्गराज करनम्रितशाखिकाभ्यो
लक्ष्म्या स्वहस्तकलितश्रवणावतंसम्।
पुन्नागतल्लजमजस्रसहस्रगीति-
सेकोत्थदिव्यनिजसौरभमामनामः॥ ४१

ஸ்தலவ்ருக்ஷம்-புன்னை - ஸ்ரீ ரங்கராஜரின் கை இதன் கிளைகளை வளைக்க, லக்ஷ்மீ தன் கையாலேயே பறித்துக் காதணியாகப் பூவைக் கொள்கிருள். இதன் நிழலில் அமர்ந்து எப்போதும் திருவாய்மொழி பாடுவதால் ஏற்பட்டத் தனி மணமுள்ள அந்தச் சிறப்பு மிக்கப் புன்னை மரத்தைத் துதிக்கிரேரம். (41)

श्रीरङ्गचन्द्रमसमिन्दिरया विहर्तुं
विन्यस्य विश्वचिदचिन्नयनाधिकारम्।
यो निर्वहत्यनिशमङ्गुलिमुद्रयैव
सेनान्यमन्यविमुखास्तमशिश्रियाम॥ ४२

விஷ்வக்ஸேனா் - ஸ்ரீரங்கசந்திரனை லக்ஷ்மியுடன் விளையாடும்படி (சேஷசயனத்தில்) அமர்த்தி உலகிலுள்ள உணர்வுள்ளதையும் உணர்வற்றதையும் கட்டுப்படுத்துகிற பொறுப்பை எப்போதும் ஆள்காட்டி விரலடையாளத்தால் நிர்வகிக்கிற அந்த சேனை முதலியாரை (விஷ்வக்ஸேனரை) வேறு புகலிடம் நாடாமல் அண்டி நிற்போம். (42)

सैन्यधुरीणप्राणसहायां सूत्रवतीमाशिश्रियमंबाम्।
श्रीपदलाक्षालाञ्छितसेवाप्रोतलस द्दोर्वल्लिविलासाम्॥४३

விஷ்வக்ஸேனரின் தேவி ஸூத்ரவதீ-படைத்தலைவரான விஷ்வக்ஸேனரின் உயிருக்கும் மேலான துணைவி ஸூத்ரவதீ என்ற தாய் லக்ஷ்மியின் திருவடிகளைத் தன் மேலாடை நுனியால் துடைக்க அங்கு திருவடியிலுள்ள செம்பஞ்சுக் குழம்பு ஒட்டியுள்ளது. அவளை அண்டுகிறேன். (43)

विदधतु सुखं विष्वक्सेनस्य ते प्रथमे भटाः
करिमुखजयत्सेनौ कालाह्व सिंहमुखौ च नः।
जगति भजतां तत्तत्प्रत्यूहतूलदवानलाः
दिशिदिशि दिवारात्रं श्रीरङ्गपालन कर्मठाः॥ ४४

விஷ்வக்ஸேனரின் முக்கியத் தொண்டர்படையினரான கஜானனர், ஜயத்ஸேனர், கால ப்ரக்ருதி, ஸிம்ஹமுகன் என்ற நால்வரும், உலகில் தம்மை அணுகுபவரின் அந்தந்த இடையூறுகளை பஞ்சைக் காட்டுத் தீ போன்று அழிப்பவர். இரவும் பகலும் எல்லாத் திசைகளிலும் ஸ்ரீ ரங்கப் பாதுகாப்பில் கருத்து மிக்கவர். அவர்கள் நமக்கு இன்பம் தரட்டும். (44)

श्रुतिमयमतिहर्षप्रश्रयस्मेरवक्त्रं
मणिमुकुरमिवाग्रे मङ्गलं रंगधाम्नः।
शरणमभिगताःस्मो यत्र रूपस्वरूप-
स्वगुणमहिमदर्शी मोदते रङ्गशायी॥ ४५

கருடர் - ரங்கத்தில் சயனித்த பெருமான் கருடரின் உருவ அழகு, உள்ளத்து அழகு, குணச்சிறப்பு இவற்றின் பெருமை உணர்ந்து மகிழ்கிறார். அவரது எதிரில் மங்களமான ரத்னக் கண்ணாடி போன்றமர்ந்து, ஸந்தோஷ மிகுதியாலும் அடக்கத்தாலும் முகம் மலர்ந்து நிற்கிற வேதமே வடிவான அவரைச் சரணடைகிறோம். (45)

तार्क्ष्यपक्षतिवदस्य वल्लभां रुद्रया सह सुकीर्तिमर्चये।
हर्षबाष्पमपि कीर्तिमर्थिनां यन्मुखेन कमला कटाक्षयेत्॥

கருடனின் பத்னிகளான ருத்ரா-ஸுகீர்த்தி என்ற இருவர் மூலமாகவே தன்னை நாடி வந்தவருக்கு ஆனந்தக் கண்ணீரையும் புகழையும் லக்ஷ்மீ தேவி கடாக்ஷித்து அருள்கிறாள். அவ்விருவரும் கருடனின் இரு சிறகுகள் போல். அவர்களை வழிபடுகிறேன். (இவ்விருவரும் லக்ஷ்மிக்கு இரு கண்கள் போன்றவர்.) (46)

स्वास्त्ररूपस्फुरन्मौलि माशब्द इत्युद्धुनानां सुरास्तर्जनीमुद्रया।
नाथनिद्रोचितोन्निद्रताम्रेक्षणां सञ्चरन्तीं स्तुमस्तां च पञ्चायुधीम्॥ ४७

ஆயுதங்கள் - ஸுதர்சனமெனும் சக்கிரம், பாஞ்சஜன்யம் என்ற சங்கம், கௌமோதகீ எனும் கதை, சார்ங்கம் என்ற வில், நந்தகம் எனும் உடைவாள் என்ற பெருமானின் ஐந்து ஆயுதங்களும் தம் தம் ஆயுத நிலையை தங்கள் முடிகளில் விளங்கச் செய்து, சப்தம் போடக் கூடாதென ஆட்காட்டி விரலைக் காட்டி உரக்கக் கூவித் தேவர்களை நடுங்கச் செய்கின்றனர். ரங்கநாதரின் உறக்கத்திற்கு உகந்தவாறு உறக்கமின்றிச் சிவந்த கண்களுடன் உலாவுகின்றனர். அவர்களைத் துதிக்கிறோம். (47)

अस्त्रग्रामाग्रेसरं नाथवीक्षासिन्धुक्षीबोद्वेलनृत्ताभिरामम्।
चक्रं दैत्यच्छेदकल्माषिताङ्गं भ्राम्यज्ज्वालामालभारि प्रपद्ये॥ ४८

சக்கிரத்தாழ்வார் - ஆயுதக் கூட்டத் தலைவர், சக்கிர வடிவினர். நாதரின் கடைக் கண் பார்வையாகிய கடலின் அலையாக பரிவுடன் கரை கடந்து நடனமாடுவதால் அழகாக உள்ளவர். அஸுரரை அறுத்தெறிகையில் ரக்தப் பெருக்கால் அழுக்கடைந்தவர். நடன வேகத்தால் தீப்பிழம்பு சுழன்று சுழன்று மாலையாக அதனைச் சுமப்பவர். அவரைச் சரணடைகிறேன். (48)

हनुभूषविभीषणयोः स्यां यतमाविह मोक्षमुपेक्ष्य।
रघुनायकनिष्क्रयभूतं भुवि रङ्गधनं रमयेते ॥ ४९

ஹனுமாருக்கும் விபீஷணருக்கும் தாஸனுவேன். இவர்களிருவரும் கையில் கிட்டிய முக்தியையும் பொருட்படுத்தாமல் வந்தவர். தம் நாதரான ரகுநாதரின் உரிமைப் பொருளான ரங்கநாதர் என்ற மாபெரும் செல்வத்தை இவ்விடம் மகிழ்விக்கின்றனர். (49)

इतो बहिः पञ्च पराञ्चि खानि प्रत्यञ्चि तानि स्युरितोऽन्तरित्थम्।
औपाधिकेभ्यो निरुपाधिभोग्ये प्रत्याहरद्वेत्रधरं नमामि ॥ ५०

இதுகாறும் வெளி நோக்கிச் சென்று கொண்டிருந்த இந்திரியங்கள் இந்த நொடியிலிருந்து உள் நோக்கிச் செல்ல வேண்டுமென்று தடுத்து, மகிழ்விக்கிற வேறு பொருள்களிலிருந்து, வேறு பொருளுதவியின்றித் தானே ஆனந்தமாயுள்ளவரிடம் திருப்பிக் கொணர்ந்து உதவுகிற பிரம்பு ஏந்திய காவலரை வழிபடுகிறேன். (50)

शेषशयलोचनामृतनदीरयाकुलित लोलमानानाम्।
आलंबमिवामोदस्तंभद्वयमन्तरङ्गमभियामः ॥ ५१

சேஷனின் மீது சயனித்திருக்கிற பெருமானின் கண்களிலிருந்து வெளியான அமுத நதியின் நீர் பெருக்கு வேகத்தில் தடுமாறி நிற்பவர்களுக்கு உள்ளே பிடிப்பாக உள்ள ஆனந்தமே உருவான இரு திருமணத் தூண்களை அணுகுவோம். (51)

श्रीरङ्गान्तर्मन्दिरं दीप्रशेषं श्रीभूमीतद्रम्यजामातृगर्भम्।
पश्येम श्रीदिव्यमाणिक्यभूषामञ्जूषायास्तुल्यमुन्मीलितायाः ॥

ஸ்ரீ ரங்கநாதரின் ஆலயத்தின் உள்ளே ஆதிசேஷன் ரத்தின ஒளியுடன் விளங்க, லக்ஷ்மீ தேவியும் பூமி தேவியும் அழகிய மணவாளனும் காட்சி தருகிற கருவறை லக்ஷ்மீ தேவியின் மூடப் பெறாத தெய்வீக அழகுமிக்க ரத்தின ஆபரணங்களின் பெட்டகம் போன்றுள்ளது. அதனைக் காண்பேன். (52)

लीलालताकृपाणी भृङ्गारपतद्ग्रहार्पितकराग्राः ।
प्रोतावतं सितकुचाः पदाब्जसंवाहिनीर्वयं स्तुमहे ।। ५३

*திருவடி வருடுகிற பெண்கள், விளையாட்டிற்கான கொடி, கத்தி, பொன் வட்டில், படிக்கமெனும் தாம்பூல வட்டில் இவற்றைக் கையில் ஏந்தி நிற்கின்றனர். மேலாடையால் திருவடி ஒத்தியதால் அதன் நறுமணப் பூச்சு அதில் பட்டு அவர்களின் மார்பகங்களிலும் வண்ணப் பூச்சு உள்ளது. அவர்களைத் துதிக்கிறோம். (53)*

मुकुलितनलिनाः सकौमुदीकाः
इव सुनिशा विमलादिका नवापि ।
शिरसि कृतनमस्यदेकहस्ता
इतरकरोच्चल चामराः श्रयेयम् ।। ५४

*ஒரு கையைத் தூக்கித் தலை மேல் கூப்பி வணங்குபவராக, மற்றொரு கையில் சாமரம் ஏந்தி வீசுபவராக, விமலை முதலிய ஒன்பது பெண்களும் மொட்டிட்ட தாமரைகளுடன் விளங்குகிற பௌர்ணமி இரவு போன்று நிற்கின்றனர். அவர்களை ஆசிரயிப்பேன். (54)*

उत्फुल्लपङ्कजतटाकमिवाभियानि
श्रीरङ्गराजमिह दक्षिणसव्यसीम्नोः ।
लक्ष्मीं विहाररसिकामिव राजहंसीं
छायामिवाभ्युदयनीमवनीं च तस्याः ।। ५५

*கருவறையில் மலர்ந்த தாமரை மலர்கள் நிரம்பிய பொய்கை போன்றுள்ள, ஸ்ரீ ரங்கநாதரை அணுகுகிறேன். அவரது வலத்திலும் இடத்திலும் விளையாட்டை ரசிக்கிற அன்னப்பேடு போன்ற லக்ஷ்மீ தேவியையும் மேன்மேலும் செழிப்பு பெற்று வருகின்ற பூமிதேவியையும் அணுகுகிறேன். (55)*

पिब नयन पुरस्ते रङ्गधुर्याभिधानं
स्थितमिव परिफुल्लत्पुण्डरीकं तटाकम्।
श्रियमपि विहरन्तीं राजहंसीमिवास्मिन्
प्रतिफलनमिवास्याः पश्य विश्वंभरां च ॥ ५६

*கண்ணே! உன் எதிரே கருவறையில் ஸ்ரீ ரங்கநாதர் என்ற பொய்கை உள்ளது. இதில் தாமரைப் பூக்கள் மலர்ந்துள்ளன. அதனைப் பருகுவாய். இதில் விளையாடுகிற அன்னப்பேடு போன்ற லக்ஷ்மியையும் இவளது பிரதிபிம்பம் போன்ற பூமிதேவியையும் காண்பாய். (56)*

सौशील्यशीतलमवेलकृपातरङ्ग-
संप्लाविताखिलमकृत्रिमभूम निम्नम्।
लक्ष्म्या च वासितमभूम विगाहमानाः
श्रीरङ्गराजमिषपद्मसरः प्रसन्नम् ॥ ५७

*ஸ்ரீ ரங்கராஜர் எனும் தாமரைக் குளம். நற்பழக்கமாகிற குணத்தால் குளிர்ந்தது. கரை கடந்து பெருகுகிற கருணையலையால் உலகமனைத்தையும் நீராட்டியது. செயற்கையல்லாத இயல்பான பெருமையுள்ளது. அண்ட இயலாத குணச் சிறப்புகளால் ஆழம் மிக்கது. லக்ஷ்மியால் பரிமளம் பெற்றது. தெளிந்தது அதில் அமிழ்ந்து நீராடுவோம்.(57)*

सिंहासने कमलया क्षमया च विश्व
मेकातपत्रयि तुमस्मद सून्निषण्णम्।
लक्ष्मीस्वयंवर सनाथितयौवनश्री
सौन्दर्य संपदवलिप्तमिवालिहीय ॥ ५८

*உலகனைத்தையும் ஒரு குடையின் கீழ் கொணர, லக்ஷ்மீ தேவியுடனும் பூமிதேவியுடனும் ஸிம்ஹாஸனத்தில்*

*அமர்ந்துள்ள என் உயிருக்கும் உயிரான ஸ்ரீரங்கநாதர் லக்ஷ்மீ தேவி தானே மாலையிட்டுத் தன்னை மணந்ததைப் பயனுள்ளதாக்க யௌவன அழகு, உடல் வனப்பு முதலியவற்றால் செருக்கு கொண்டவர் போல் காட்சி தருகிறார். அவரை அப்படியே விழுங்கி உள்ளத்தினுள் கொள்வேன். (58)*

आपाद मूलमणिमौलि समुल्लसन्त्या
स्वातन्त्र्यसौहृदतरंगितयाऽङ्गभङ्ग्या।
सख्यं समस्तजनचेतसि सन्दधानं
श्रीरङ्गराजमनिमेषमनुस्मियाम ।। ५९

*திருவடி முதல் ரத்தின கிரீடம் வரை, பேராளுமையும் அன்பும் அலை மோதுகின்ற உடல்வனப்பால் மக்களனைவரின் உள்ளத்தில் பேரன்பைத் தொடர்ந்து விளைவிக்கிற ஸ்ரீ ரங்கநாதனை இமை கொட்டாமல் தொடர்ந்து காண்போம். (59)*

क्षितिकमलनिवासाकल्पवल्लीसलीलो-
ल्लुठनदशदिशोद्यद्यौवनारंभजृंभः।
श्रममपहरतां मे रङ्गधामेति तत्तद्-
वरमयफलनम्रः पत्रलः पारिजातः ।। ६०

*ரங்கநாதர் என்ற பாரிஜாத (கல்பக) மரம். அதனை பூமிதேவி, லக்ஷ்மி தேவி என்ற இரு கற்பகக் கொடிகள் சுற்றி நின்று தம் அணைத்தலால், பத்து திசைகளிலும் அதன் யௌவனத் தொடக்கத்தின் தனிச் சிறப்பை வெளியிடுகின்றன. இலைகள் அடர்ந்து, அவரவர் விருப்பங்களை நிறைவுறச் செய்வதாகிற பழங்களின் சுமையால் கீழ் நோக்கி வளைந்துள்ளது. அது என் களைப்பைப் போக்கட்டும். (60)*

संभाषमाणमिव सर्ववशंवदेन
मन्दस्मितेन मधुरेण च वीक्षणेन।

दिव्यास्त्रपुष्पित च तुर्भुजमत्युदारं
रङ्गास्पदं मम शुभाश्रयमाश्रयाणि ।। ६१

ரங்கநகரைத் தன் இருப்பிடமாகக் கொண்டவர், அனைவரையும் கவர்கிற இனிய புன்முறுவலாலும் பார்வையாலும் நேரே பேசிக் கொண்டிருப்பவர் போல் உள்ளார். தெய்வ சக்தி மிக்க ஆயுதங்கள் பூத்துக்குலுங்குகிற நான்கு கைகளுள்ளவர். மிகவும் பெருந்தன்மையுள்ளவர். எனக்கு நல்ல புகலிடமான அவரை அண்டி நிற்கிறேன். (61)

एते शङ्ख गदा सुदर्शनभृतः क्षेमंकरा बाहवः
पादद्वन्द्वमिदं शरण्यमभयं भद्रं च वो हे जनाः ।
इत्यूचिष्यभयङ्करे करतले स्मेरेण वक्त्रेण तद्-
व्याकुर्वन्निव निर्वहेन्मम धुरं श्रीरङ्गसर्वंसहः ।। ६२

''ஓ மக்களே ! சங்கு கதை சக்கிரம் ஏந்திய இந்தக் கைகள் உங்கள் நலனைச் செய்பவை. இந்தத் திருவடிகள் உங்களுக்கும் புகலிடமானவை. பயம் நீக்கி மங்களம் வழங்குபவை.'' என அபயமுத்திரையுடனுள்ள கை அறிவுறுத்தும் போது, அதனைத் தன் புன்முறுவலுடன் கூடிய முகத்தால் விளக்குபவர். ஸ்ரீ ரங்கத்தைத் தன்னிடமாகக் கொண்ட பெருமான். அவர் என் பொறுப்பை ஏற்பார். (62)

अङ्गैरहंप्रथमिकाचरितात्मदानैः
आमोदमाननव यौवन सावलेपैः ।
है ! पारिजातमिव नूतनतायमान-
शाखाशतं हृदि दधीमहि रङ्गधुर्यम् ।। ६३

நான் முன்னே ! நான் முன்னே எனத் தன்னையே வழங்குபவையும் மணக்கின்ற புதிய வாலிபத்தால் செருக்கடைந்தவையுமான தன் அவயவங்களால் புதிது புதிதாகக் கிளைத் தெழுகின்ற பல கிளைகளுள்ள பாரிஜாத மரம் போன்றுள்ள ஸ்ரீ ரங்கத்துப் பெருமானை எவ்வாறு உள்ளத்தில் சுமப்போம் ? (63)

आलोका हृदयालवो रसवशादीशानमीषत्स्मितं
प्रच्छायानि वचांसि पद्मनिलया चेतःशरव्यं वपुः ।
चक्षुष्मन्ति गतागतानि त इमे श्रीरङ्गशृङ्गार ! ते
भावाः यौवनगन्धिनः किमपरं सिञ्चन्ति चेतांसि नः ।।६४

*சிருங்காரமே வடிவெடுத்து ஸ்ரீரங்கத்தில் அமர்ந்தவரே! உமது பார்வை அன்பால் உள்ளத்தில் பதியும். புன்சிரிப்பு ஆளுமை கொண்டவனேயும் வசப்படுத்தும். பேச்சு வாடி நிற்பவருக்கு நிழல் போன்றது. உடல் வனப்பு, தாமரை மீதமர்ந்த லக்ஷ்மியின் உள்ளத்தை இலக்காகக் கொண்டது. உலா வருவது கண்களுக்கினியது. வேறென்ன ? யௌவனத்தால் மணக்கின்ற உம்மைப் பற்றிய எண்ணங்கள் உள்ளத்தைக் குளிர்விக்கின்றன. (64)*

आयत्किरीटमलिकोल्लसदूर्ध्वपुण्ड्रं
आकर्णलोचनमनङ्कुशकर्णपाशम् ।
उत्फुल्लवक्षसमुदायुधबाहुमर्हन्
नीविं च रङ्गपदमब्जपदं भजामः ।। ६५

*நீண்ட கிரீடம், நெற்றியில் விளங்குகிற ஊர்துவபுண்டிரம், செவியளவு நீண்ட கண்கள், வரம்பில் கட்டுப்படாத காதுகள், விசாலமான மார்பு, ஆயுதமேந்திய கைகள், ஏற்றியிருக்கிற ஆடைக்கட்டு, தாமரை போன்ற திருவடிகள், இவற்றால் அழகான ரங்கபதியை வழிபடுகிறோம். (65)*

अब्जन्यस्तपदाब्जं अञ्चितकटीसंवादिकौशेयकं
किञ्चित्ताण्डवगन्धिसंहननकं निर्व्याजमन्दस्मितम् ।
चूडाचुंबिमुखांबुजं निजभुजाविश्रान्तिदिव्यायुधं
श्रीरङ्गे शरदः शतं तत इतः पश्येम लक्ष्मीसखम् ।। ६६

தாமரை மீது பதித்த திருவடிகள், அழகுமிக்க இடுப்பிற்கேற்ற பட்டாடை, நடனமாடுவது போன்ற திருமேனியமைப்பு, எதிர்பார்ப்பற்ற புன் சிரிப்பு, கிரீடம் தழுவிய தாமரை போன்ற முகம், கைகளில் ஓய்வெடுக்கிற திவ்ய ஆயுதங்கள், இவ்வரிய கோலத்தில் காட்சி தருகிற லக்ஷ்மீ மணாளனை ஸ்ரீ ரங்கத்தில் இன்னமொரு நூற்றாண்டு காண்போமாக. (66)

अग्रे तार्क्ष्येण पश्चादहिपतिशयनेनात्मना पार्श्वयोश्च
श्रीभूमिभ्यामतृप्त्या नयनचुलकनैः सेव्यमानामृतौघम्।
वक्त्रेणाविः स्मितेन स्फुरदभयगदाशंखचक्रैर्भुजाग्रैः
विश्वस्मै तिष्ठमानं शरणमशरणा रङ्गराजं भजामः ॥ ६७

முன்புறத்தில் கருடரும், பின்புறத்தில் ஆதிசேஷன் மீது படுத்துள்ள தானும், இருபுறங்களிலும் ஸ்ரீ தேவியும் பூதேவியுமாகக் காட்சித் தந்தும் மனநிறைவடையாமல் தன் அழகெனும் அமுதத்தைக் கண்ணாரப் பருகச் செய்பவராக, புன்சிரிப்பை வெளிப்படுத்துகிற முகத்தாலும் அபய முத்திரையும் கதையும் சங்கமும் சக்ரமும் துலங்கும் தன் நுனிக் கைகளாலும் உலகிற்குத் தன் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துபவராகக் காட்சி தருகிற ரங்கத்தரசரை வேறு புகலற்ற நாம் சரணடைவோம். (67)

आर्तापाश्रयं अर्थिकल्पकं असह्यागस्करक्ष्मातलं
सद्यः संश्रितकामधेनुं अभियत्सर्वस्वमस्मद्धनम्।
श्रीरङ्गेश्वरमाश्रयेम कमलाचक्षुर्महीजीवितं
श्रीरङ्गे स सुखाकरोतु सुचिरं दास्यं च धत्तां मयि ॥ ६८

துயருற்றவருக்குப் புகலிடம், நாடிவருபவருக்குக் கற்பகமரம், தாங்க இயலாத குற்றம் புரிந்தவரிடம் பொறுமையுள்ளவர், தன்னை வந்தடைந்தவருக்கு உடன் காமதேனுவாகி விரும்பியதை வழங்குபவர். பக்தர்களுக்கு எல்லாமானவர், நமது குலச் செல்வம், லக்ஷ்மீ தேவிக்குக்

கண், பூமித் தாய்க்கு உயிர், அந்த ஸ்ரீ ரங்க அரசனை அண்டி வாழ்வோம். நெடுநாளளவில் ஸ்ரீ ரங்கத்தில் என்னை இனிது வாழவிடவேண்டும். அவரது பணியாளனாக இருக்க அருள்பாலிக்க வேண்டும். (68)

स्वफण वितानदीप्रमणिमालि सुदामरुचि-
म्रदिमसुगन्धिभोगसुखशायि तरङ्गधनम्।
मदभरमन्थरोच्छ्वसितनिःश्वसितोत्तरलं
फणिपतिडोलिकातलिममाश्वसिमः प्रणताः ॥ ६९

ஆதிசேஷனாகிற ஊஞ்சல் படுக்கையை வணங்கி நிம்மதி பெறுவோமாக. ஆதிசேஷன் படுக்கையின் மேற் கட்டியாக ஒளிமிக்க ரத்தின வரிசை கொண்ட தன் படத்தை விரித்துள்ளார். நல்ல பூமாலை போன்று அழகும் மென்மையும் நறுமணமும் கொண்ட தன் பாம்பு உடல் மீது ரங்கனை இனிது துயிலச் செய்துள்ளார். பெருமானை எப்போதும் சுமப்பதால் மந்தமாக மேல் கீழ் மூச்சுகளால் இனிது தாலாட்டுகிறார். (69)

वटदलदेवकी जठरवेदशिरः कमला-
स्तनशठकोपवाग्वपुषि रङ्ग गृहे शयितम्।
वरदमुदार दीर्घभुजलो चनसंहननं
पुरुषमुपासिषीय परमं प्रणतार्तिहरम्॥ ७०

ஆலிலை, தேவகியின் வயிறு, உபநிஷத், லக்ஷ்மி தேவியின் மார்பகம், நம்மாழ்வாரின் திருவாய்மொழி, இவற்றின் உருவகமான ஸ்ரீ ரங்க விமானத்தில் பள்ளி கொண்டவர். விரும்பியதை வழங்குபவர், பெருந்தன்மை மிக்க நீண்ட கைகளையும் கண்களையும் கொண்டவர், வணங்கிநிற்பவரின் துயரகற்றுபவர். அந்தப் பெரிய பெருமானை வழிபடுவேன். (70)

उदधिपरमव्योम्नोर्विस्मृत्य पद्मवनालया-
विनिमयमयीं निद्रां श्रीरङ्गनामनि धामनि।

फणिपरिबृढस्फार प्रश्वासनिःश्वसितक्रम-

स्खलितनयनं तन्वन्मन्वीत नः परमः पुमान् ॥ ७१

பாற்கடலையும், வைகுண்டத்தையும் மறந்து விட்டு ஸ்ரீ ரங்க மாளிகையில், படுக்கையான ஆதிசேஷனின் மேல் மூச்சு கீழ் மூச்சின் வேகத்தில் கண்கள் சுழல, லக்ஷ்மிக்கு மாற்றாக யோக நித்திரையை அணைத்து அனுபவித்துக் கொண்டிருக்கும் பரமன் நம்மைப் பற்றிச் சிந்திக்கட்டும். (71)

जलधिमिव निपीतं नीरदेनाद्रिमब्धौ

निहितमिव शयानं कुञ्जरं वाद्रिकुञ्जे ।

कमलपदकराक्षं मेचकं धाम्नि नीले

फणिनमधिशयानं पूरुषं वन्दिषीय ॥ ७२

நீல வண்ண மாளிகையில், ஆதிசேஷன் மீது சயனித்துள்ள கரிய மேனியுள்ள பரமபுருஷனை வணங்குவேன். தாமரை போன்ற சரணங்களும் கைகளும் கண்களுமுள்ளவர், மேகத்தால் முழுவதும் பருகப்பட்ட கடல் போன்றும், கடலுக்குள் ஆழ்ந்த மலை போன்றும் மலையிலுள்ள பெரும் புதரில்படுத்துள்ள யானை போன்றும் அவர் காட்சி தருகிறார். (72)

श्रीरङ्गेशय इह शर्म निर्मिमीतां आताम्राधरपद पाणिविद्रुमो नः ।

कावेरीलहरिकरोपलाल्यमानो गंभीराद्भुत इव तर्णकोऽर्णवस्य ॥

பவழம் போல் நன்கு சிவந்த உதடுகள், சரணங்கள், கைகள் கொண்டவர், காவேரியால் அவளது அலைகளாகிய கைகளால் வருடப் பெற்றவர், ஆழ்ந்து வியக்குமளவிலுள்ள கடல் குட்டி போன்றவர். அந்த ஸ்ரீ ரங்கத்தில் சயனித்துள்ளவர் நமக்கு இவ்வுலக வாழ்க்கையில் நன்மை புரியட்டும். (73)

सिञ्चेदिमं च जनमिन्दिरया तटित्वान्

भूषामणिद्युतिभिरिन्द्रधनुर्दधानः ।

श्रीरङ्गधामनि दयारसनिर्भरत्वात्
अद्रौ शयालुरिव शीतलकालमेघः ।। ७४

*ஸ்ரீ ரங்க மாளிகை என்ற மலையில் குளிர்ந்த கருமேகம் போல் பரமன் படுத்துள்ளார். அவர் மீது லக்ஷ்மியாகிற மின்னல், ஆபரணரத்தினப் பேரொளியாகிய வானவில், பரிவெனும் நீர் நிறைந்துள்ளதால் கனம். இவ்வாறு விளங்கும் பரமன் எனும் மேகம் என் மீதும் நீர் தெளிக்கட்டும். (74)*

आमौलिरत्नमकरात्पुनरा च पद्भ्यां
धामक्रमोन्नमदुदारमनोहराङ्गम् ।
श्रीरङ्गशेषशयनं नयनैः पिबामः
पश्यन्मनः प्रवणमोघमिवामृतस्य ।। ७५

*திருமுடியில் சிறு முதலை வடிவில் பதிக்கப் பெற்ற ரத்தினம் முதல் திருவடிகள் வரை, ஒளி வரிசையால் உயர்ந்த சிறந்த அழகிய உடல் வனப்பு கொண்ட ஸ்ரீ ரங்க சாயியைக் கண்களால் பருகுவோம். பார்ப்பவரின் மனத்தை அமுத வெள்ளம் நிரப்புகின்ற அனுபவம் பெறலாம். (75)*

अरविन्दितमङ्घ्रिपाणिपद्मैरपि तापिञ्छितमञ्चिताङ्गकान्त्या ।
अधरेण स बन्धुजीवितं श्रीः नियतं नन्दनयेत रङ्गचन्द्रम् ।। ७६

*ரங்க சந்திரனை லக்ஷ்மீ தேவி நந்தன வனமாகக் காண்பாள் போலும். சரணங்கள் கைகள் மற்றும் முகம் தாமரையாக, திருமேனி ஒளி பசுமை மிக்க பச்சிலை மரமாக, உதடு உச்சித்திலகமாக, என மேனியே பூத்துக் குலுங்கும் நந்தனத் தோட்டம். (76)*

अन्योन्यरञ्जकरुचोऽनुपमानशोभाः
दिव्यस्रगंबरपरिष्करणाङ्गरागाः ।
संस्पर्शतः पुलकिता इव चिन्मयत्वात्
रङ्गेन्दुकान्तिमधिकामुपबृंहयन्ति ।। ७७

ஒப்பற்ற ஒளி மிக்க வனமாலை, பீதாம்பரம், ஆபரணங்கள், மேனிப்பூச்சுகள் என இவை ஒன்றுக்கொன்று ஒளிமயமான அழகைப் போஷிக்கின்றன. பேரொளி மயமான பரமனது மேனியுடன் இசைவதால் பரமனின் ஒளியை அவை மேலும் அதிகப்படுத்துகின்றன. (77)

द्रुतकनकजगिरिपरिमिलदुदधिप्रचलिततलहरिवदहमहमिकया।
स्नपयति जनमिममपहरति तमः फणिशयमरकतमणिकिरणगणः ॥ ७८

பாம்பின் மீது சயனித்துள்ள மரகத மணியின் ஒளிக்கதிர் கூட்டம், உருகிப் பெருகிவரும் தங்க மலையுடன் இணைந்த கடலலை வரிசை போன்றது. அது நான் முந்தி நான் முந்தி எனப் போட்டியுடன் இம்மனிதனை நீராட்டி இருளை (அறியாமையை) அகற்றுகிறது. (78)

भोगीन्द्रनिःश्वसित सौरभवर्धितं श्री-
नित्यानुषक्तपरमेश्वरभावगन्धि।
सौरभ्यमाप्लुतदिशावधि रङ्गनेतुः
आनन्दसंपदि निमज्जयते मनांसि ॥ ७९

ஸ்ரீ ரங்க நாயகரின் மேனி நறுமணம், பாம்பரசனின் மூச்சுக் காற்றின் நறுமணத்தால் கூடி, லக்ஷ்மீ தேவியின் இடைவிடா அணைப்பால் பெற்ற பேராளுமையால் மேலும் மணத்து, திசைகளின் எல்லைகளிலும் பரவி நம் மனத்தை ஆனந்தச் செழிப்பில் ஆழ்த்துகிறது. (79)

रङ्गभर्तुरपि लोचनचर्चा साहसावलिषु लेखयमानम्।
पुष्पहास इति नाम दुहानं सौकुमार्यमतिवाङ्मनसं नः ॥ ८०

ரங்கப் பெருமானது பேரழகு, கண்களால் உற்றுப் பார்ப்பதைக் கூட ஸாஹஸச் செயலாக்கும். (புன் சிரிப்பல்ல) பூஞ்சிரிப்பு என்ற பெயர் வழங்கும். அது நம் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதது. இனி கேசாதி - பாதாந்தம். (80)

एकैकस्मिन्परमवयवेऽनन्तसौन्दर्यमग्नं
सर्वं द्रक्ष्ये कथमिति मुधा मा मथा मन्दचक्षुः ।
त्वां सौभ्रात्रव्यतिकरकरं रङ्गराजाङ्गकानां
तल्लावण्यं परिणमयिता विश्वपारीणवृत्ति ।। ८१

ஏ என் கண்ணே ! நீ மந்தமானது. ஒவ்வொரு அங்கத்தின் எல்லையற்ற அழகில் மூழ்கியுள்ள நான், எல்லாவற்றையும் ஒருங்கே எப்படிப் பார்ப்பேன் ? என்று வீணே கவலைப்படாதே. ரங்கராஜரின் அங்கங்களின் பரஸ்பர நட்பால் அவ்வழகுகள் ஒன்றோடொன்று பிசறிக் கலந்து ஒரு கூட்டழகாகி உன்னை எல்லா அங்கங்களின் அழகையும் ஒரு சேர அநுபவிக்கச் செய்து விடும். (81)

वपुर्मन्दारस्य प्रथमकुसुमोल्लास समयः
क्षमालक्ष्मीभृङ्गी सकलकरणोन्मादनमधु ।
विकासः सौन्दर्यस्रजि रसिकताशीधुचुलको
युवत्वं रङ्गेन्दोः सुरभयति नित्यं सुभगताम् ।। ८२

மந்தாரம் என்றொரு கல்பக விருக்ஷம். ஸ்ரீ ரங்கத்து எம்பெருமானின் திருமேனி ஒரு மந்தாரம். ரங்கப் பெருமானின் நித்யமான யௌவனப் பேரழகு அந்த மேனியான மந்தாரத்தில் வெளியாகிறது. அதன் முதல் பூ வெடித்து மலர்கிற பருவம். பூமிதேவி, லக்ஷ்மீ தேவி என்ற இரு வண்டுகளின் எல்லாப் பொறிகளையும் அந்தப் பூவின் மகரந்தம் மயக்கமடையச் செய்கிறது. அழகிய பூமாலையில் தோன்றும் அழகு அங்கு தெரிகிறது. ரசிகனைக் கிறங்கச் செய்கிற மதுவை அது அடக்கி வைத்துள்ளது. (82)

किरीटचूडरत्नराजिराधिराज्यजल्पिका ।
मुखेन्दुकान्तिरुन्मुखं तरङ्गितेव रङ्गिणः ।। ८३

ரங்கத்துப் பெருமானின் பேராளுமையை இனிது விளக்கக் கிரீடத்திலும் நெற்றிப் பட்டையிலுமுள்ள ரத்தின

வரிசை முன் வந்து முகமாகிய சந்திரனின் அலைபாய்கிற சோதியானதோ? (83)

शिखारत्नोद्दीप्रं दिशि दिशि च माणिक्यमकरी
लसच्छृंगं रङ्ग प्रभुमणिकिरीटं मनुमहे।
समुत्तुङ्ग स्फीतं चिदचिदधिराजश्रिय इव
प्रियाक्रीडं चूडामणिमपि निलंबं तमभितः ॥ ८४

ரங்கப் பிரபுவின் ரத்தின கிரீடம், சுற்றிச் திசை அனைத்திலும் ஒளிபரப்புகிறது. அதன் உச்சியில் மகர (முதலை) வடிவிலான மாணிக்க ரத்னம் துலங்குகிறது. ஜடம் சேதனம் என அனைத்தையும் ஆள்கிற பேராளுமைக்கு ஏற்ற உயர்ந்த பருத்த நிறைவுற்ற விளையாட்டுக் குன்று அது. அதனைச் சுற்றியுள்ள நெற்றிச் சுட்டி குன்றின் சுற்றுப் பகுதியான அடிவாரம் எனத் தோன்றுகிறது. (84)

विहरतु मयि रङ्गिणश्चूलिकाभ्रमरकतिलकोर्ध्वपुण्ड्रोज्ज्वलम्।
मुखममृततटाकचन्द्रांबुजस्मयहर शुचिमुग्धमन्दस्मितम् ॥ ८५

அமுத தடாகம் சந்திரன் மற்றும் தாமரையின் செருக்கைப் போக்கடிக்கிற, வெண்ணிறமுள்ள, அழகிய புன்முறுவலுடன் கூடிய, ரங்கமுடையானின் முகம் என்னிடத்தில் விளையாடட்டும். கேசபாசம், நெற்றியில் தொங்கும் கேசச் சுருள், திலகம், ஊர்த்வபுண்டிரம் இவற்றால் அது அழகுற்றது. (என் மனத்தைக் கவரும்படி விளையாடட்டும்) (85)

मुखपुण्डरीकमुपरि त्रिकण्टकं तिलकाश्च केसरसमाः समौक्तिकाः।
इह रङ्गभर्तुरभियन्मधुव्रतप्रकरश्रियं भ्रमरकाणि बिभ्रति॥ ८६

ஸ்ரீ ரங்கப் பெருமானின் தாமரை போன்ற முகத்தில் மூன்று கோடுகள். முகத்தின் மீது முத்துக்களாலான திலகாபரணங்கள், குங்குமப் பூந்தாதுக்கள் போல். முகத்தின் மீது படர்ந்த கேசச் சுருள் முகத்தை நோக்கி வருகிற வண்டினம் போன்றழகாக உள்ளது. (86)

हृदयं प्रसादयति रङ्गपतेः मधुरोर्ध्वपुण्ड्रतिलकं ललितम्।
अलिकार्धचन्द्रदलसंवलितां अमृतस्रुतिं यदभिशंकयते॥ ८७

*(அர்த்த சந்திர வடிவுள்ள) நெற்றியிலுள்ள ஊர்த்வபுண்டிரம் சந்திரனின் பாதியிலிருந்து கசிகின்ற அமுதப் பெருக்கோ! என சந்தேகிக்க வேண்டியுள்ளது. அந்த ரங்கபதியின் ஊர்த்துவபுண்டிரம் எனும் இனிய அழகிய நெற்றித் திலகம் இதயத்தை நிறைவடையச் செய்கிறது. (87)*

सरसीरुहे समवनाम्य मदादुपरि प्रनृत्यदलिपंक्तिनिभे।
स्फुरतो भ्रुवावपि लोचनयोः सविलासलास्यगति रंगभृतः॥ ८८

*இரு தாமரைப் பூக்களைத் திமிருடன் அடக்கி மேல் நடனமாடுகிற வண்டுகளின் வரிசைபோல், ரங்கத் தரசனின் புருவங்கள் கண்களின் மேல் சொகுசு மிக்க நாட்டிய நடையழுகுடன் விளங்குகின்றன. (88)*

स्मरशरनलिनभ्रमान्नेत्रयोः परिसरनमदिक्षुचापच्छवि।
युगमुदयति रङ्गभर्तुर्भ्रुवोः गुरुकुलमिव शार्ङ्गनृत्तश्रियः॥ ८९

*மன்மதனின் பாணமான தாமரை என்ற தடுமாற்றத்தால் கண்களின் அருகே வந்த வளைந்த கரும்பு வில் போன்ற அழகான ரங்கத்து அரசனின் இருபுருவங்கள் சார்ங்கம் என்ற வில்லிற்கு நடன கலையைப் போதிக்கிற குருகுலம் போன்று விளங்குகின்றன. (89)*

कृपया परया करिष्यमाणे सकलाङ्गं किल सर्वतोऽक्षि नेत्रे।
प्रथमं श्रवसी समास्तृणाते इति दैर्घ्येण विदन्ति रङ्गनेतुः॥ ९०

*பரம கிருபையால் அனைத்தங்கங்களும் கண்ணாக விருப்பதால் ரங்கராஜனின் இரு கண்கள் முதன் முதலாகக் காதுகளை நோக்கிப் பரவி அளாவுகின்றனவோ என கண்களின் நீளத்தைக் கொண்டு உணர்கின்றனர். 'ஸர்வதோக்ஷி சிரோமுகம்'. (90)*

श्रवोनासारोधात्तदवधिकडोलायितगते
विशालस्फीतायद्रुचिरशिशिराताम्रधवले।
मिथो बद्धस्पर्धस्फुरित शफरद्वन्द्वललिते
क्रियास्तां श्रीरङ्ग प्रणयिनयनाब्जे मयि दयाम्॥ ९१

*விசாலமான, விரிந்த, நீண்ட, அழகிய குளிர்ந்த சிறிது சிவந்து வெளுத்த ரங்கனின் தாமரை போன்ற இரு கண்கள் செவிக்கும் மூக்கிற்கும் இடையே தடைபட்டு ஊசலாடுகின்றன. ஒன்றுக்கொன்று சண்டையிடத்துடிக்கின்ற இரு கெண்டை மீன்கள் போல் அழகியவை. இவை என்னிடம் பரிவு காட்டட்டும். (91)*

करुणामृतकूलमुद्वहैषा प्रणमत्स्वागतिकी प्रसन्नशीता।
मयि रङ्गधनोपकर्णिकाऽक्ष्णोः सरितोर्वीक्षणवीचिसन्ततिः स्तात्॥ ९२

*ஸ்ரீ ரங்கத்துச் செல்வமே ! கரை கடந்த அமுதப் பெருக்கெடுத்து வணங்குபவர்களைக் கரிசனத்துடன் வரவேற்று, தெளிவும் குளிர்ச்சியும் கொண்டு ஆறு போன்று அலைமோதி வெளியாகும் காது வரை நீண்ட இந்த கடாக்ஷ வரிசை என்னிடம் நிலைக்கட்டும். (92)*

विलसति नासा कल्पकवल्ली मुग्धेव रङ्गनिलयस्य।
स्मितमपि तन्नवकुसुमं चुबुककपोलं च पल्लवोल्लसितम्॥ ९३

*ரங்கத்தில் குடி கொண்டுள்ளவரின் மூக்கு அழகிய கற்பகக் கொடி போன்றது. புன்முறுவலும் அக்கொடியின் பூத்த மலர் போன்றது. முகவாயும் கன்னமும் தளிரின் வடிவில் உள்ளன. (93)*

नयनशफरविद्धौ कर्णपाशावरुद्धौ
रुष इव लुठतोऽर्चिर्मञ्जरीरुद्गिरन्तौ।
परिमिलदलकालीशैवलामंसवेलां
अनु मणिमकरोद्धौ रङ्ग धुर्यामृताब्धेः॥ ९४

*ரங்கத்து ஆண்டவனெனும் அமுதக் கடல். சுற்றிலும் தொங்குகிற நெற்றிக் கேசச் சுருளாகிற பாசி, தோள்களாகிற கரையினருகில் கண்களாகிற மீன்களால் அடிக்கப்பட்டு செவிகளாகிற வலையில் பிடிப்பட்ட ரத்ன குண்டலங்களாகிற மகர மீன்கள் கோபத்தால் பூங்கொத்தாகிய நெருப்புத் துண்டங்களைக் கக்குபவை போன்று தோன்றுகின்றன. (மகர வடிவில் அமைந்த குண்டலங்கள் ரங்கனின் முகமாகிய அமுதக் கடலில் விளங்குகின்றன.) (94)*

अधरमधुरांभोजं तत्कर्णपाशमृणालिका-
वलयमभि मामास्तां रङ्गेन्दुवक्त्रसरश्चिरम् ।
नयनशफरं नासाशैवालवल्लरि कर्णिका-
मकरमलकश्रेणीपर्यन्तनीलवनावलि ।। ९५

*உதடுகளாகிய இனிய தாமரை, நீண்ட காதுகளாகிற தாமரைக் கொடி வளையங்கள், கண்களாகிற மீன்கள், மூக்காகிற பாசிக்கொடி, காதணிகளாகிய மகரங்கள், கேசக் கற்றையாகிய அருகிலுள்ள பசுஞ் சோலை எனச் சீர் மிக்க ஸ்ரீ ரங்க சந்திரனின் முகமாகிற ஓடை நெடு நாட்கள் என்னை நோக்கி இருக்கட்டும். (95)*

रमयतु स मां कण्ठः श्रीरङ्गनेतुरुदश्रित-
क्रमुकतरुणग्रीवाकंबु प्रलंबमलिम्लु चः ।
प्रणयविलगल्लक्ष्मीविश्वंभराकरकन्दली-
कनकवलयक्रीडासंक्रान्तरेख इवोल्लसन् ।। ९६

*ஸ்ரீ ரங்க நாயகனின் கழுத்து செழித்து வளர்ந்த பாக்கு மரத்து இளம் கழுத்து மற்றும் சங்கின் அழகைக் கொள்ளை கொண்டது. அன்போடு ஆலிங்கனம் செய்கிற லக்ஷ்மீ தேவி மற்றும் பூமிதேவியின் வாழைத் தண்டு போன்ற கைகளின் பொன் வளைகளின் ரேகை விளையாட்டின் போது இதில் பதிந்துள்ளன. அது என்னை மகிழ்விக்கட்டும். (96)*

अधिष्ठानस्तंभौ भुवनपृथुयन्त्रस्य कमला-
करेणोरालाने अरिकरिघटोन्माथमुसलौ ।

फणीन्द्रस्फीतस्रग्व्यतिकरितसन्दिग्धविभवौ
भुजौ मे भूयास्तामभयमभि रङ्गप्रणयिनः ॥ ९७

*ஸ்ரீ ரங்கத்தை விரும்புகிற பெருமானின் இரு கைகள், உலகமாகிற பெரும் யந்த்ரத்திற்கு ஆதாரத் தூண்களானவை. லக்ஷ்மீ எனும் பெண் யானேக்குக் கட்டுத் தறி. எதிரிகளாகிற யானேக் கூட்டத்தை அழிப்பதற்கான உலக்கைகள், ஆதிசேஷனின் புஷ்டிமிக்க உடல் போல், தடித்த பூமாலே போல் ஐயப்படத் தக்க பெருமை கொண்டவை, இவை எனக்கு அபயமளிக்கட்டும். (97)*

प्रति जलधितो वेलाशय्यां विभीषणकौतुकात्
पुनरिव पुरस्कर्तुं श्रीरङ्गिणः फणिपुंगवे ।
समुपदधतः कञ्चित् कञ्चित्प्रसारयतो भुज-
द्वयमपि सदा दानश्रद्धालु दीर्घमुपास्महे ॥ ९८

*ஸ்ரீ ரங்கமுடையானின் இரு கைகள் கடலே நோக்கி கடற் கரையில் பள்ளி கொண்டதை விபீஷணனின் விருப்பத்தால் மறுபடி ஏற்றன. ஆதிசேஷன் மீது ஒன்று தலேயணேயாக மற்ருென்று உடல் மீது நீட்டிப் படிந்துள்ளது. எப்போதும் தானம் வழங்குவதில் ஆர்வமுள்ளவை. இரு கைகளேயும் வழிபடுவோம். (98)*

कुसुमभरालसौ स्फटिकवेदिशयौ विटपौ
अमरतरोः परं परिहसत्पृथु रङ्गभुजः ।
बहुमणिमुद्रिकाकनककङ्कणदोर्वलयैः
किसलयि दोर्द्वयं फणिनि सुप्तमिमः ॥ ९९

*ரங்கத்தை ஆள்பவருடைய இரு புஜங்கள் கற்பக மரத்தின் இரு கிளேகள் போன்றவை. ரத்தின மோதிரம், பொன் வளேயல்கள், தோள் வளேகள் என பல இலேக் கொத்துகள் கொண்டவை. ஆதிசேஷன் மீது கவலேயின்றி சாய்ந்துள்ளவை. பூக்களின் சுமையால் தழைந்து இருப்பவை. ஸ்படிகத்தாலான திண்ணேயில் படுத்திருப்பவை. அவற்றைச் சரணடைகிருேம். (99)*

मद्रक्षाव्रत कौतुके सुकटके विक्रान्तिकर्णेजपे
शार्ङ्गज्याकिणकर्कशिम्नि सुमनः स्रङ्मोहने मार्दवे।
दोर्द्वन्द्वं बहुशः प्रलोभ्य कमलालीलोपधानं भवत्
तच्चित्रालकमुद्रितं विजयते श्रीरङ्ग संसङ्गिनः ॥ १००

*ஸ்ரீ ரங்கத்துடன் நல்ல ஒட்டுதல் உள்ள பெருமானின் இரு கைகளும், என்னைக் காப்பதாகிய விரதத்தில் காப்பு கட்டியவை என்றும், சார்ங்க வில்லின் தழும்பால் சுர சுரப்புள்ளவை என்றும் பூமாலேயோ என மயங்கும்படி மென்மை மிக்கவை என்றும் பலவாறு ஆசைகாட்டி, லக்ஷ்மிக்கு விளையாட்டாகத் தலையணை ஆனவை. அவளது கூந்தல் படிந்த அடையாளம் கொண்டவை. அவை சிறந்து விளங்குகின்றன. (100)*

भवार्तानां वक्त्रामृतसरसि मार्गं दिशदिव
स्वयं वक्त्रेणेदं वरदमिति सन्दर्शितमिव।
कराम्भोजं पङ्केरुहवनरुषा पाटलमिव
श्रयामि श्रीरङ्गेशयितुरुपधानीकृतमिदम् ॥ १०१

*ஸ்ரீ ரங்கேசனின் இந்தத் திருக்கை, ஸம்ஸார தாபத்தால் துயருற்றவர்களுக்கு முகமாகிற அமுதத் தடாகம் போகிற வழியைக் காட்டுவது. விரும்பியதைத் தருவது எனத் தானே வாயால் கூறப்பட்டது. தாமரைக் காட்டினிடம் கொண்ட கோபத்தால் சிவந்தது. தலையணையாகப் பயன் படுத்தப்பட்டது. அதனைப் பற்றி நிற்கிறேன். (101)*

किरीटं श्रीरङ्गेशयितु रुपधानीकृतभुजो
त्रिधीशाधीशत्वाद्धटत इति संस्पृश्य वदति।
निहीनानां मुख्यं शरणमिति बाहुस्तदितरः
स्फुटं ब्रूते पादांबुज युगलमाजानुनिहितः ॥ १०२

*ஸ்ரீரங்கசாயியின் இந்தக் கை கிரீடத்தைத் தொட்டுக் காண்பித்து பிரும்மாவிற்கும் ஈசுவரனுக்கும் தலைவராகையால் இது பொருத்தமுள்ளதே எனக் காட்டுகிறது. மற்றொரு*

கையோ முழங்கால் வரை நீட்டி வைக்கப்பட்டு சரணங்களைச் சுட்டிக் காட்டி, மிகத் தாழ்ந்தவர்களுக்கும் இது முக்கியமான புகலிடம் என அப்பட்டமாகக் கூறுகிறது. (102)

मलयजशशिलिप्तं मालती दामतल्पं
सुमणिसरवितानं कौस्तुभस्वस्तिदीपम्।
दनुजवृषविषाणोल्लेखचित्रं च लक्ष्मी-
ललितगृहमुपासे रङ्गसर्वंसहोरः ॥ १०३

லக்ஷ்மியின் விளையாட்டிடமான ரங்கபூமிவாஸனின் மார்பு சந்தனம் மற்றும் பச்சைக் கற்பூரக் கலவை பூசப்பட்டது. மல்லிகை மாலை படுத்திருக்குமிடம். சிறந்த ரத்ன ஸரங்களை மேற்கட்டியாகக் கொண்டது. கௌஸ்துபம் எனும் மங்கள தீபம் கொண்டது. விருஷபாஸுரனின் கொம்புகள் கீறியதால் நேர்ந்த வடுவாகிய சித்திரக் கோடு கொண்டது. அதனை வழிபடுகிறேன். (103)

हारस्फारितफेनमंशुलहरीमालर्द्धिमुक्ताफल-
श्रेणीशीकरदुर्दिनं तत इतो व्याकीर्णरत्नोत्करम्।
आविः कौस्तुभलक्ष्मि रङ्ग वसतेर्निः सीमभूमाद्भुतं
वक्षो मन्दरमथ्यमान जलधिश्लाघं विलोकेमहि ॥ १०४

ரங்கவாஸியின் மார்பு மந்தர மலையால் கடையப்பட்ட பாற்கடலோடொத்த பெருமை கொண்டது. முத்தாரமாகிய பெருநுரை, ஒளியலை வரிசை, முத்துக் குவியலாகிற அடர்ந்த நீர்த்துளிகளால் ஸூரியனை மேகம் மறைத்த நாளானது. இங்குமங்கும் சிதறிக் காண்கிற ரத்னக் குவியல், கௌஸ்துப மணியும் லக்ஷ்மீ தேவியும் தோன்றுமிடம், வரையற்ற பெருமையால் வியப்பதற்குரியது. இதனைக் கண்ணுரக் காண்போம். (104)

वक्षःस्थल्यां तुलसिकमलाकौस्तुभैर्वैजयन्ती
सर्वेशत्वं कथयतितरां रङ्गधाम्नस्तदास्ताम्।

कूर्मव्याघ्रीनखपरिमिलत्पञ्चहेती यशोदा-

नद्धा मौग्ध्याभरणमिदं नः समाधिं धिनोति ।। १०५

*ரங்கவாஸியின் மார்புத் தடத்தில் துளஸிமாலை, லக்ஷ்மீ, கௌஸ்துபம் இவற்றுடன் வனமாலை, இவை ஸர்வேச்வரன் என்ற நிலையை நன்கு விளக்குகின்றன. அது நிற்க, இளமைப் பருவத்திற்கென யசோதை அணிவித்த ஆமை நகம் புலி நகம் பஞ்சாயுத ஆபரணம் என்றிவையும் நம் ஆழ்ந்த உள்ளத்தை மிகவும் மகிழ்விக்கின்றன. (105)*

कियान्भरो मम जगदण्डमण्डली-

त्यतृप्तितः कृशितमिवोदरं विभोः ।

रिरक्षिषो चितजगतीपरंपरां

परामिव प्रथयति नाभिपंकजम् ।। १०६

*பெருமானின் வயிறு பிரும்ஹாண்டக் கூட்டம் எனக்கு அத்தனை சுமையா ? என்ற திருப்தியின்மையால் இளைத்ததோ ? காக்கும் விருப்பத்திற்கேற்றபடி மேலும் வரிசையாக வேறு உலகங்களையும் படைக்கவிருப்பதை தொப்புளிலுள்ள தாமரை விளம்பரப்படுத்துகிறது. (106)*

त्रिविधचिदचिद्बृन्दं तुन्दावलंबि वलि त्रयं

विगणयदिवैश्वर्यं व्याख्याति रङ्गमहेशितुः ।

प्रणतवशतां ब्रूते दामोदरत्वकरः किणः

तदुभयगुणाकृष्टं पट्टं किलोदरबन्धनम् ।। १०७

*ரங்கத்துப் பேரரசரின் வயிற்றிலுள்ள மூன்று மடிப்புகள் மூன்று விதமான சேதன ஜட ஸமூகத்தைக் குறிப்பிடுகிறது போலும். இச் சமூகத்தைக் கட்டுப்படுத்தும் (ஐச்வர்ய) இயல்பை அது விளக்குகிறது. தாமோதரன் என்ற பெயருக்குக் காரணமான கயிற்றுக் கட்டுத் தழும்பு தன்னை வணங்கியவருக்குத் தான் வசராவதை வெளிப்படுத்துகிறது. வயிற்றுப்பட்டி (ஒட்டியாணம் போன்றது) ஆபரணமோ மேலே குறிப்பிட்ட ஐச்வர்யத்தையும் வசப்பட்டுள்ளதையும்*

தெரிவிக்கிறபட்டமாயுள்ளது. (நித்யர், முக்தர், பத்தர் என சேதனவர்க்கம் மூவகைப்படும். சுத்த ஸத்வம், ஸத்வமிச்ரம், ஸத்வசூன்யம் என ஜடம் மூவகைப்படும்) (107)

त्रयो देवास्तुल्यास्त्रितयमिदं अद्वैतमधिकं
त्रिकादस्मात्तत्वं परमिति वितर्कान्विघटयन्।
विभोर्नाभीपद्मो विधिशिवनिदानं भगवतः
तदन्यभ्रूभङ्गीपरवदिति सिद्धान्तयति नः ॥ १०८

மும்மூர்த்திகளும் பரஸ்பரம் ஸமமானவரே ! இம்மும்மூர்த்திகள் ஒன்றே மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்ட. (நான்காவதான) பரம்பொருள் என்ற முரண்பட்ட கொள்கைகளைச் சிதறச் செய்து பிரும்மாவிற்கும் சிவனுக்கும் மூலமான பெருமானின் தொப்புள் தாமரை அந்தப் பெருமானின் புருவ நெறிப்பிற்கு மற்றதனைத்தும் வசப்பட்டுள்ளதை முடிவாகத் தெரிவிக்கிறது. (108)

गर्भेकृत्वा गोप्तुमनन्तं जगदन्त-
र्मज्जद्भ्रम्या वाञ्छति साम्यं ननु नाभिः।
उत्क्षिप्यैतत्प्रेक्षितुमुद्यद्भ्रमिभूयं
नाभीपद्मो रंहति रङ्गायतनाब्धेः ॥ १०९

கடல் போன்று பரப்பு மிக்க ரங்கனின் தொப்புள், எண்ணற்ற உலகங்களை உள்ளடக்கிக் காக்க, உள்ளே முழுகுகின்ற சுழியோடு ஈடாயிருப்பதை விரும்புகிறது போலும். நாபியிலுள்ள தாமரையோ உள்ளே அடங்கின உலகை உயரக் கிளப்பிப் பார்க்க மேல் நோக்கிச் சுழித்துச் செல்கிறது போலும். (109)

मदमिव मधुकैटभस्य रंभाकरभकरीन्द्रकराभिरूप्यदर्पम्।
स्फुटमिव परिभूय गर्वगुर्वोः किमुपमिमीहि रङ्ग कुञ्जरोर्वोः ॥ ११०

மதுகைடபர்களின் செருக்கை அடக்கினது போல், வாழைத் தண்டு, உள்ளங்கையின் மணிக்கட்டிலிருந்து சுண்டுவிரலடி வரை உள்ள பகுதி, யானைத் துதிக்கை இவற்றின்

அழகாலான செருக்கையும் அடக்கி ஆணவமிகுதியால் பருத்த ரங்கன் என்ற யானையின் துடைகளுக்கு எதை உவமையாகக் குறிப்பிடுவோம் ? (110)

कटीकान्ति संवादिचातुर्यनीवीलसद्रत्नकाञ्ची कलापानुलेपम् ।
महाभ्रंलिहन्मेरुमाणिक्यसानूरिवाभाति पीतांबरं रङ्गबन्धोः ॥ १११

*ரங்கத்தாரின் இடுப்பின் அழகிற்கு ஈடான திறமையுள்ள எக்கு முடிப்பின் மீது அழகாக உள்ள ரத்தினம் பதித்த மேகலையுடன் அணிந்த பீதாம்பரம் மேகத்தைத் தொடுகிற மேருமலையின் மாணிக்கத் தாழ்வரை போல் விளங்குகிறது. (111)*

भर्मस्थलांशुपरिवेष इवांबुराशेः
सन्ध्यांबुवाहनिकुरुंबमिवांबरस्य ।
शंपाकदम्बकमिवांबुमुचो मनो नः
पीतांबरं पिबति रङ्गधुरन्धरस्य ॥ ११२

*ஸ்ரீ ரங்கப் பொறுப்பாளரின் பீதாம்பரம் கடலுக்கு தங்கமயமான பூமியின் ஒளிப் பரிவேஷம் போன்றும் ஆகாசத்திற்கு ஸந்தியா நேரத்து மேகத்திரள் போன்றும் மேகத்திற்கு மின்னல் திரள் போன்றும் காண்கிற நம் மனத்தைக் கவர்கிறது. (பரிவேஷம் - சூரியனைச் சுற்றியுள்ள பரிவட்டம்.) (112)*

वैभूषण्यां कान्तिराज्ञी निमग्ना विष्वध्रीची क्वापि सोन्मादवृत्तिः ।
जाने जानुद्वन्द्ववार्ताविवर्तो जातः श्रीमद्रङ्गतुङ्गालयस्य ॥ ११३

*ஸ்ரீ ரங்கத்துப் பெருங் கோயிலுடையானின் ஆபரண ஒளியில் முழுகிய மேனியழகு சுற்றியும் பரந்து வியாபித்து ஓரிடத்தில் பித்துப் பிடித்து இரு முழங்கால்கள் என்ற பெயரில் உருமாறியதோ !! (113)*

श्रीरङ्गेशयजंघे श्रीभूम्यामर्शहर्षकण्टकिते ।
तत्केलिनलिनमांसलनालद्वयललितमाचरतः ॥ ११४

லக்ஷ்மீ தேவியும் பூமிதேவியும் திருவடி வருடும் போது உண்டான குறுகுறுப்பால் சிலிர்த்த ரங்கசாயியின் கணைக்கால்கள் அவர்களிருவரும் ஏந்திய கேளிக்கைக்கான தாமரைகளின் தண்டுகள் போன்ற நிலையை அழகாகக் காட்டுகின்றன. (114)

वन्दारुबृन्दारकमौलिमालायुञ्जानचेतः कमलाकरेभ्यः।
सङ्क्रान्तरागाविव पादपद्मौ श्रीरङ्गभर्तुर्मनवै नवै च॥ ११५

வணங்கி நிற்கிற தேவர்களின் கிரீட வரிசை, தியானத்தால் தம்முடன் ஒன்றிய யோகியரின் உள்ளம், லக்ஷ்மியின் கைகள் இவை தம் மீது படிந்ததால் சிவந்தவை போன்ற ஸ்ரீ ரங்கநாயகனின் தாமரை போன்ற திருவடிகளைத் தியானித்துத் துதிப்பேன். (115)

यद्बृन्दावनपण्डितं दधिरवैर्यत्ताण्डवं शिक्षितं
यल्लक्ष्मीकरसौख्यसाक्षि जलजप्रस्पर्धमानर्द्धि यत्।
यद्भक्तेष्वजलस्थलभ्रममपि यद्गत्यप्रसङ्गोज्झितं
तद्विष्णोः परमं पदं वहतु नः श्रीरङ्गिणो मङ्गलम्॥ ११६

ஸ்ரீ ரங்கநாதரான விஷ்ணுவின் திருவடி பிருந்தாவனத்தில் உலாவியது. தயிர் கடையும் ஓசைக் கேற்ப ஆடக் கற்றுக் கொண்டது. லக்ஷ்மியின் கைகள் பெறுமின்பத்தின் ஸாக்ஷி. தாமரைப் பூவோடு போட்டியிடுகிற அழகுள்ளது. பக்தர்களிடம் ஏற்றத் தாழ்வு (இது நீர், இது தரை என்ற வேறுபாட்டுணர்வு.) உணராதது, தூது சென்று வருவதில் ஆர்வம் கொண்டது. அது நமக்கு மங்களம் வழங்கட்டும். (116)

शिञ्जानश्रुतिशिञ्जिनीमणिरवैर्वज्रारविन्दध्वज-
च्छत्रीकल्पकशङ्ख चक्रमुकुरैस्तैस्तैश्च रेखामयैः।
ऐश्वर्येण जयं त्रिविक्रममुखं घुष्यद्भिराम्रेडितं
श्रीरङ्गेशयपादपङ्कजयुगं वन्दामहे सुन्दरम्॥ ११७

*பேராளுமையுடன் மூவடியிட்டளந்தது முதலான வெற்றிச் செயல்களைப் பலமுறை திரும்பத் திரும்பப் பறைசாற்றுகின்ற ரங்கசாயியின் திருவடித் தாமரைகள், வேதம் ஒலிக்கின்ற சதங்கைகளின் ஓசையாலும் ரேகை வடிவில் வஜ்ராயுதம், தாமரை, கொடி, குடை, கல்பக மரம், சங்கு, சக்கிரம், கண்ணாடி இவற்றாலும் அழகியவை. இவற்றை வணங்குகிறோம். (117)*

पुनानि भुवनान्यहं बहुमुखीति सर्वाङ्गुली-

झलञ्झलितजाह्नवीलहरिवृन्दसन्देहदा।

दिवा निशि च रङ्गिणश्चरणचारु कल्पद्रुम-

प्रवाल नवमञ्जरी न खरुचीर्विगाहेमहि॥ ११८

*நான் பலவாறாகப் பெருகி உலகைத் தூயதாக்குவேன் என எல்லா விரல்களிலிருந்தும் சள சள எனப் பெருகிய கங்கையின் அலைவரிசைகளோ என்று சந்தேகப்படச் செய்கிற ரங்கனின் திருவடியாகிய கல்பகமரத்தின் இலைகளும் பூங்கொத்துகளும் போன்ற நக ஒளிகளில் இரவும் பகலும் ஆழ்ந்து நீராடுவோம். (118)*

श्रीरङ्गेन्दोः पदकिसलये नीलमञ्जीरमैत्र्या

वन्दे वृन्तप्रणयि मधुपव्रातराजीवजैत्रे।

नित्याभ्यर्चानतविधिमुखस्तोमसंशय्यमानैः

हेमांभोजैः निबिडनिकटे रामसीतोपनीतैः॥ ११९

*ஸ்ரீ ரங்க சந்திரனின் துளிர் போன்ற திருவடிகளை வணங்குகிறேன். நீல ரத்தினம் பதித்த சிலம்புகள் பொருந்தியிருப்பதால் வண்டுகளால் சூழப்பட்ட தாமரை போன்றுள்ளன. தினமும் வழிபடும் போது வணங்கி நிற்கின்ற பிரும்மா முதலானோரின் கூட்டமோ என சந்தேகிக்கும்படி ராமனாலும் ஸீதையாலும் தங்கத் தாமரைகள் இடைவெளியின்றி வைக்கப்பட்டுள்ளன. அவற்றை வணங்குகிறேன். (119)*

श्रीरामभद्रदीक्षितकृतं

# रामकर्णरसायनम्

ஸ்ரீ ராம பத்திரதீக்ஷிதர் இயற்றிய

# ஸ்ரீ ராம கர்ண ரஸாயனம்

## प्रथमो निष्यन्दः

## முதல் நிஷ்யந்தம்

दिशतु स कुशलं जिते दशास्ये
विधिविहितस्तुतिवेदितस्वरूपः ।
उपदिशति शिवो नृणां यदीयं
मनुमविमुक्तपुरे विमुक्तिहेतोः ॥ १

*காசியில் ராமனது திருநாமமாகிய மந்திரத்தைச் சிவபெருமான் மக்கள் முக்தி பெறுவதற்காக உபதேசிக்கிறார். ராவணன் வெல்லப்பட்டதும் பிரும்மாவின் துதியால் தன்னிலை விளக்கம் பெற்ற அந்த ராமர் நலம் வழங்கட்டும். (1)*

विहितविधिमपास्यता निषिद्धा-
न्यपि चरताप्यकृताक्षनिग्रहेण ।
यदघमुपचितं मया यतिष्ये
रघुवरसंस्मरणेन तन्निमार्ष्टुम् ॥ २

*எனக்கென வகுக்கப் பெற்ற நடைமுறைகளிலிருந்து விலகி, தடை செய்யப்பெற்ற நடைமுறைகளைக் கையாண்டு, புலன்களைக் கட்டுப்படுத்தாத என்னால் சேமிக்கப் பெற்ற பாபத்தைக் ரகுவரனின் ஸ்மரணத்தால் போக்கிக் கொள்ள முயல்வேன். (2)*

च्चिरपरिचितया मनो विकृष्टं
दिशि दिशि वासनया न मे नियाम्यम्।
इति कवनपथेऽवतार्य राम-
स्मरणविधावनघे करोम्युपायम्॥ ३

*வெகு நாட்களாகப் பழக்கப்படுத்தப்பட்ட வாஸனையால் திசை மாறித் திசை இழுத்துச் செல்லப்படுகிற மனம் கட்டுப்படுத்த இயலாதெனக் கண்டு குறையில்லாத ராமஸ்மரண வழியில் கவிபாட இறங்கி மனத்தை அடக்க உபாயத்தை ஏற்றுள்ளேன். (3)*

प्रकृतिरिति सरस्वतीति लक्ष्मी-
रिति गिरिजेति जगन्मयीति वा याम्।
गदति मुनिगणः कवित्वसिद्ध्यै
कथमपि तां कलये विदेहकन्याम्॥ ४

*பிரகிருதி என்றும் ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, உமை, உலகமே வடிவானவள் என்றும் முனிவர் கூட்டம் கூறுகிற விதேக அரசரின் மகளைக் கவிபாடும் திறமை பெறத் தியானிக்கிறேன். (4)*

मधुरभणितये पतिव्रतानां
मकुटमणिं कलये महीकुमारीम्।
पतिकृतरिपुपातनप्रतिज्ञा-
दलनभयादहितेऽप्यदत्तशापाम्॥ ५

*பதிவிரதைகளுக்குள்ளே மகுடத்து ரத்தினமும் தன் கணவர் தன் எதிரிகளை மாய்ப்பதாக சொன்ன உறுதி மொழி சிதறி விடுமோ என்ற பயத்தில் தன்னிடம் நேர்மையற்று நடந்த ராவணனைச் சபிக்காதிருந்தவளுமான பூமியின் புதல்வியை உள்ளத்தில் காண்கிறேன். (5)*

हृदय विषयमेव सेवसे किं
    यदयमुदग्रविषोपमः क्रमेण।
मदयति च निहन्ति च प्रकामं
    तदयनमेत्य गिरां भजस्व रामम्॥ ६

*இதயமே ! வெளிப்பொருளையே நாடுகிறாயே ? அது சிறிது சிறிதாகக் கொடிய விஷமாகக் கூடியது. முதலில் உணர் விழக்கச் செய்யும், பின் முற்றிலும் அழித்துவிடும். வாக்கு சென்றடையுமிடமான ராமனைச் சரணடைவாய். (6)*

रघुवरचरणारविन्दभक्ति-
    च्छलमकरन्दनिरन्तराभिषिक्ताः।
वकुलपरिमला गिरो मदीयाः
    कविकुलकर्णरसायनानि सन्तु॥ ७

*என் சொற்கள் ரகுவரனின் திருவடித் தாமரைகளில் பக்தியைக் காரணமாக்கி வெளியாகிற மகரந்தத் துகள்களால் எப்போதும் நீராட்டப் பெற்றவை, மகிழம் பூவின் மணம் கொண்டவை. இவை கவிகளின் காதுகளுக்கு இனிய ரஸாயனமாகட்டும். (7)*

भरतविदितपादुकाप्रभावं
    धरणिसुतादरणीयनामधेयम्।
करतलधृतकार्मुकं पुमांसं
    मरतकनीलशरीरमाश्रयामः॥ ८

*பரதனால் உணரப் பெற்ற பாதுகையின் பெருமை கொண்டவர், பூமியின் புதல்வியான ஸீதையால் அன்புடன் கூறப் பெறுகிற திருநாமம் கொண்டவர், கையில் வில்லேந்தியவர், மரகத ரத்தினம் போன்று மேனி வண்ணம் கொண்டவர். அந்தப் பரமபுருஷனை அண்டி நிற்போம். (8)*

निटिलनयननिर्वृतिप्रदाख्यं
कुटिलनिशाचरकुम्भिनां मृगेन्द्रम्।
कटिलसदसिमम्बुदाभमेकं
जटिलमुरीकृतचापबाणमीडे॥ ९

நெற்றிக் கண்ணரான சிவபெருமானுக்கு தன் நாமத்தால் அமைதி தருபவர். கொடும் அரக்கர்களாகிய யானைகளுக்குச் சிங்கமாகக் காட்சி தருபவர், இடுப்பில் உடைவாள் கொண்டவர், கார்மேக வண்ணத்தினர், வில்லும் அம்பும் ஏந்திய அந்தச் சடையுள்ளவரைத் துதிக்கிறேன். (9)

निलयमखिलमङ्गलस्य रक्षो-
बलयवसप्रबलायितानलास्त्रम्।
कलयति हृदयं विदेहकन्या-
वलयपदाङ्कितकन्धरं पुमांसम्॥ १०

எல்லா மங்களங்களுக்கும் இருப்பிடம், அரக்கர் சேனையாகிய வைக்கோலை எரிக்கிற அக்னி அஸ்திரம், விதேகரின் மகளின் கைவளையல்களால் அடையாளம் பெற்றுள்ள கழுத்துள்ளவர், அந்தப் பரமபுருஷனை என் உள்ளம் உருவகப்படுத்துகிறது. (10)

विमोहयति विष्टपत्रयजनान्गुणारोपण-
क्षणत्रुटितचण्डिकारमणचापचण्डध्वनौ।
जयत्यसकृदुन्मिषत्पुलकयोरपेतत्रपं
परस्परनिरीक्षणं रघुवरक्ष्माकन्ययोः॥ ११

நாண் பூட்டும் போது ஒடிந்த சிவனின் வில்லின் சத்தம் மூவுலகையும் கலக்கியது. அப்போது ரகுவரரும் பூமியின் புதல்வியும் அடிக்கடி மயிர் கூச்செறிய, நாணமகன்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டது சிறப்புடன் விளங்குகிறது. (11)

करोमि हृदयाम्बुजे कमपि वीरमम्भोनिधेः
निबन्धनमबिन्धनज्वलनबन्धुतूणीशयम्।
न कश्चिदपि दृश्यते जगति यस्य शक्तो जये
स्मरप्रहितजानकीनयनपद्मबाणं विना।। १२

*கடலைக் கட்டியவர், வடவை நெருப்பு போன்ற அம்புறாத்தூணி கொண்டவர், மன்மதன் ஏவிய ஜானகியின் பார்வையாகிற பாணத்தைத் தவிர வேறு எவரும் மூவுலகிலும் அவரை வெல்ல இயலாது. அத்தகைய ஒரு வீரரை உள்ளத் தாமரையில் கொள்கிறேன். (12)*

क एष दलदुत्पलद्युतिरुदारवेषोज्ज्वलः
स्वयं विशति मे मनस्त्वरितमाः परिज्ञायते।
स एष ननु जानकीकुचतटीपटीरद्रव-
प्रसक्तघनवासनाघुमुघुमायमानः प्रभुः ।। १३

*மலர்கிற நீல அல்லி போன்ற ஒளி கொண்டவர், பெருமை மிக்க ஆடையணி பூண்டவர், யார் இவர்! என் உள்ளத்தினுள் வேகத்துடன் தானே நுழைகிறாரே! இவர் ஜானகியின் மார்பகத்துச் சந்தனப் பூச்சுடன் ஒட்டியதால் குமு குமு என மணக்கிற அந்தப் பிரபு அல்லவா? (13)*

भजे शरधनुर्धरं विकटचित्रकूटाटवी-
चरं कमपि शंकरप्रणयिनीप्रियाख्यं प्रभुम्।
स्फुटाकलितकुङ्कुमा वदति यस्य वक्षस्तटी
मृगेन्द्ररसितत्रसज्जनकजाहठालिङ्गनम्।। १४

*அம்பும் வில்லும் ஏந்தியவர், அடர்ந்த சித்திர கூடத்துக் காட்டில் சுற்றி வருபவர், சிவனுக்கினியவளான உமை விரும்புகிற பெயர் கொண்டவர், பளிச்சென குங்குமப்பூக் குழம்பு பூசப்பட்ட அவரது மார்பு சிங்கக் கர்ஜனையால் பயந்து ஸீதை இறுக அணைத்துக் கொண்டதைக் காட்டுகிறது. அவரை அண்டி நிற்கிறேன். (14)*

चिरस्य विधुरस्य मे विषयघर्मघोरातपैः
पयोदनिचयोदयप्रतिनिधिः किलेयं दशा।
नराघमुषि राघवे यदधुना मनः प्रीयते
समस्तसुरमस्तकप्रणतिकर्मणि ब्रह्मणि ।। १५

*வெளிப் பொருள் நாட்டமாகிறகொடும் வெயிலில் வெகுநாட்கள் வாடி நிற்கிற எனக்குப் பெரு மேகக் கூட்டம் எதிரில் தோன்றியதற்கொப்பான நிலை இன்று ஏற்பட்டுள்ளது. தேவர்களனைவராலும் வணங்கப் பெற்ற பரம் பொருளும் மனிதனின் பாபக்குவியலை அகற்றுபவருமான ராகவனிடம் இப்போது என் மனம் அன்பால் நிறைவு காண்கிறதே ? (15)*

कटीघटितवल्कलं घनलसज्जटामण्डलं
करात्तशरकार्मुकं कमलपत्रमित्रेक्षणम् ।
तमालदलमेचकं धरणिकन्यकाकामुकं
तरङ्गितकृपारसं तरणिवंशदीपं भजे ।। १६

*இடுப்பில் மரவுரி கட்டியவர், அடர்ந்த மேகம் போன்ற சடை மண்டலமுள்ளவர், கைகளில் அம்பும் வில்லும் ஏந்தியவர், தாமரை இதழுடன் நட்புள்ள கண்கள் கொண்டவர், பச்சிலை போன்ற அழகிய மேனி வண்ணம் கொண்டவர், பூமியின் புதல்வியிடம் காதல் கொண்டவர், அலைபாய்கிற பரிவுப் பெருக்குள்ளவர், ஸூர்ய வம்சத்தின் ஒளி விளக்கானவர், அவரை வழிபடுகிறேன். (16)*

अचोदितकुलक्रमं पुनरपृष्टजातिक्रियं
नयानयविचारणाविधुरमस्तशङ्काकणम्।
उपेयुषि विभीषणे झटिति दत्तमस्याभयं
मयेति समुदीरिता भगवतो गिरः पान्तु नः ।। १७

*குலவழி முறை கேட்காமல், ஜாதியும் தொழிலும் பற்றி வினவாமல், நட்பு கொள்வது ஏற்றதா, ஏற்கத்தகாததா என விசாரிக்காமல், துளி கூட ஐயமின்றி தன்னை வந்தடைந்த*

விபீஷணனிடம் உடன் இவனுக்கு என்னால் அபயமளிக்கப் பெற்றதென வெளிவந்த பகவானின் வாக்குகள் நம்மை காப்பாற்றட்டும். (17)

कह्लाराम्बुजगन्धिमन्दपवने खेलन्मृगालंकृते
कूजत्कोकिलबालचूतगहने कूले सरय्वाः शुभे।
पश्यान्वेति शुकं शुकीति चुबुके गृह्णन्करेण प्रियां
चित्ते भाति स कोऽपि मे दशशिरोमत्तेभकण्ठीरवः ॥ १८

ஸரயு நதியின் மங்களமான கரை, ஆம்பலும் தாமரையும்மென் காற்றை மணக்கச் செய்கின்றன. கூவுகின்ற குயில்களுடன் மாமரக் காடு கரை முழுவதிலும் அடர்ந்துள்ளது. மான்கள் விளையாடுகின்ற அந்தக் கரையில் ராவணனெனும் மதயானையை அடக்கிய சிங்கம் ஒன்று ''ஆண் கிளியைப் பெண் கிளி தொடர்கிறது, பார்ப்பாய்'' என அன்புக்கினியவளின் முகவாயைக் கையில் ஏந்தி காட்டுகிறது. அது என் உள்ளத்தில் காட்சி தருகிறது. (18)

माद्यत्केकिनि चित्रकूटकटके मन्दाकिनीमेदुरे
प्रत्यग्रप्रसवस्य केसरतरोः प्रच्छायशीते तले।
कौशेयास्तरणे विदेहदुहितुः कुर्वाणमङ्के शिरो
नीलाम्भोदनिभं भजे रघुकुलप्राचीनभाग्यं प्रभुम् ॥ १९

சித்திர கூடத்தின் தாழ்வரை, குயில்கள் மதர்த்துக் கூவுகின்றன. மந்தாகினியாற்றின் பசுமையால் புதிதாகப் பூத்துக் குலுங்குகிற புன்னை மரத்தின் நிழலின் தண்மை கொண்ட அடித்தளத்தில் பட்டு விரிப்பின் மீது ஸீதையின் மடியில் தலை வைத்துள்ள கார்மேக வண்ணரும் ரகு குலத்தின் பழைய பாக்கியமுமான பிரபுவை வழிபடுகிறேன். (19)

त्रस्तप्रस्थितहंसयूथमभितोनृत्यन्मयूरव्रजं
वल्मीकान्तरसंप्रविष्टभुजगं पङ्क्तीभवच्चातकम्।
पुष्प्यन्नीपसिलिन्ध्रकेतकि जनस्थानाटवीमेयुषा
कालिम्ना मम केनचित्कवचितं चेतो विराधद्विषा ॥ २०

*ஜனஸ்தானத்தின் காடு, பயந்து தாவி ஓடுகிற அன்னப் பறவைக் கூட்டம், சுற்றி மயில் கூட்டம் ஆடுகிறது. பாம்புகள் புற்றுகளின் உள் நுழைகின்றன. சாதகப் பட்சிகள் வரிசையாக வானில் பறக்கின்றன. கடம்பும் வாழையும் தாழையும் பூத்துக் குலுங்குகின்றன. விராதனின் எதிரியான ஒரு கருமை என் உள்ளத்திற்குக் கவசமாக நிற்கிறது. (ராமனை கரு மேகமாகக் கண்டதும் நிகழ்ந்தது இது. (20)*

संरम्भस्खलितोत्तरीयमवनिन्यस्ताग्रपादं भुजा-

वुद्यम्य श्लथनीवि पुष्पनिचयं संगृह्णतीं जानकीम्।

पश्यन्पञ्चवटीवने मुहुरपि प्रच्छन्न एवान्तिके

हस्तोपात्तधनुःशरः स्फुरतु मे चित्ते रघुग्रामणीः ॥ २१

*பஞ்சவடிக் காட்டில் மேலாடை நழுவ, தரையில் கால் நுனியைப் பதித்து, கைகளை மேலே தூக்கி இடுப்பு ஆடைக் கச்சு நழுவப் பூக்களைப் பறிக்கிற ஜானகியை அருகில் மறைந்து நின்று அடிக்கடி பார்க்கிறவரும் அம்பையும் வில்லையும் கைகளில் ஏந்தியவருமான ரகு நாயகன் என் உள்ளத்தில் துலங்கட்டும். (21)*

निर्वृत्ते खरदूषणत्रिशिरसामुन्मूलनादाहवे

वैदेही परिषस्वजे सपदि यं मूर्ता जयश्रीरिव।

उन्मीलत्पुलकश्रमाम्भसि धनुर्न्यस्तैकहस्ताम्बुजे

तस्मिन्सस्मितवक्त्रचन्द्रमसि मे देवे मनो धावति ॥ २२

*கரனையும் தூஷணனையும் திரிசிரனையும் அழித்துப் போர் நின்றதும். வெற்றி லக்ஷ்மியே உருவெடுத்து வந்தாற் போன்ற ஸீதை அவரை அணைத்து நின்றாள். அதனால் புல்லரிப்பும் களைப்பாலான வியர்வையும் வெளிப்பட, தாமரை போன்ற கையை வில்லின் மீது ஊன்றி. முகமாகிய சந்திரன் புன் சிரிப்புடன் மலர நிற்கிற அந்தத் தேவனிடம் என் மனம் பாய்ந்தோடுகிறது. (22)*

पायात्पर्णकुटीगतो घनघटासिक्तावनीसौरभ-
घ्राणव्यापृतपुष्करद्विपकुले नीपप्रसूनाकुले ।
केकाकण्ठशिखण्डिताण्डवयुते खेलत्पुरोमारुते
नन्दन्प्रावृषि चित्रकूटकटके सीतासखो राघवः ॥ २३

*சித்திர கூட மலையின் தாழ்வரை. ஸீதையைத் துணையாகக் கொண்டு ஓலைக் குடிலில் ராகவன் பெரு மழைப் பருவத்தைக் கண்டு ரசிக்கிறார். அடர்ந்த மேகம் பொழிந்த மழையில் நனைந்த பூமியிலிருந்து வெளியாகிற நறுமணத்தை முகர்வதில், யானைக் கூட்டம் ஆர்வம் கொண்டுள்ளது. கடம்பப் பூ தரையில் கொட்டிக் கிடக்கிறது. மயில்கள் ஆடிக் கொண்டு க்கே கா எனக் கூவுகின்றன. எதிர் காற்று விளையாடுகிறது. இதனை ராகவன் ரசித்துப் பார்க்கிறார். (23)*

अर्धावर्तितमन्त्रमर्धविरतस्वाध्यायमर्धोज्झित-
ब्रह्मोपासनमर्धमुक्तहवनातिथ्यादिसर्वक्रियम् ।
दृष्ट्वा पञ्चवटीजुषो यमृषयः सार्थं तपो मेनिरे
कंदर्पायुतसुन्दरं व्रजति मे काकुत्स्थमेनं मनः ॥ २४

*பத்தாயிரம் மன்மதர்களின் அழகு கொண்ட ராமனைப் பஞ்சவடியில் வசிக்கிற ருஷிகள், கூறுகிற மந்திரத்தைப் பாதியில் நிறுத்துபவர்களாக, வேத மோதலைப் பாதியில் விட்டவர்களாக, ஸந்தியாவந்தனத்தில் பிரும்மோ-பாஸனத்தைப் பாதியில் விட்டவர்களாகக் கண்டு களித்து, தாம் இயற்றி வருகிற தவம் பயன் பெற்று விட்டதாகக் கருதினர். அந்த ககுத்தவம்சத்தானை என் மனம் நாடுகிறது. (24)*

चारुस्मेरमुखाम्बुजं चरणयोर्मञ्जुक्वणन्नूपुरं
चञ्चद्रत्नललन्तिकालिकलसत्कस्तूरिकाचित्रकम् ।
कान्तव्याघ्रनखानुबन्धिकनकग्रैवेयकालंकृतं
कौसल्याङ्कविभूषणं कुवलयश्यामं भजामः शिशुम् ॥ २५

*கௌஸல்யையின் மடிக்கு அணியாக, நீல அல்லி போன்ற மேனி வண்ணம் கொண்ட சிசு படுத்திருக்கிறது. அழகிய புன் சிரிப்பு கொண்ட தாமரை போன்ற முகமுள்ளது, சரணங்களில் சிலம்புகள் இனிது ஒலிக்கின்றன. ரத்தினத் தொங்கட்டான் அணிந்த நெற்றியில் கஸ்தூரீ திலகம் விளங்குகிறது. அழகிய புலி நகம் தொங்குகிற அழகிய தங்கக் கழுத்தாரம். இந்த அழகிய சிசுவை வழிபடுவோம். (25)*

दत्त्वा पार्श्वजुषो विदेहदुहितुश्चापं कराम्भोरुहे
गुल्फद्वन्द्वनिवेशितस्फिगवनौ कुर्वन्समे जानुनी।
दृष्ट्या कूणितया कराम्बुजयुगन्यासक्तमूलाञ्चलं
पश्यन्बाणमृजुर्न वेति हृदि मे वीरोऽयमारोहति॥ २६

*அருகில் அமர்ந்துள்ள வைதேஹியிடம் வில்லைக் கொடுத்துவிட்டு குதி கால்கள் மீது புட்டத்தை வைத்து தரையில் கணுக்கால்களைப் படிய வைத்து, தாமரை போன்ற இரு கைகளிலும் அம்பின் நுனியையும் அடியையும் பிடித்துக் கொண்டு கோணல் பார்வையால் அம்பு நேராக உள்ளதா இல்லையா எனக் காண்கின்ற இந்த வீரன் என் இதயத்தினுள் ஏறுகிறான். (26)*

उन्मीलन्नवमल्लिकापरिमलोदञ्चद्द्विरेफारवै-
रारण्ये तुलसीवने मुखरिते दृश्ये शुकश्यामले।
शश्वल्लीनमयूरदृग्वलनया शश्वद्गृहीतं बला-
ज्जानक्या सह चित्रकूटकटके देवं मनो धावति॥ २७

*சித்திர கூடத் தாழ்வரை. மலர்ந்த மல்லிகையின் நறுமணத்தால் ஈர்க்கப் பெற்ற வண்டினத்தின் ரீங்காரத்தால் காட்டிலுள்ள துளஸிக் காடு எதிரொலிக்க, கிளி போன்ற பச்சையாகத் தெரிகிற காட்சி. மயிலின் கண்களின் அசைவுடன் ஒளிந்துள்ள ஜானகியால் வலிவுடன் பிடிக்கப்பட்ட தேவனை நோக்கி மனம் ஓடுகிறது. (27)*

सीतादत्तकराम्बुजं पदयुगश्लिष्यन्मणीपादुकं
हर्षावेक्षिविहारबर्ह्युपसृताभ्यर्णं घटोध्न्या गवा।
स्वामिन्देव जयेति पञ्जरशुकस्वानोल्लसत्तोरगं
साकेताधिपतेरुषस्यवतु नः शय्यागृहान्निर्गमः॥ २८

*ஸீதை கைகொடுக்க, ரத்தின பாதுகையைக் கால்களில் இணைத்து, விளையாட்டுக்கான மயில் மகிழ்ச்சியுடன் பார்க்க, குடம்பால் கறக்கின்ற பசு அருகே வர, எஜமானரே! தேவரே! ஜய எனக் கூண்டிலுள்ள கிளி வாயில் தோரணத்திலமர்ந்து வரவேற்க, ஸாகேத தேசத்தரசன் விடியற்காலையில் படுக்கையறையை விட்டு வெளியேறும் காட்சி நம்மைக் காப்பாற்றட்டும். (28)*

पाणौ मुष्टिगृहीतपन्नगलतापर्णोच्चये बिभ्रतीं
वामे रत्नकरण्डकं तदपरे वीटीं विदेहात्मजाम्।
पश्यन्कूजति पार्श्वतः कलरवे दृष्ट्या तिरश्चीनया
मन्दस्मेरमुखीं हृदि स्फुरति मे मञ्चाधिरूढो विभुः॥ २९

*இடது கைப்பிடியில் வெற்றிலைக் குவியலைப் பிடித்துக் கொண்டு அதன் மீது ரத்தின காலாஞ்சியையும் வலதில் தாம்பூல வீடிகையையும் ஏந்தி வருகிற புன்சிரிப்புள்ள வைதேஹி அறையினுள் நுழைந்ததும் கூண்டுக் கிளி கூவ, மஞ்சத்திலமர்ந்த பிரபு குறுக்குப் பார்வையால் கண்டு ரசிக்கிறார். அந்த காட்சி என் உள்ளத்தில் ஒளிர்கிறது. (29)*

शैलान्मत्तोऽवतरति करी ज्यास्वनैर्वारयैनं
सौमित्रे मा भवतु चकिता जानकीति प्रहिण्वन्।
तज्ज्याघोषं मृगपतिरवं व्याहरन्वेपिताङ्ग्या
गाढाश्लिष्टो जनकसुतया कौसलेयोऽवतान्नः॥ ३०

*லக்ஷ்மணா! மதம் பிடித்த யானை மலையிலிருந்து இறங்குகிறது. அதனை நாணொலியால் தடுப்பாய்! ஜானகி பயப்படப் போகிறாள் என லக்ஷ்மணனை அனுப்பி விட்டு,*

*லக்ஷ்மணனின் நாணொலியை சிங்கத்தின் குரல் என ராமன் கூற, உடல் நடுங்கப் பதறி வந்த ஜானகியால் இறுக அணைக்கப் பெற்ற கோஸலையின் புதல்வர் நம்மைக் காப்பாற்றட்டும். (30)*

**हंसी मन्दं चलति हरिणी वीक्षते लोललोलं**
**रम्यं कूजत्ययमिह पिको राजते बर्हिणोऽसौ ।**
**इत्याश्चर्याद्वनभुवि वधूं दर्शयन्तीं यदि त्वां**
**पश्याम्येतैरलमिति वदन्पातु नः कौसलेयः ॥ ३१**

*அன்னப் பேடு மெள்ளச் செல்கிறது. பெண் மான் அலைபாய்கிற கண்களால் பார்க்கிறது. இங்கே குயில் இனிது கூவுகிறது. இந்த மயில் மிக அழகாக விளங்குகிறது என்று வியப்புடன் அவற்றைக் காட்டுகிற ஸீதையிடம், உன்னைக் காண்கிறேன். அதுவே போதும் என்று கூறுகிற கோஸலையின் புதல்வர் நம்மைக் காக்கட்டும். (31)*

**देव त्वां रघुवीर नीरदनिभं सीतातडित्संगतं**
**कारुण्यामृतवर्षिणं कतिपये दृष्ट्वा मयूरा इव ।**
**किं नृत्यन्ति न चातका इव परे किं वा न माद्यन्त्यतः**
**स्वामिन्पालय पालयेत्यहमपि क्रोशामि मण्डूकवत् ॥ ३२**

*ரகுவீரரே ! ஸீதை என்ற மின்னற்கொடி இணைந்து காருண்ய நீர் பொழிகிற கார்மேகம் போன்ற உம்மைக் கண்டு சிலர் மயில்கள் போல் நர்த்தனம் புரிகின்றனரல்லவா ? சாதகப் பறவைகள் போல் மதர்த்து நிற்கவில்லையா ? நானும் தவளை போல் ஸ்வாமி ! என்னைக் காப்பாற்று ! காப்பாற்று ! எனக் கத்துகிறேன். (32)*

**खेलत्केकिनि संचरन्मृगशिशौ चूतस्फुरद्वल्कले**
**नीपन्यस्तनिषङ्गधन्वनि जनस्थानोटजप्राङ्गणे ।**
**सीतां पुष्पसमित्कुशान्हृतवतीं संभावयन्तं दृशा**
**बद्धस्वस्तिकमेणचर्मणि घनच्छायं भजेयं प्रभुम् ॥ ३३**

ஜனஸ்தானத்துக் குடிலின் முன் பகுதி. மயில்கள் விளையாடுகின்றன. மான் குட்டி உலாவுகிறது. மாமரத்தின் மீது மரவுரி தொங்குகிறது. கடம்ப மரத்தின் மீது அம்புறாத்தூணியும் வில்லும் தொங்குகின்றன. மான் தோலைக் குறுக்கே உடுத்திய கார் மேக வண்ணரான பிரபு ராமன், பூவும் ஸமித்தும் தர்ப்பையும் கொணர்கிற ஸீதையைப் பார்வையால் பாராட்டுகிறார். அவரை வழிபடுவேன். (33)

संप्राप्तो मृगयां विधाय नलिनीपत्राहृतैरम्बुभिः
संक्षाल्यांशुकपल्लवेन कुचयोः पादाब्जमुन्मार्जतीम्।
मृष्टा नेह मनःशिलेति विसृतां रत्नाङ्गुलीयश्रियं
वैदेहीं प्रति दर्शयन्हृदि कृतव्याजो विभुः पातु नः ॥ ३४

வேட்டையாடி விட்டு வந்தவரது திருவடிகளைத் தாமரை இலைகளில் ஏந்திக் கொணர்ந்த நீரால் அலம்புகிற ஸீதையிடம் இங்கு மஞ்சேசிலைப் பூச்சு இல்லை என விரித்து ரத்தின மோதிர அழகை மார்பில் ஏதோ மறை பொருளுடன் காட்டுகிற பிரபு நம்மைக் காக்கட்டும். (34)

श्लथकचभरान्नैतद्भूमौ निपातय सुन्दरी-
त्युदितहसितं सव्रीडाया महीदुहितुर्दिशन्।
वनतरुतले मल्लीपुष्पैः कृतं नवगर्भकं
दिनकरकुलोत्तंसो देवोऽधिरोहति मे मनः ॥ ३५

''அழகியே! உதிர்ந்த கேசக் கற்றைகளை இந்தத் தரையில் வீழ்த்தாதே'' எனக் கூறி, காட்டு மரத்தடியில் மல்லிகைப் பூக்களாலான புதிய பூங்கொத்தை (சரட்டை) நாணமுற்ற பூமியின் புதல்வியிடம் தருகிற ஸூர்யவம்சத்தின் சிறப்பு மிக்க தேவன் என் மனத்தின் மீது ஏறி அமர்கிறார். (35)

दलितदनुजाटोपे चापाधिरोपितसायके
मरतकमणिच्छायादायादकायमनोहरे (होभरे)।

प्रणतजनताप्राणत्राणप्रवीणपराक्रमे
स्फुरति पुरतोऽस्माकं सीतापतौ दुरितं कुतः ॥ ३६

ஸீதையின் கணவர் அஸுரர்களின் செருக்கைச் சிதைத்தவர். மரகத ரத்ன ஒளிக்குப்பங்காளியான ஒளி கொண்டவர். தன்னை வணங்கியவரின் உயிரைக் காப்பதில் பராக்கிரமம் மிக்கவர். அவர் வில்லில் பூட்டிய அம்புடன் எதிரில் துலங்கும்போது நம்மிடம் பாபம் எப்படி நேரும்? (36)

अविदितनतक्लेशानीशानपास्य दिशामहो
सह परिहरन्कालीकेलीसखं मुरलीभृता।
वनमृगपरीवारे वीरे वरेषुधनुर्धरे
कुवलयदलश्यामे रामे कुतूहलि मे मनः ॥ ३७

வணங்கியவரின் துயரறியாத திக்பாலர்களையும் சிவனையும் விஷ்ணுவுடன் தவிர்த்துவிட்டு, காட்டு மிருகங்களைப் பரிவாரமாகக் கொண்டவரும் சிறந்த அம்புகளையும் வில்லையும் தாங்கியவரும் நீலோத்பலம் போன்ற வண்ணம் கொண்டவருமான ராமனிடம் என் மனம் ஆர்வம் கொண்டுள்ளது. (37)

स्फटिकधवलान्मेघश्यामे गृहीतमृगानला-
द्धृतधनुरिषौ भूतेशानात्प्लवंगमसेविते।
मतिरवतरत्यात्तव्याघ्राजिनाद्धृतवल्कले
शिखरितनयानाथात्पृथ्वीसुतापरिणेतरि॥ ३८

படிகம் போன்ற தூய நிறம் கொண்டவரிடமிருந்து கார்மேக வண்ணனிடம், மானையும் நெருப்பையும் தாங்கியவரிடமிருந்து வில்லும் அம்பும் ஏந்தியவரிடம், பூதங்களின் ஈசரிடமிருந்து வானரர்களால் பணிவிடை செய்யப்பட்டவரிடம், புலித்தோலணிந்தவரிடமிருந்து, மரவுரி உடுத்தியவரிடம், மலைகளின் நாதனிடமிருந்து பூமியின் புதல்வியை மணந்தவரிடம் புத்தி இறங்கி நிற்கிறது. (சிவனிடமிருந்து விலகி ராமனிடம் உள்ளம் பதிகிறது.) (38)

स्वच्छन्दं व्रजसुन्दरीजनविटाद्धद्धैकदारव्रते
लीलावेणुलसत्करात्त्रिभुवनत्राणाय चापस्पृशि।
चौर्याकृष्टवधूजनात्परिणतौ कीटादिमुक्तिप्रदे
व्यावृत्तं मम यादवाद्रघुपतौ चेतः स्वयं धावति।। ३९

*தன் விருப்பப்படி கோபிகளிடம் விடனுக இருப்பவரை விட்டு ஒரே மனேவி என்ற விரதம் பூண்டவரிடம், விளேயாட்டாக புல்லாங்குழலேக் கையில் கொண்டவரிடம் இருந்து மூவுலகையும் காக்க வில்லேந்தியவரிடம், திருட்டுத் தனமாகப் பெண்களேப் பறித்தவரிடம் இருந்து புழு முதலானவற்றிற்கும் முக்தி தருபவரிடம் இவ்வாறு யாதவனுகிய கிருஷ்ணனிடமிருந்து ரகுபதியான ராமனிடம் என் மனம் பாய்ந்தோடுகிறது. (கிருஷ்ணனேக் காட்டிலும் ராமனிடம் எனக்குப் பக்தி அதிகம்.) (39)*

कश्चिद्बालो मृत्तिकां भक्षयित्वा कश्चिद्वृद्धश्चूतमूले लुठित्वा।
मां रक्षेच्चेन्मास्तु तद्यन्ममास्ते त्राता सीताकेलिलोलो युवैकः ।।४०

*மண்ணேத் தின்ற பாலனே, மாமரத்தினடியில் புரளும் கிழவனே என்னேக் காப்பாற்றக் கூடுமாயின் அந்தப் பாதுகாப்பு வேண்டாம். ஸீதையுடன் விளேயாட்டில் ஈடுபட்டுள்ள ஒரு யுவன் எனக்குக் காப்பாளனுக உள்ளான். (40)*

अभिमतफलसिद्ध्यै ध्यातुमेकं सुराणा-
मनुसरति मनो मे यावदाबद्धवेगम्।
अपहरति निरुन्धन्नन्तरा तावदेत-
त्कपिकुलपरिवारः कश्चिदम्भोदनीलः ।। ४१

*நான் விரும்பியதைப் பெறுவதற்காக தேவர்களில் ஒருவரைப் பற்றி எண்ண என் மனம் வேகத்துடன் முனேயும் போது, அதனே இடையில் தடுத்து வானரர் கூட்டம் சூழ்ந்த கார் மேக வண்ணன் ஒருவன் என் மனத்தைத் திருடிச் செல்கிருன். (41)*

क्षणचलितनिरूढस्वर्णदीकर्णभूषे
परिहृतमयकन्यापत्रलेखाप्रसङ्गे।
विरचितसुरसुभ्रूविभ्रमप्रातिभाव्ये
कुतुकितमतिभव्ये कापि कालिम्नि चेतः ॥ ४२

*ஒரு கருநிறமுள்ள பொருள். நொடிப் பொழுது ஓடி உடன் தடைபட்ட கங்கை போன்ற காதணி கொண்டது. மயனின் மகளான மந்தோதரியின் ஸுமங்கலிப் பூச்சை அழித்தது. தேவ மகளிரின் கேளிக்கை தொடரப் பொறுப் பேற்றது. மிக மங்களமான வடிவம். அதில் என் மனம் குதுகுதுப்புடன் ஆர்வம் காட்டுகிறது. (42)*

कचभरनिटिलभ्रूकर्णदृङ्नासिकोष्ठ-
स्तनजघननितम्बं पश्यदन्याङ्गनानाम्।
मलिनयति मनश्चेन्मन्मथस्तावता किं
विमलयितुमहल्यापावनोऽप्यस्ति वीरः ॥ ४३

*பிற மங்கையரின் கேசபாரம், நெற்றி, புருவம், காது, கண், மூக்கு, உதடு, மார்பகம், இடுப்பு, புட்டம் இவற்றைக் காண முற்படுகிற மனத்தை மன்மதன் தூண்டித் தூய்மை கெடச் செய்வானாயின் கவலை ஏன் ? அகலியையைத் தூய்மைப் படுத்திய அந்த வீரன் உள்ளானே! (43)*

नवकुवलयदामश्यामलः कोमलाङ्ग्या
विरचितमधुरश्रीरेकया विद्युतेव।
जलधर इव काले जृम्भमाणो मयूरं
कुतुकयति मनो मे कोऽपि कोदण्डभूषः ॥ ४४

*மழை காலத் தொடக்கத்தில் கரு கருவென வானில் ஒரு மின்னலுடன் குமுறும் மேகம் மயிலை உசுப்பி விடுவதைப் போல், புதிய நீல ஆம்பல் போன்ற மேனி வண்ணம் கொண்டு வில்லை அணியாகக் கொண்ட ஒருவன் ஒரு அழகிய பெண்ணுடன் தோன்றி என்னை ஆர்வம் கொள்ளச் செய்கிறான். (44)*

मनसि मम समिन्द्धे पुण्यभाजामवेक्ष्यः
कपिसदसि मुनीनां चेतसास्वादनीयः ।
जनकनृपतिकन्यासस्पृहालिङ्गनार्हः
श्रुतियुवतिकबर्याः कोऽपि सौरभ्यसारः ॥ ४५

*புண்ணியம் செய்தவர்களால் மட்டும் வானரர்களுக்கிடையே காணத்தக்கவர். முனிவர்களால் உள்ளத்தில் சுவைக்கத்தக்கவர். ஜனக மஹாராஜனின் புதல்வியால் ஆசையுடன் தழுவத்தக்கவர், வேதம் எனும் யுவதியின் தலை முடியில் (உபநிஷத்தில்) நறுமண மிக்க பூச்செண்டாக உள்ளவர். என் மனத்தில் ஒளிர்கிறார். (45)*

कुवलयदलनीलः कोऽपि रक्षोवधूनां
कुचगिरिषु निपातं बाष्पवृष्टेर्विधाता ।
निखिलभुवनचेतोबर्हिनृत्तैकहेतुः
शमयति मम तापं शार्ङ्गचापाम्बुवाहः ॥ ४६

*அல்லி இதழ் போன்ற நீலவண்ணம் கொண்டது. அரக்கர் மகளிரின் மார்பகங்களில் கண்ணீர் மழை கொட்டச் செய்வது, உலகமனைத்தின் மனமாகிய மயிலாடச் செய்வது, சார்ங்கமெனும் வில்லேந்திய கருமேகம், அது என் உள்ளத் தாபத்தைச் சமனப்படுத்துகிறது. (46)*

निगमशिखरिशृङ्गान्नित्यमागत्य खेलन्
मुनिजनहृदरण्ये मोहसारङ्गमुक्ते ।
दशवदनगजेन्द्रे दर्शिताघातलीलो
वशयति रघुसिंहो मानसं नः प्रसन्नः ॥ ४७

*ரகு குலத்திலுதித்த சிங்கம் அது. உபநிஷத்தெனும் கொடு முடியிலிருந்து தினமும் வந்து மோகமெனும் மான் கூட்டம் அகன்ற முனிவரின் மனமாகிய காட்டில் விளையாடுகிறது. ராவணனெனும் யானையிடம் தன் தாக்குதலை விளையாட்டாகக் காட்டுவது. அது அருள் கூர்ந்து நம் மனத்தை வசப்படுத்துகிறது. (47)*

करयोः शरकार्मुकाभिरामं पदयोरश्मविवेककृत्परागम् ।
कलितेषुधिमंसयोः प्रभुं तं करुणापूर्णमपाङ्गयोरुपासे ॥ ४८

*கடைக் கண்களில் கருணை நிரம்பிய பிரபு அவர். கைகளில் வில்லையும் அம்பையும் அழகாக ஏந்தியவர், கால்களில் கல்லைப் பெண்ணாக்குகிற தூசி கொண்டவர். தோள்களில் அம்புறாத்தூணி கொண்டவர். அவரை வழிபடுகிறேன். (48)*

अवलम्ब्य शरासमद्रिसारं गुणमाकृष्य गुरुध्वनिं विमुञ्चन् ।
विशिखानहितेषु रुक्मपुङ्खान्विहरत्याहवसीम्नि वीररामः ॥ ४९

*வீரரான அந்த ராமன் மலையின் வலிவுள்ள வில்லைப் பிடித்து நாணை இழுத்து பேரொலி எழுப்பி, எதிரிகள் மீது தங்க பூண் போட்ட அம்புகளைச் செலுத்திப் போர்க் களத்தில் விளையாடுகிறார். (49)*

चरमाङ्गनिबद्धचारुतूणं सुरमाङ्गल्यधुरीणचापबाणम् ।
अलिनीलमुपैति मानसं मे नलिनीनायकवंशभागधेयम् ॥ ५०

*தாமரையின் நாதனான ஸூரியனின் வம்சத்தின் பாக்கியமானது அது. முதுகில் அம்புறாத்தூணி பூட்டிக் கொண்டது. தேவர்களுக்கு மங்களம் தருவதில் முனைந்த வில்லும் அம்பும் ஏந்தியது. நல்ல நீல நிறம் கொண்டது. என் மனம் அதனருகில் சென்று நிற்கிறது. (50)*

दृशि कारुणिकः करे धनुष्मान्कुशिकापत्यमखस्य रक्षिता यः ।
रजनीचरतूलचण्डवातो भजनीयो मम सोऽयमेक एव ॥ ५१

*கண்களின் பரிவு மிக்கவர், கையில் வில்லேந்தியவர், கௌசிகரின் வேள்வியைப் பாதுகாத்தவர், ராக்ஷஸர் எனும் காய்ந்த புல்லைப் புயல் காற்றாக அகற்றுபவர். அவர் ஒருவரே என் வழிபாட்டிற்குரியவர். (51)*

वदने शबरीफलाभिलाषं वचने सत्यधुराविराजमानम् ।
नयनेऽप्यनवेक्षितान्यदारं चरणे जीवलमाश्रये नृपालम् ॥ ५२

அவர் அரசர், ஆனால் சபரீ அளித்த இலந்தையில் ஆசையை வாயிலும், உண்மை கூறுவதில் ஆர்வத்தைச் சொல்லிலும், பிறமகளிரை நோக்காமையைக் கண்களிலும் உயிரூட்டுவதில் ஆர்வத்தைக் கால்களிலும் கொண்டவர். அவரை அண்டி நிற்கிறேன். (52)

नवनीरदनीलमात्तचापं भवनीहाररविं शृणोतु लोकः ।
अवनीतनयासखं जगत्यां स्तवनीयं मम दैवमेकमेव ॥ ५३

உலகம் கேட்டுக் கொள்ளட்டும், புது மேகம் போல் நீலமேனி கொண்டவர். வில்லேந்தியவர், பூமியின் புதல்வியைத் துணைவியாகக் கொண்டவர், பிறப்பிறப்பெனும் பனிக்கு அவர் ஸூரியன். அந்தத் தெய்வமே என் துதிக்குரியது. (53)

भरिता दयया दृशोः सुराणां परितापक्षतये गृहीतचापा ।
दुरितानि धुनोतु कापि लीला च्छुरिता भूमिसुताकुचाङ्गरागैः ॥

கண்களில் பரிவு நிறைந்தது. தேவர்களின் பரிதாப நிலையை நீக்க வில்லேந்தியது. பூமியின் புதல்வியின் மார்பகத்து நறுமணப் பூச்சைத் தன் மார்பில் அடையாளமாகக் கொண்டது. அந்த லீலை வடிவம் என் பாபங்களைப் போக்கட்டும். (54)

सुरचारणसिद्धबद्धसेवः शरचापाभरणो नवाम्बुदश्रीः ।
अहिमांशुकुलार्णवेन्दुरेको महिमाऽन्तःकरणे ममाविरस्तु ॥ ५५

ஸூரிய குலமாகிய பாற்கடலில் தோன்றிய சந்திரன், தேவரும் சாரணரும் ஸித்தரும் சேவித்தது. அம்பும் வில்லும் பூண்டது. புது மேக அழகு கொண்டது, அந்தப் பெரும் பொருள் என் உள்ளத்தில் துலங்கட்டும். (55)

धनुषा सह सायकं दधाने जनुषा भूषितचण्डरश्मिवंशे ।
कुचनम्रमहीसुतानुरक्ते क्वचन न्यस्तमिदं महिम्नि चेतः ॥ ५६

வில்லுடன் அம்பும் ஏந்தியது. பிறப்பால் சூரிய வம்சத்தை அழகுபடுத்தியது. மார்பகம் கனத்த பூமியின் புதல்வியிடம் அன்பு மிக்கது. அந்தப் பேராற்றலிடம் ஒரு மூலையில் என் மனம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. (56)

भयकम्पितसागरप्रशस्ते मयकन्यातनुमण्डनासहिष्णौ ।
नवगारुडरत्नभासुरे स्यादवगाढं हृदयं कचित्प्रभौ मे ॥ ५७

பயத்தால் நடுங்கிய கடலால் துதிக்கப் பெற்றவர். மயனின் பெண்ணை மண்டோதரி அணிகள் பூணுவதைப் பொறுக்காதவர். புதிய மரகத ரத்தின ஒளி கொண்டவர். அந்தப் பெருமானிடம் என் மனம் ஆழப் பதிந்துள்ளது. (57)

निजनामरसज्ञनीलकण्ठं भजनाय प्लवगावृतोपकण्ठम् ।
बलयन्त्रितसिन्धुमन्तरेकं कलयन्नन्यमुपासितुं त्वरे कम् ॥ ५८

அவரது பெயரின் சுவையைச் சிவனறிவார். வழிபடுவதற்கென வானரர்கள் அவரைச் சூழ்ந்துள்ளனர். வலிவால் கடலைக் கட்டுப்படுத்திய அவரைத் தவிர வேறொருவரை வழிபட விரைவெதற்கு ? (58)

विकटभ्रुकुटिर्विलोकतेऽरीन्विशिखान्मुञ्चति विग्रहान्विभिन्त्ते ।
अनुलिम्पति शोणितैर्धरित्रीं रणरङ्गे रघुपुंगवः समिन्द्धे ॥ ५९

ரகு குலத்தில் சிறந்த ராமன் போரரங்கில் புருவங்களை நெரித்து எதிரிகளை நோக்கி, பாணங்களைவிட்டு உடல்களைச் சிதைத்துப் பூமியை இரத்தத்தால் பூசி உக்ரமாக நிற்கிறார். (59)

स्मयमानमुखेन्दुरिन्द्रनीलद्युतिरम्भोजदलेक्षणो धनुष्मान् ।
तरलीकृतजानकीदृगन्तस्तरुणः कश्चन मे मनो धिनोति ॥ ६०

மறுபுறம் சந்திரன் போன்ற முகத்தில் புன் சிரிப்புடன், நீல ரத்தின ஒளி கொண்டவராக, வில்லேந்தி, ஜானகியின் கடைக்கண்களை நீர் நிரம்பியவையாக்கிய ஒரு வாலிபர் என் மனத்தைத் தூண்டுகிறார். (60)

दलदुत्पलदामकोमलाङ्गी दशकण्ठायुरपायकालभङ्गी।
मनसे मम रोचतेऽभिरूपा करुणा काचिदुपात्तबाणचापा ॥ ६१

*மலர்ந்த அல்லியாலான மாலை போல் மென்மை மிக்க உடலமைப்புள்ளதும் ராவணனின் உயிரைப் பிரிக்கிற யமனின் செயல் முறையுள்ளதும் வில்லும் அம்பும் ஏந்திய அழகிய வடிவேற்றதுமான கருணை என் உள்ளத்திற்குப் பிடித்துள்ளது. (61)*

मौलौ निधेहि मकुटं त्यज बर्हिबर्हं
बाणं गृहाण धनुषा सह मुञ्च वेणुम्।
शाखामृगैर्विहर संत्यज गोपबालान्
रामो यदूद्वह भव त्वमथाश्रये त्वाम् ॥ ६२

*யது குலத்தில் சிறந்த கண்ணா ! மயில்தோகையை அகற்றிக் கிரீடத்தைத் தலையில் சூடுவாய் ! புல்லாங்குழலை விட்டு வில்லுடன் அம்பை ஏந்துவாய் ! கோபச் சிறுவர்களைக் கைவிட்டுக் குரங்குகளுடன் விளையாடுவாய் ! ராமனாவாய் ! அதன் பின் உன்னை அண்டி நிற்பேன். (62)*

कृष्णैकसूतरथकेतनभूतदूतः
सोऽनूरुसारथिरथात्मजमित्रभूतः।
वाणीशयन्तृकरथस्य शरासभङ्क्ता
कश्चिन्मनो हरति कार्मुकभूषणो मे ॥ ६३

*கிருஷ்ணனையே ஸாரதியாகக் கொண்ட தேரின் கொடியாக விளங்குகிறவரை, (ஹனுமானைக்) தன் தூதனாக கொண்டவர். அருணனைச் சாரதியாகக் கொண்ட ஸூரியன் மகனான ஸுக்ரீவனின் நண்பரானவர். பிரும்மாவைத் தேரோட்டியாகக் கொண்ட திரிபுராரியான சிவனின் வில்லை ஒடித்தவர், வில்லை அணியாகக் கொண்ட ஒருவர் என் உள்ளத்தைக் கவர்கிறார். (63)*

दृप्यद्दशाननकलत्रकठोरगर्भ-

विभ्रंशविभ्रमपरिस्फुटसाहसेन ।

घण्टा विलुण्ठयतु नः कलुषं रवेण

कोदण्डकोटिघटिता कुलदेवतायाः ॥ ६४

*திமிர் பிடித்த ராவணின் மனைவியின் கரு கலையும்படி என் குலதைவத்தின் வில்லின் நுனியில் கட்டிய மணி ஒலிக்கிறது. அந்த ஒலி எம் பாபத்தை அகற்றட்டும். (64)*

देवद्विषां विजयि देहभृतां शरण्यं

कारुण्यभूषितकटाक्षमुदग्रचापम् ।

टङ्कत्रुटन्मरतकोपलरत्ननीलं

धाम स्मरामि धरणीतनयासहायम् ॥ ६५

*தேவர்களின் எதிரியை அழிப்பது, மனிதருக்கு சரணமடைய ஏற்ற இடம். பரிவு மிக்க கடைக்கண் பார்வை கொண்டது. வலிவு மிக்க வில் ஏந்தியது. உளியால் பிளக்கப் பெற்ற மரகதக் கல் வண்ணம் கொண்டது. பூமியின் புதல்வியைத் துணையாகக் கொண்டது. அந்தப் பேரொளியை உள்ளத்தில் கொள்கிறேன். (65)*

आस्ते कृतान्त इति पापिषु दण्डकारी-

त्याकर्णितेऽपि मुहुराप्तपरम्परायाः ।

रक्षिष्यतीति रघुनन्दनमेव साक्षा-

द्विश्वस्य केवलमहं न विचिन्तयामि ॥ ६६

*யமன் என்றொருவன் உள்ளான். பாபிகளைத் தண்டிப்பவன் என ஆப்தர்கள் பலர் கூறக் கேட்டிருந்தும் ரகு நந்தனன் காப்பாற்றுவான் என நம்பி வேறு சிந்தனையின்றி இருக்கிறேன். (66)*

तिष्ठन्तु दारुणतरा निरयाः सहस्रं

तिष्ठन्तु घोरचरिता यमकिंकरा वा ।

पापात्मनोऽपि नियतं परिपालनाय
कोदण्डपाणिरिति कोऽपि ममास्ति नाथः ॥ ६७

மிகக் கொடிய நரகங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கட்டும். கொடிய நடைமுறை கொண்ட யம கிங்கரர்களும் நிற்கட்டும். பாபமே வடிவான என்னைக் கட்டாயம் காப்பாற்ற கோதண்டபாணி என்ற என் நாதன் ஒருவன் உள்ளான். (67)

लीलोपात्तबलिप्रसूनमुकुलाः स्निग्धेन सौमित्रिणा
वैदेहीकरपल्लवात्तकलशीधाराम्बुसंवर्धिताः ।
दृष्टा वत्सलया दृशा रघुपतेः पुत्रा इव प्रत्यहं
प्रायः पञ्चवटीकुटीरतरवः प्रीणन्ति मे मानसम् ॥ ६८

பஞ்சவடிக் குடிலருகே வளர்ந்த மரங்கள் அவை. அன்புமிக்க லக்ஷ்மணன் அவற்றின் பூக்களையும் மொட்டுக்களையும் மென்மையுடன் எடுப்பான். வைதேகியால் துளிர் போன்ற கைகளால் குடத்து நீர் மொண்டு ஊற்றி வளர்க்கப் பெற்றவை. புத்திரர்களாகப் பரிவு மிக்கக் கண்களால் ராமனால் பார்க்கப் பெற்றவை. அவை என் மனத்தை நிறைவடையச் செய்கின்றன. (68)

सौवर्णीमवसक्थिकामधिवसन्पार्श्वस्थपृथ्वीसुता-
हस्ताम्भोजयुगक्रमप्रसृतया जातिस्रजा दीर्घया ।
पाणिभ्यामधिवेष्टयन्कचभरं मौल्येकपार्श्वोचितं
देवो मे हृदि भाति दत्तनयनो दृश्ये तदेकस्तने ॥ ६९

ராமன் தங்கத்தாலான சிறு ஆஸனத்தின் மீதமர்ந்து. (தங்க ஜரிகையாலான ஆடையை தொடை வரை வரிந்து கட்டிக் கொண்டு) அருகிலமர்ந்துள்ள ஸீதையின் தாமரைக் கைகளால் தொடுக்கப்பட்ட நீண்ட ஜாதிப் பூ மாலையால் தலையின் ஒரு பக்கத்திலுள்ள கேசக் கற்றையைக் கட்டிக் கொண்டே பார்வைக்குக் கிட்டிய அவளது ஒரு மார்பகத்தில் கண் வைத்து ரஸிக்கிறார். அந்த தேவன் என் உள்ளத்தில் துலங்குகிறார். (69)

चापसंहितशरं चरमाङ्गे
बद्धतूणमुपनीवि कृपाणम्।
वञ्चनामृगवधाय वनान्ते
संचरन्तमिनमन्तरुपासे ।। ७०

*வில்லில் பூட்டிய அம்பு, முதுகில் பிணைக்கப்பட்ட அம்புறுத்தூணி, இடுப்பில் கத்தி, இந்த கோலத்தில் வஞ்சனை செய்கிற மானைக் கொல்ல காட்டின் எல்லையில் சுற்றி வருகிற அந்தக் கதிரவனை உள்ளத்தில் வழிபடுகிறேன். (70)*

कौणपाधिपकदर्थितामरीकाङ्क्षितप्रणयिबाणकार्मुकम्।
कंचन श्रुतिकरण्डमौक्तिकं कालिमानमवलोकयामहे ।। ७१

*அரக்கர் தலைவனான ராவணனால் அவமதிக்கப் பெற்ற தேவலோகத்துப் பெண்கள் விரும்பியதை அம்பாலும் வில்லாலும் கொண்டு சேர்த்ததும், வேதக் கூட்டத்தின் தலை முத்துமான ஒரு கரு நிறத்தைக் காண்கிறோம். (71)*

जानकीस्तनतटान्तपालिकाजातुकुङ्कुमविभागपिञ्जरः।
दृश्यते हृदि दयाधुरंधरः कोऽपि कोसलकुलीनकुञ्जरः ।। ७२

*ஜானகியின் மார்பகத்தை மூடுகிற ரவிக்கையில் ஒட்டிய குங்குமப் பூச்சாந்தால் சிவந்த மார்புள்ளதும் பரிவு காட்டுவதில் முன் நிற்பதுமான கோஸல குலத்து யானை ஒன்று உள்ளத்தினுள் நிற்கிறது. (72)*

मामके हृदि महीकुमारिकाकामकेलिकुतुकी नृपात्मजः।
आतनोति पदमस्त्रबन्धुरो नूतनोदयपयोदसुन्दरः ।। ७३

*அஸ்திரங்களை ஏந்திய வரும் புதிதாகத் தோன்றுகிற மேகத்தைப் போல் அழகரும், பூமியின் புதல்வியுடன் காமக் கேளிக்கை புரிய ஆர்வமுள்ளவருமான அரச குமாரன் என் உள்ளத்தில் இடம்பிடித்துள்ளார். (73)*

चन्द्रशेखरशरासनच्छिदाचातुरीचणकरारविन्दया।
स्वीकृतं मम सुरानुकूलया लीलया हृदयमभ्रनीलया।। ७४

*சிவனின் வில்லை ஒடிப்பதில் திறமிக்க தாமரை போன்ற கைகளுள்ளதும், தேவர்களுக்கு இதமானதும் மேகம் போன்ற நீலமானதுமான ஒரு லீலை வடிவத்தால் என் உள்ளம் ஏற்கப்பட்டது. (74)*

कौणपालिकदलीविषाणिना बाणचापपरिकर्मपाणिना।
चण्डिकारमणचापखण्डने पण्डितेन मम मण्डितं मनः।। ७५

*அரக்கர் கூட்டமாகிய வாழைகளைச் சிதைப்பதும் அம்பும் வில்லும் அழகூட்டுகிற கைகளுள்ளதும் சிவனின் வில்லை ஒடிப்பதில் நிபுணமானதொன்றால் என் மனம் அழகுற விளங்குகிறது. (75)*

कृत्तकीर्णकुटिलक्षपाचरे कृत्रिमेतरगिरामगोचरे।
धावते हि कुलदेवतेति मे चित्तमेवमिदमुत्तमे नृणाम्।। ७६

*மனிதர்களில் சிறந்த அவரிடம் குல தெய்வம் என என் உள்ளம் ஓடுகிறது. அவர் கோர அரக்கர்களை வெட்டிச் சிதைத்தவர். செயற்கையாக இராத வேத மொழிகளுக்கும் அகப்படாதவர். (76)*

कालिकानिभरुचिः कनीयसा कान्तया च सह कल्पितासिका।
कार्मुकाशुगलसत्कराम्बुजा काचिदस्ति करुणा गतिर्मम।। ७७

*கருணையே வடிவமான அது ஒன்றே எனக்குச் சென்றடையுமிடம். மேகக் கூட்டம் போன்ற நிறமுள்ளது. தம்பியுடனும் மனைவியுடனும் சேர்ந்தமர்ந்துள்ளது. வில்லும் அம்பும் பூண்ட கைகளுள்ளது. (77)*

मामके मनसि धान्यमालिनीभूषणासहभुजोष्मशालिनी।
सा चकास्ति शरचापधारिणी भानुमालिकुलभाग्यधोरणी।। ७८

*தான்ய மாலினீ என்ற ராவணனின் மனைவி அணிகள் அணிவதைப் பொறுக்காத தோள்வலிவு கொண்டது. வில்லும் அம்பும் ஏந்தியது. ஸூரியனின் குலத்தின் பாக்கிய வரிசை அது. என் மனத்துள் துலங்குகிறது. (78)*

याति तेजसि मनः सनातने दूतभूषितकिरीटिकेतने।
यामिनीचरचमूभयंकरे जानकीनयनकेलिकिंकरे ।। ७९

*அது எப்போதுமுள்ள பேரொளி. அர்ஜுனனின் கொடியை இதன் தூதர் அலங்கரிக்கிறார். அரக்கரின் படைக்குப் பயம் வழங்குவது. ஜானகியின் கண்ணுலான விளையாட்டின் அடிமை. அதனிடம் என் மனம் பதிகிறது. (79)*

चङ्क्रमानुगतगन्धसिन्धुरा सिन्धुराजकृतसेतुबन्धना।
वासना धृतशरासनाशुगा मेचका मनसि मे चकास्ति सा ।।

*வில்லும் அம்பும் ஏந்திய அழகான அந்த உள்ளத்தின் உருவகம் தன் பீடுநடையில் யானையைத் தன்னைத் தொடரச் செய்வது. கடலரசனின் மீது ஸேதுவைக் கட்டியது. அது என் மனத்தில் துலங்குகிறது. (80)*

वानरक्षपितराक्षसव्रजं दीनरक्षणविचक्षणं प्रभुम्।
श्रीमदग्र्यशरचापमेति मे जामदग्न्यमदनिग्रहं मनः ।। ८१

*துயருற்றவர்களைக் காப்பதில் நிபுணரான அந்தப் பெருமானை என் மனம் சரணடைகிறது. வானரர்களால் அரக்கர் கூட்டத்தை அழித்தவர். சிறந்த வில்லும் அம்பும் கொண்டவர். ஜமதக்னியின் புதல்வரான பரசுராமரின் செருக்கை அடக்கியவர். (81)*

कण्ठेकालशरासभञ्जनचणं कल्याणनानागुणं
कारुण्याभरणं खरान्तकरणं कंजाभिरामेक्षणम्।
पाणिद्वन्द्वगृहीतबाणधनुषं पाथोदनीलत्विषं
पौलस्त्यासुमुषं भजामि पुरुषं पार्श्वे वधूटीजुषम् ।। ८२

கழுத்தில் கருமை கொண்ட சிவனின் வில்லை ஒடித்த நிபுணர், பல மங்கள குணங்கள் கொண்டவர். கருணையையே அணியாகப் பூண்டவர். கரனை மாய்த்தவர். தாமரை போன்ற அழகிய கண்கள் உள்ளவர். இரு கைகளிலும் வில்லும் அம்பும் ஏந்தியவர். மேகம் போன்ற நீலமேனி வண்ணம் கொண்டவர். புலஸ்தியர் புதல்வர்களான ராவணன் முதலானவரின் உயிரைப் பறித்தவர். அருகில் மனைவியை அமர்த்திக் கொண்டவர். அந்தப் பெருமானை வழிபடுகிறேன்.

कुवलयदलनीलश्रीभृतां भूकुमारी-
कुचकलशविराजत्कुङ्कुमैरङ्कितानाम् ।
दशमुखभुजतेजोदर्पतूलानलानां
दशरथसुकृतानां दासभावं भजामः ॥ ८३

தசரதர் செய்த புண்ணியங்கள்அந்தப் பெருமானின் உருவைக் கொண்டன. அல்லியின் இதழின் நீல நிறத்தைக் கொண்டவை. பூமியின் புதல்வியின் மார்பகத்திலிட்ட குங்குமப்பூச் சாந்தின் பதிவடையாளம் கொண்டவை. ராவணனின் தோள் வலிவாகிய பஞ்சுப் பொதிக்கு நெருப்பானவை. அவற்றின் தாஸனுகிற நிலையை அடைந்துள்ளோம். (83)

करधृतशरचापः कान्तिमत्पङ्कजाक्षो
निहितशरधिरंसे नीरदस्निग्धनीलः ।
वनमृगपरिवारो वन्दनीयो मुनीनां
मदयति हृदयं मे मैथिलीप्राणनाथः ॥ ८४

மைதிலியின் உயிரின் நாதன், வில்லையும் அம்பையும் கைகளில் ஏந்தியவர். ஒளி மிக்க தாமரை போன்றழகிய கண்களுள்ளவர். தோளில் அம்புறுத்தூணி பூண்டவர், மேகம் போன்று பசுமை நிறைந்த நீல வண்ணத்தினர். காட்டு விலங்குகளையே பரிவாரமாகக் கொண்டவர். முனிவர்களால் வணங்கத்தக்கவர். அவர் என் உள்ளத்தை ஆனந்த நிறைவால் மதர்க்கச் செய்கிறார். (84)

मघवदुपलनीले मण्डलीकृत्य चापं
मुहुरभिदशकण्ठं मुञ्चतीषुप्रपञ्चम्।
रणधरणिरजोभिर्धूसरे वासरेश-
प्रभवकुलभवानामुत्तमे चित्तमेति ॥ ८५

*இந்திர நீலக் கல்லின் வண்ணம் கொண்டவர், வில்லை வளைத்து ராவணன் மீது அம்புத்திரளை அடிக்கடி செலுத்துபவர். போர்க்களத்துத் தூசுகளின் மாசு படிந்தவர். ஸூரிய குலத்தில் தோன்றியவர்களில் மிக மிகச் சிறந்தவர். அவரிடம் என் உள்ளம் பதிகிறது. (85)*

शुभगुणकलकण्ठस्तोममाकन्दशाखा
नियमिनिवहचेतोनीलकण्ठाभ्ररेखा।
दशवदनवधूटीचक्रवाकीत्रियामा
जनयति कुतुकं मे जानकीप्रेमभूमा ॥ ८६

*மங்கள குணங்களாகிய குயில்கள் அமர்கிற ஒட்டுமாமரத்துக் கிளையானதும், யோகத்தால் உள்ளத்தைக் கட்டுக்குளாக்கியவர்களின் மனமாகிற மயில்கள் கூத்தாடத் தோன்றுகிற மேக வரிசை போன்றதும், ராவணனின் மனைவிகள் கூட்டமாகிய சக்ரவாகப் பறவைகளுக்கு (எதிரான) இரவானதுமான ஜானகியின் அன்பின் முழு நிலை என் உள்ளத்தில் ஆர்வத்தை விளைவிக்கிறது. (86)*

कल्याणमावहतु दाशरथेः कटाक्षः
शाखामृगे शतमखादपि सानुकम्पः।
आभाति भूमितनयाधरबिम्बलोभ-
संपातसंक्रमितलाक्ष इवारुणो यः ॥ ८७

*தசரதரின் புதல்வரின் கடைக் கண் பார்வை இந்திரனை விட வானரரிடம் அதிகம் பரிவு காட்டும். பூமியின் புதல்வியின் கோவைப் பழம் போன்று சிவந்த உதடுகளுடன் போட்டியால் செம்பஞ்சுக்குழம்பு பூசியது போன்று*

சிவந்துள்ளது. (கொம்பரக்கு(லாக்ஷா) முதலியவற்றாலான பூச்சு செம்பஞ்சுக் குழம்பு. பெண்களின் கைகளிலும் கால்களிலும் செம்மை படரப் பயன்படுத்தக் கூடியது.) அது மங்களம் தரட்டும். (87)

तारुण्यदर्पतरलीकृतगोपकन्या-
दृष्टिप्रियं तव यदस्ति वपुस्तदास्ताम्।
काकुत्स्थवीर कमलानयनाभिरामं
गात्रं त्विदं तव करोति मुदं मदन्तः ॥ ८८

ககுஸ்த வம்சத்தில் தோன்றிய வீரனே! யௌவனத்தின் மதர்ப்பால் இளகிய கோபகன்னிகைகளின் பார்வையில் மிகவும் பிரியமான (கிருஷ்ணரின்) அழகிய உடலும் லக்ஷ்மியின் கண்களைக் கவர்கிற உடலும் இருக்கட்டும். இந்த உமது (ராமனின்) உடலே என் உள்ளத்தில் மகிழ்ச்சியூட்டுகிறது. (88)

स कश्चन गिरीन्द्रजासखशरासनव्रश्चनो
मनो हरति मामकं मरतकोपलश्यामलः।
धनुःशरलसत्करो धरणिकन्यकाप्रेमभूः
धनंजयरथध्वजाभरणभूतदूतः प्रभुः ॥ ८९

பார்வதியின் மணாளனின் வில்லையொடித்த ஒருவன் மரகதக் கல் போன்று நீலநிறமேனியன். வில்லும் அம்பும் அழகுறத் தரித்தவன். பூமியின் புதல்வியின் அன்புக்கினியவன், அர்ஜுனனின் தேருக்குக் கொடியாக அமைந்த அனுமானைத் தூதராகக் கொண்டவன். அந்தப் பெருமான் என் உள்ளத்தைக் கவர்கிறான். (89)

धन्या वयं धरणिकन्यकया सनाथे
नाथे स्थिते जगति नः परिपालनाय।
यः शीलितो यतिभिरात्मनि निष्कलङ्के
लङ्केश्वरं लवितुमात्तमनुष्यरूपः ॥ ९०

உலகில் நம்மைக் காப்பதற்கெனவே, பூமியின் புதல்வியைத்துணைவியாகக் கொண்ட ராமன் இருக்கும் போது நாம் தன்யர்கள், பாக்யம் செய்தவர்கள். அந்த ராமன் துறவு பூண்ட முனிவர்களால் களங்கமற்ற உள்ளத்தில் தியானத்தால் பழக்கப்படுபவன். லங்கையின் அரசனைத் துண்டாக்க மனித வடிவமேற்றவன். (90)

दीनानुकम्पि दिवसेश्वरवंशरत्नं
कर्तृव्यपेतवचसा कथमप्युपेयम्।
तापिञ्छनीलरुचि तामरसायताक्षं
चापोज्ज्वलं किमपि वस्तु ममाविरस्तु ॥ ९१

எளியவரிடம் பரிவுமிக்கது, சூரிய வம்சத்தின் ரத்தினம், பிறரால் எழுதப் பெருத வேத வாக்கால் சிரமப்பட்டு உணரத்தக்கது. பச்சிலை போன்ற பசுமை நிறம் கொண்டது. தாமரை இதழ் போன்று நீண்ட கண்கள் உள்ளது. வில்லால் ஒளிர்வது. அந்த ஏதோ ஒன்று என் முன் தோன்றட்டும். (91)

आबद्धतूणमंसे करकमलद्वन्द्वधृतधनुर्बाणम्।
पश्यामि हृदयकमले रामं दूर्वादलश्यामम् ॥ ९२

தோளில் அம்புறுத்தூணி பூண்டு, தாமரை போன்ற இருகைகளில் வில்லும் அம்பும் ஏந்தி அருகம்புல் வண்ணனுகத் தோன்றுகிற ராமனை இதயத் தாமரையில் காண்கிறேன். (92)

मज्जति मनो मदीयं कचिदपि दलितेन्द्रनीलमणिनीले।
महिमनि महीकुमारीकुचकुट्मलकुङ्कुमाङ्कितोरस्के ॥ ९३

உளியால் பிளக்கப் பெற்ற இந்திர நீல ரத்னம் போன்று வண்ணமுள்ளதும், பூமியின் புதல்வியின் மார்பகத்தின் குங்குமப்பூ பூச்சு ஒட்டிய மார்புள்ளதுமான ஒரு மகிமையில் என் மனம் ஆழ்ந்துள்ளது. (93)

जगदघहरप्रशंसे जनकसुतावलयपदविलसदंसे।
निगमान्तनलिनहंसे रमते मम हृदयमिनकुलवतंसे ॥ ९४

*சூர்ய வம்சத்தின் தலைவர், உலகின் பாபத்தை நீக்குவதில் புகழுடையவர். உபநிஷத்தாகிற தாமரைக் குளத்தில் நீந்துகிற ஹம்ஸ பக்ஷி, அவரிடம் எனது உள்ளம் அன்புடன் ஈடுபடுகிறது. (94)*

विकचेन्दीवरनीलं विदेहतनयाकुचस्तबकलोलम्।
निगमान्तसुधानिलयं माधुर्यं पिबति मामकं हृदयम्॥ ९५

*மலர்ந்த அல்லிப் பூவின் நீலநிறம் கொண்டது, வைதேஹியின் மார்பகத்தில் மனமிழந்தது. உபநிஷத்தாகிற அமுதத்தினுள் மறைந்திருப்பது. அத்தகைய இனிமையை என் உள்ளம் பருகுகிறது. (95)*

सरसघनसारमेदुर चन्दननिष्यन्दशीतलालोकम्।
कमपि दलितमयकन्यामङ्गलमालिङ्गति मनो मे ॥ ९६

*சுவை மிக்கப் பச்சை கற்பூரம் நிறைந்த சந்தனக் குழம்பால் குளிர்ச்சியூட்டுவதும், மண்டோதரியை பாக்கியமிழக்கச் செய்ததுமானதொன்றை என் மனம் அணைக்கிறது. (96)*

गिरिशधनुस्तरुकरिणं दलितभृगुप्रवरगर्वसर्वस्वम्।
कलयामि कमपि वीरं कृत्तकबन्धं कृताम्बुनिधिबन्धम्॥ ९७

*சிவனது வில்லாகிற மரத்தை யானையாக ஒடித்தவர். பிருகுகுலத் தோன்றலான பரசுராமரின் கர்வமனைத்தையும் சிதைத்தவர், கபந்தனைக் கழுத்தறுத்தவர், கடலுக்கு அணைகட்டியவர், அந்த வீரனை மனத்தில் உருவகப்படுத்துகிறேன். (97)*

कुशिकसुतकुतुकदायी कुवलयदलनीलकोमलशरीरः।
कोसलकुलतिलको मे कोऽपि गतिः कोविदाररथकेतुः ॥

விச்வாமித்திரருக்கு ஆர்வமளித்தவர், ஆம்பல் இதழ் போன்ற நீல நிறத்து மென்மை மிக்க உடலுள்ளவர். கோஸல குலத்தின் திலகம். செம்மந்தாரைக் கொடியோன், அவரே எனக்குக் கதி. *(98)*

**कुवलयदामसरूपं कुण्ठितदशकण्ठनिरुपमाटोपम्।**
**करतलगृहीतचापं कलये तद्धाम पामरदुरापम्॥ ९९**

*அல்லி மாலை போன்ற வடிவுடையது, ராவணனின் ஈடிணையற்ற படாடோபத்தைக் குன்றச் செய்தது, கைத்தலத்தால் வில்லை ஏந்தியது, அறிவற்றவனுக்கு எளிதில் கிட்டாதது, அந்தப் பரம் பொருளை உள்ளத்தில் உருவகப்படுத்துகிறேன். (99)*

**दलितेन्दीवररूपे दर्शितदशकण्ठयौवतविलापे।**
**धृतशरचापकलापे दीव्यति हृदयं दिलीपकुलदीपे॥ १००**

*திலீபரின் குல தீபமது, அல்லியின் அழகைப் பழிப்பது, ராவணனின் மனைவியரின் புலம்பலை வெளிப்படுத்தியது. வில்லும் அம்பும் ஏந்தியது. அதனிடம் என் உள்ளம் விளையாடுகிறது. (100)*

**निगमान्तवनकुरङ्गे निर्मलमुन्यन्तरङ्गनटरङ्गे।**
**रुचितुलितरवितुरङ्गे क्वचन रमे रघुकुलार्णवतरङ्गे॥ १०१**

*ரகு குலமாகிய கடலின் அலை அது. உபநிஷதக் காட்டில் மானைச் சுற்றி வருவது, ஒளியால் ஸூரியனின் குதிரைகளை எடைபோடுவது, தூய முனிவரின் இதயமாகிய நடன அரங்கில் ஆடுவது. அதனிடம் மனத்தை விளையாட விடுவேன். (101)*

**दशकंधरमदसिन्धुरदलनधुरंधरनिशातशरनखरम्।**
**पदुमवने निगमवनेचरमवनेः कन्यया हरिं कलये॥ १०२**

*ராவணன் எனும் மதயானையைப் பிளப்பதில் ஈடுபட்டுள்ள கூர் மிக்க பாணம் எனும் நகமுடைய சிங்கமது.*

*காப்பதில் திறமை மிக்கது. உபநிஷதக் காட்டில் ஸீதையுடன் சுற்றி வருவது. அதனை உள்ளத்தில் காண்கிறேன். (102)*

कपिकुलकलितपरिधये करुणानिधये शरास्तवारिधये।
वितनोमि दाशरथये विनतिं सीताविहारसारथये॥ १०३

*வானரர் கூட்டம் எல்லையைக் காக்க, அம்பால் கடலை வெகு தூரம் எட்டிச் செல்லச் செய்தவர், கருணையின் வைப்பிடம், தசரதரின் நன் மகன், ஸீதையின் விளையாட்டிற்குத் தேரோட்டியாக வழி நடத்துபவர், அவரை வணங்குகிறேன். (103)*

वन्देऽहं दीनदयावासं देहकृतजलदसंदेहम्।
तं जनकजाक्षिरञ्जनतारुण्यमपाङ्गसङ्गतारुण्यम्॥ १०४

*எளியவரது விஷயத்தில் தயையின் இருப்பிடம், உடலழகால் மேகமோ என்று ஐயப்படச் செய்பவர், ஜானகியின் கண்களை ஈர்த்து மகிழ்விக்கிற யௌவனமுள்ளவர், சிவந்த கடைக் கண்கள் உள்ளவர், அவரை நான் வணங்குகிறேன். (104)*

रक्षोनीकं दलयन्कन्दलयन्योऽभवन्मुदमृषीणाम्।
इषुणा सहसा लवनं सालवनं नीतवान्स मे शरणम्॥ १०५

*அரக்கர் படையைச் சிதறச் செய்து, முனிவர்களின் மகிழ்ச்சியைப் பொங்கச் செய்தவர், அம்பால் ஸால மரக்காட்டைத் திடீரென வெட்டிச் சாய்த்தவர், அவர் எனக்குப் புகலிடம். (105)*

शशधरखण्डमण्डनशरासनिरासकला
कुशलकराम्बुजेऽम्बुदकदम्बविडम्बचणे।
निशिचरसिंहसंहननलाविशिखं विशिखं
दधति दधामि धामनि मनो मुनिमोदपदे॥ १०६

*அவர் முனிவர்களின் ஆனந்தத்திற்கு இருப்பிடம், பிறை சூடியான சிவனின் வில்லை ஒடிக்கிற கலையில் தேர்ந்த தாமரை போன்ற கைகளுள்ளவர். மேகக் கூட்டம் போன்று தோன்றுவதில் நிபுணர், அரக்கராகிய சிங்கங்களைக் கொல்வதில் தீ நாக்காகப் படர்கிற அம்பை ஏந்தியவர். அந்தப் பெருமானிடம் மனத்தை வைத்துள்ளேன். (106)*

धरणिसुतापयोधरधराधरकूटतटी-
घुसृणरजोभिशोभितभुजान्तरबन्धुरया।
कवचितमेकया करणमन्तरिदं तरुणी-
कृतशिलया दिनाधिपकुलोदयया दयया॥ १०७

*ஸூர்யனின் குலத்தில் உதித்த தயை கல்லை யுவதியாக்கியது. பூமியின் புதல்வியின் மார்பகத்தில் பூசிய குங்குமப் பூச்சாந்து ஒட்டியதால் அழகான மார்பை உடையது, அந்தத் தயையால் இந்த உள்ளம் கவசம் பூண்டது போல் காக்கப் பெறுகிறது. (107)*

दशरथसूनवे नवसुधायशसे वसुधा-
दुहितृविहारगौरवपुषे करुणावपुषे।
प्रणतिमुदारनीरनिधिसाध्वसदाय सदा
कुवलयदामकोमलतनूरुचये रचये॥ १०८

*அவர் தசரதரின் புதல்வர், புதிய அமுதம் போன்று தூய கீர்த்தி உள்ளவர், பூமியின் புதல்வியுடன் கேளிக்கை செய்து பெருமைப்பட்டவர். கருணையே வடிவானவர். பெருங் கடலுக்குப் பரபரப்பும் பயமும் அளித்தவர், அல்லி மாலை போன்று மென்மை மிக்க மேனி வண்ணம் கொண்டவர். அவருக்கு நமஸ்காரம் செய்கிறேன். (108)*

दशमुखभङ्गसङ्गमितसर्वसुपर्वचतु-
र्वदनसविस्तरस्तवनिवर्तितमर्त्यमतौ।
हृदयमरातिभीतिकरणेषुधनुःस्मरणे
कलिहरनाम्नि धाम्नि करुणानिलये कलये॥ १०९

*கலிதோஷத்தை நீக்குகிற கருணையின் இருப்பிடமான அந்த பெருஞ் சோதியிடம் உள்ளத்தை வைக்கிறேன். அது ராவணனின் வதத்தைத் தொடர்ந்து தேவரனைவரும் பிரும்மாவும் விரிவாகத் துதித்ததைக் கேட்டதால் தான் மனிதனே என்ற எண்ணத்தைக் கை விட்டது. எதிரிக்குத் தன் அம்பையும் வில்லையும் பற்றி நினைத்தாலே பயம் தருவது. அதனிடம் உள்ளத்தை வைக்கிறேன். (109)*

भुजगकलापचापपरिभञ्जनसंजनित-

स्तुति भुजविक्रमक्रमगृहीतमहीतनया ।

मम हृदि वासना स्मरति सङ्गररङ्गरण-

द्दशमुखसर्पदर्पभरशिक्षणपक्षिपतिः ॥ ११०

*பாம்பணி கொண்ட சிவனின் வில்லை ஒடித்ததால் எழுந்த பாராட்டைப் பெற்ற தோள் வலிமையால் பூமியின் புதல்வியைக் கரதலம் பற்றியதும், போரரங்கில் ராவணன் என்ற நாகத்தின் கொழுப்பை அடக்கிய கருடனைப் பற்றியதுமான நினைவு ஆழ்மனத்தில் உள்ளது. (110)*

अरविन्दजदलसुन्दरनयनं दरहसितं

मणिकुण्डलकृतमण्डनमुखमण्डलशशिनम् ।

रघुपुंगवमिदमङ्गजमदभङ्गदवपुषं

मम चिन्ततु हृदयं ततमपि कृन्ततु दुरितम् ॥ १११

*தாமரையிதழ் போன்று அழகிய கண்களுள்ளவர், மென்மையுடன் சிரிப்பவர், ரத்தின குண்டலத்தால் அழகுற்ற சந்திரன் போன்ற முகவட்டம் கொண்டவர், மன்மதனின் செருக்கையடக்குகிற வடிவழகு கொண்டவர். இந்த ரகுகுலத்து நாயகரை என் உள்ளம் நினைக்கட்டும். பரவிய பாவத்தையும் துண்டிக்கட்டும். (111)*

निगमावलिसुगमाकृति गतये रिपुहतये

विनतामरजनतावृतजनुषे धृतधनुषे ।

अनयाशरजनयाम्यनगरवेदनगुरवे

तनुमो नतिमनुमोदितयतये रघुपतये ॥ ११२

*ரகுபதிக்கு நமஸ்காரம் செய்வோம். வேதத் தொகுப்பால் எளிதில் புலப்படுகிற உருவமும் செயல்முறையும் கொண்டவர். எதிரியான ராவணனை அழிக்க வேண்டி நின்ற தேவர்களின் கூட்டத்தால் பிறக்க வேண்டப்பட்டவர். வில்லேந்தியவர் - நேர்மையற்ற அரக்கர் கூட்டத்திற்கு யமனுலக வழி காட்டுவதில் குருவானவர் - தனது வணக்கத்தால் துறவியரை மகிழ்வித்தார். (112)*

दशकंधरभृशकम्पितसुमनोभयशमनो
नदनायककदनाशुगहृदयो मम हृदये।
सुजनोचितभजनो घनरुचिराकृतिरचिरा-
दुपयाति स कृपयाऽवनिसुतया सह हितया ।। ११३

*ராவணனிடம் மிகவும் பயந்த தேவர்களின் பயத்தை அடக்கியவர், நதிகளின் நாயகனை ஸமுத்திர ராஜனைச் சிதைக்கிற பாணத்தில் மனம் செலுத்தியவர், நல்லோருக்கேற்ற காப்பிடம், மேகம் போன்று அழகிய வடிவுள்ளவர், அவர் பரிவுடன் இதமாகப் பின் தொடர்கிற பூமியின் மகளுடன் விரைவில் நம் அருகில் வருகிறார். (113)*

क्षणदाचरगणदारणचणदारुणविशिखं
करुणारसवरुणालयमरुणान्वयतिलकम्।
प्रियया घनदयया सविनयया सह मिलितं
स्मर मानस चरमायुषि परमापदि सुखितुम् ।। ११४

*மனமே ! ஆயுளின் எல்லையில், பெரும் நெருக்கடியில் இன்புற, கனத்த தயையுடன் வினயத்துடன் துணைவந்த அன்புக்குடையவளுடன் சேர்ந்து வருகிற ஸூர்ய வம்சத்திலகனை நினைப்பாய். அவர் அரக்கர் கூட்டத்தை அழிக்க வல்ல கொடும் அம்புள்ளவர். கருணைக் கடல். (114)*

भज मानस परिपालितभजमानसमुदयं
कपिलक्षण विरहासहकपिलक्षणनिकटम्।

रघुनन्दनमघभञ्जनरघुनन्दनवनिके
कलितापदममरद्विषि कलितापदकथनम् ।। ११५

*குரங்கின் இயல்பு கொண்ட மனமே ! ரகுநந்தனனை வழிபடுவாய். அவர் தன்னை வழிபடுபவரின் வளர்ச்சியைக் காப்பாற்றுபவர். தனது பிரிவைப் பொறுக்காத வானரர்களின் பார்வையில் அருகில் இருப்பவர். பாபத்தைப் போக்குகிற ரகு குல நந்தனனுன லக்ஷ்மணனுக்கு ஆபத்தை விளைவித்த அரக்கனுன ராவணனுக்கு ஆபத்தை விளை வித்தவர். தன் நாம கீர்த்தனத்தால் கலியின் தாபத்தை அகற்றுபவர். (115)*

गुरुत्वराकृतानतीन्मरुत्वदादिदिक्पती-
नतीत्य तीव्रमञ्जनासुतादिमाञ्जनानपि ।
क्रमेण मेऽयते मनस्तमेव मेघमेचकं
करस्थचापसायकं ककुत्स्थवंशनायकम् ।। ११६

*மிக விரைவுடன் வந்து வணங்குகிற இந்திரன் முதலிய திக் பாலர்களையும் அனுமான் முதலிய மக்களையும் தாண்டி என் மனம் கையில் வில்லேந்தியவரும் ககுத்தவம்ச நாயகனும் மேக வண்ணனுமான அந்த ராமனையே தீவிரமாகச் சென்றடைகிறது. (116)*

करारविन्दयोः शरं शरासनं च बिभ्रती
बिसप्रसूनसप्रभा भृशं विशालयोर्दृशोः ।
तनूकृताभ्रविभ्रमा मनूदितान्वयक्रमा
दया महीसुतासखी मया मनस्युपास्यते ।। ११७

*ஸீதையைத் துணைவியாகக் கொண்டதொரு வடிவெடுத்த தயையானது, தாமரை போன்ற கைகளில் அம்பையும் வில்லையும் ஏந்தி, தாமரை பூவின் வண்ணத்துடன் விசாலமாக விரிந்த கண்களில் மெலிந்த மேகத்தின் பரபரப்புடன், மனுவிடமிருந்து தொடங்கிய வம்ச வரிசையுள்ளதாக, என்னுல் மனத்தில் வழிபடப்படுகிறது. (117)*

दशाननं निबर्हितुं भृशानतामरोक्तिभि-
गृहीतमर्त्यविग्रहा महीतले सकृन्मया ।
मदीयवंशदेवता यदीयमीड्यते तदा
कृतान्ततो न मे भयं नितान्तभीषणादपि ।। ११८

*ராவணனை அடக்க மிகவும் வணங்கிய தேவர்களின் வேண்டுகோள் காரணமாக பூமியில் மனித வடிவமேற்ற என் குல தேவதை என்னால் ஒரு தடவை வழிபடப் பெற்றாலேயே மிகவும் அச்சம் தருகிற யமனிடமிருந்து எனக்குப் பயமில்லை. (118)*

यमार्यमादिपञ्चकक्रियोपभोगिभीतिदं
यमार्यमाहुरागमा महात्मनामिहाश्रये ।
विभावरीचरेश्वरप्रभावदावपावके
विभावरीणवैभवे मनो विनोदमेति ।। ११९

*யமன் அர்யமா முதலிய பித்ருலோக தேவதைகள் ஐவரின் (மரணபயம் தருகிற) செயல்முறையைக் கையாள்பவருக்குப் பயம் தருகிற அவரை ஆகமங்கள் (வேதங்கள்) ஆர்யன் எனக் கூறும். பெரியோர்களுக்கு ஆசிரயமானவரும் அரக்கரின் வீரியத்தைக் காட்டுத் தீயாக அழிப்பவரும் நிலாவுள்ள இரவு போன்று ஆனந்தம் தருகின்ற பெருமை உள்ளவருமான அந்த ராமனிடம் என் மனம் வியப்பு கலந்த ஆனந்தத்தை அடைகிறது. (119)*

भजामहे वयं सुधाभुजामहेयसेवनं
भुजामहेभहस्तसङ्गृहीतबाणकार्मुकम् ।
उदारसारराक्षसच्छिदारसाकुलं रणे
सदारसानुजस्थितिं सदा रघूद्वहं प्रभुम् ।। १२०

*தேவர்களால் இவருக்குப் பணிவிடை செய்யாதிருக்க இயலாது. பெருயானையின் துதிக்கை போன்ற கைகளில் பாணமும் வில்லும் ஏந்தியவர், வலிவு மிக்க அரக்கர்களைப்*

போரில் வெட்டிச் சாய்ப்பதில் ஈடுபடுபவர், மனைவியான ஸீதையுடனும் தம்பியான லக்ஷ்மணனுடனும் கூடவே இருப்பவர். ரகு குலத்தைப் பெருமைப்படுத்துபவர். அந்த பிரபுவை எப்போதும் வழிபடுகிறோம். (120)

सहस्रं सन्त्यन्ये शतमखशशाङ्कप्रभृतयः
परावृत्तं तेभ्यः प्रसजति मनो मे क्वचिदपि।
नवाम्भोदश्यामे नलिनदलसोदर्यनयने
धनुर्बाणाकल्पे धरणितनयाविभ्रमपदे॥ १२१

இந்திரன் சந்திரன் என ஆயிரக்கணக்கான தேவர்கள் உள்ளனர். அவர்களிடமிருந்து திரும்பிய மனம் எப்போதும் வேறெதனுடனும் ஒட்டுவதில்லை. புதிய கார்மேக வண்ணனும் தாமரையிதழ் போன்ற கண்களுள்ளவனும் வில்லையும், அம்பையும் அணியாகக் கொண்டவனும் பூமியின் புதல்வியின் லீலைகளுக்கிடமுமான ராமனிடம் மட்டும் ஒட்டுகிறது. (121)

शरासं बिभ्राणां शतमखशरासाभमिषुणा
सहारातिग्रीवारुधिरमधुसेवारुचिमता।
भजामो जीमूतश्रियमवनिजामोहनतनुं
दयावश्यापाङ्गां दशरथतपस्यापरिणतिम्॥ १२२

தயைக்கு வசமான கடைக்கண் பார்வை கொண்டதும், கார்மேகத்தின் அழகு கொண்டதும் ஸீதையை மயக்குகிற வடிவழகு கொண்டதும் எதிரியின் கழுத்திலிருந்து பெருகுகிற இரத்தமாகிற மதுவைப் பருகுவதில் ஆர்வமுள்ள அம்புடன் இந்திரனின் வில்லுக்கு (மின்னலுக்கு) ஒப்பான வில்லைத் தாங்குகிற தசரதரின் தவத்தின் பின் விளைவை - ராமனை வழிபடுகிறோம். (122)

मदक्षीबक्ष्वेलामुखरखरकीलालघुसृण-
द्रवैरालिम्पन्तं रणधरणिमेणीदृशमिव।

भजे व्योमस्थानां नयनकुतुकस्थानसमरं
जनस्थानारण्यायतनमनरण्यान्वयमणिम् ॥ १२३

*அநரண்ய மஹாராஜனின் வம்சத்தின் ரத்தினம். ஜநஸ்தானம் எனும் காட்டில் குடியிருந்த செருக்கால் தன்னிலே உணர்வற்ற விஷத்தைப் போன்ற கொடிய சொல் கூறுகிற கரனின் ரத்தமாகிற குங்குமப் பூத்திரவத்தால் யுத்தகளமாகிற பெண்ணிற்கு நறுமணப் பூச்சிடுபவன், வானில் சூழ்ந்து நிற்கிற தேவர் முதலானோரின் கண்களுக்கு வியப்பளிக்கிறவாறு போரிடுபவன். அந்த ராமனை வழிபடுகிறேன். (123)*

न जाने प्राचीने जनुषि सुकृतं किं न्वकरवं
सतां वंशे चाहं समजनिषि कीदृङ्महिमनि ।
अधीशो लोकानां मम हृदयमारोहति यतो
जगद्वन्द्यः श्रीमाञ्जनकनृपकन्यासहचरः ॥ १२४

*முன் பிறவியில் என்ன புண்ணியம் செய்தேனோ ? எந்த பெருமை பெற்ற நல்லோர் குலத்தில் பிறந்தேனோ ? உலகின் பேராளுனரும் உலகினரால் வணங்கப் பெற்றவரும் ஜனக அரசரின் பெண்ணைத் துணையாகக் கொண்டவருமான ராமன் என் மனம் மீது ஏறி அமர்கிறாரே ! (124)*

स्फुरन्नानाकल्पं भुजपटिमजल्पाकपुरभि-
द्धनुष्कं किष्किन्धानवनृपतिसंधानचतुरम् ।
कमप्यन्तः कुर्वे करतलगृहीतेषुधनुषं
तमालश्यामाङ्गं तपनकुलराजन्यतनयम् ॥ १२५

*அவர் பலவகை ஒளிமிக்க அணிகளை அணிந்தவர், தன் தோள் வலிவை சிவனின் வில் எப்போதும் சொல்லும்படி செய்தவர், கிஷ்கிந்தைக்குப் புதிய அரசரை அமைத்த திறமை படைத்தவர். கைகளில் வில்லும் அம்பும் ஏந்தியவர், பச்சிலே போன்ற மேனி வண்ணம் கொண்டவர். ஸூர்ய குலத்து அரசகுமாரன். அவரை உள்ளத்தினுள் கொள்வேன். (125)*

गिरिजापतिगीयमाननाम्ने
नलिनीनायकवंशभाग्यभूम्ने।
प्रणतोऽस्मि पयोदमेचकिम्ने
वनमालाधरवक्षसे महिम्ने॥ १२६

*சிவபெருமான் இவரது பெயரை எப்போதும் பாடி வருகிறார். ஸூர்ய வம்சத்தின் பெரும் பாக்கியமானவர். மேக வண்ணமுள்ளவர், மார்பில் வனமாலையைத் தரித்த பெருமகன். இவரை வணங்கி நிற்கிறேன். (126)*

दिक्पालस्मयघस्मरक्रमदशग्रीवग्रहव्यग्रदोः-
स्तम्भाडम्बरकार्तवीर्यविजयव्याख्यातमुख्यौजसः।
जेतारं जमदग्निजन्मन ऋषेर्वीरस्य सारस्वत-
स्रोतःस्यूतघनालिमालिखति मे चेतः शरण्यं नरम्॥

*திக் பாலகர்களின் செருக்கைப் பசி தீர உண்ட ராவணனைக் கட்டிப்பிடித்து இறுக்கிய கார்த்தவீர்யனை வென்று புகழ் பெற்ற பெரும் வீரமுள்ள ஜமதக்னியின் புதல்வரான வீரரான பரசுராமரை வென்றவரும் சரணடையத் தக்கவருமான மனிதரை வாக்கின் பிரவாஹத்தில் அகப்பட்ட மேக வரிசை போன்றவராக என் மனம் சித்திரிக்கிறது. (127)*

अङ्के निवेशितविदेहकुमारिकाणां
लङ्केशदारललितासहसायकानाम्।
आसारवाहिकरुणाभृदपाङ्गितानां
कासामपि प्रपदनं कलयामि भासाम्॥ १२८

*அது ஒரு பேரொளிக் குவியல், தன் மடியில் வைதேஹியை அமர்த்தியுள்ளது. லங்கை அரசனின் மனைவியரின் மன்மதக் கேளிக்கையைப் பொறுக்காத அம்புகளைக் கொண்டது. பெருக்கெடுத்தோடுகிற கருணையைத் தாங்குகிற கடைக்கண் பார்வை கொண்டது. அவற்றைச் சரணடைகிறேன். (128)*

न हि तन्न करोमि यन्निषिद्धं
विहितं यद्यपि कर्म नाचरामि।
धरणीदुहितुस्तथापि नाथं
शरणीकृत्य कृतार्थतामुपैमि ॥ १२९

*நான் தடை செய்தவைகளைச் செய்யாதவனல்ல. செய்யத்தக்கதென விதித்தவற்றைச் செய்பவனுமல்ல. ஆனாலும் ஸீதையின் நாதனைச் சரணடைந்து. மேனிலைக்குரியதைச் செய்தவனாகிறேன். (129)*

अयं शक्रादीनां गणमगणयित्वा दिविषदा-
मुपेक्ष्य स्वच्छन्दं द्रुहिणमनवेक्ष्य त्रिनयनम्।
पदत्रस्यापि श्रीकरमृषिवधूकल्मषहरं
नमस्कारोऽस्माकं रघुपतिपदाब्जं मृगयते ॥ १३०

*இந்திரன் முதலிய தேவர் கூட்டத்தைப் பொருட்படுத்தாமல் சுய விருப்பத்தால் பிரும்மாவையும் முக்கண்ணரையும் பாராமல், பாதுகைக்கும் தேச ஆட்சிக்கு உரிமை தந்ததும், ருஷியின் மனைவியான அகல்யையின் குறையை அகற்றியதுமான ரகுபதியின் திருவடித் தாமரையை எமது நமஸ்காரம் தேடுகிறது. (130)*

प्रत्यग्राम्बुदजालनीलवपुषं पाणिस्फुरत्कार्मुकं
पार्श्वद्वन्द्वनिविष्टपत्न्यवरजं राजन्यमेकं प्रभुम्।
नेत्रश्रीनिगृहीतनीरजलदच्छायामदं मे मुदा
चेतः शीतमयूखशेखरधनुर्द्रोढारमाढौकते ॥ १३१

*என் மனம் சிவதனுஸை முறித்தவரைத் தேடுகிறது. புதிதாக மொட்டிட்ட தாமரைக் குவியல் போன்ற நீல நிற முள்ளவர். கையில் துலங்குகிற வில் உள்ளவர், தன் இரு புறத்திலும் மனைவியையும் தம்பியையும் கொண்டவர், அரசர் பெருமான். கண்ணின் அழகால் நீருண்ட மேகத்தின் நிழல் காட்டுகிற திமிரை அடக்கியவர். (131)*

असुपवनभुजंगीभूतबाणामरीणां
निगमवनकुरङ्गीं नीरदश्यामलाङ्गीम्।
मदनतरलसीतामानसाम्भोजभृङ्गीं
कलयति हृदयं मे कामपि प्रेमभङ्गीम्॥ १३२

*எதிரிகளின் உயிர்க் காற்றைக் குடித்த பாம்பான பாணங்களைக் கொண்டது, வேதக் காட்டில் உலாவுகிற மான், மேகம் போன்ற கருநிறம் கொண்டது, காமத்தால் தளர்ந்த மைதிலியின் மனமாகிற தாமரை மீது அமர்ந்துள்ள வண்டு. அந்த அன்பின் ஒய்யாரத்தை என் மனம் உருவகப்படுத்துகிறது. (132)*

ज्यावल्लि कारणवशाद्रघुवंशकेतोः
कर्णान्तमेष्यसि कदापि विकृष्यमाणा।
देवे निवेदय तदा मम दौरवस्थ्यं
धर्माश्रितासि यदतः किल ते ब्रवीमि॥ १३३

*நாண் கயிறே! எப்பொழுதாவது இழுக்கப்படும் போது ரகு வம்சத்தின் பெருமானது காதின் அருகாமையை அடைவாயேயானால் அப்போது பிரபுவிடம் என் சீர் கெட்ட நிலையைத் தெரிவிப்பாய். தர்ம ஸ்வரூபத்தை நீ அண்டியுள்ளாய். அதனால் தான் இதனை உன்னிடம் சொல்கிறேன். (133)*

कृत्वा स्थावरतावहानि कतिचित्पापानि पापप्रियो
नाभूवं सरयूतटे तृणमपि प्रागेव कस्मादहम्।
यत्तत्रत्यचराचरेभ्य इव मे देवः स्मराविष्कृत-
स्वर्गस्त्रैणनिसर्गकेलिमधुरान्सांतानिकान्दापयेत्॥ १३४

*பாபம் புரிவதில் நாட்டம் கொண்ட நான் முன்னதாக தாவர நிலை தருகிற சில பாபங்களைச் செய்து ஸரயூவின் கரையில் புல்லாகவாவது தோன்றவில்லை. ஏன் இப்படி? அங்குள்ள அசைவதும் அசையாததுமானவற்றிற்கும் காம*

வசப்பட்ட ஸ்வர்கத்துப் பெண்களுடன் இயல்பாக விளையாடுவதால் இனிக்கிற ஸாந்தானிக உலக சுகத்தை அளித்தது போல் எனக்கும் அளித்திருப்பான் அல்லவா? (134)

हिन्दोलभूषणमकृत्रिमवाक्तरुण्या
 मन्दोदरीमदनकेलिसमापनास्त्रम्।
केलीसखं जनकराजकिशोरिकाया
 नालीककार्मुकधरं नरमाश्रयामः ॥ १३५

வேதவாக்காகிற யுவதி ஆட்டுகிற ஊஞ்சலில் அழகாக அமர்ந்தவர். மந்தோதரியின் காதல் விளையாட்டை முடிவிற்குக் கொணர்ந்த அஸ்திரம் ஏந்தியவர், ஜனகராஜனின் புதல்வியின் விளையாட்டுத் துணைவர், நீண்ட மூங்கில் வில் தரித்தவர், அவரை அணுகுகிறோம். (135)

चेतः शतक्रतुमुखेषु मखाशनेषु
 तिष्ठत्सु निष्ठुरपुराणतपोबलेन।
उत्कण्ठतेऽद्य दशकण्ठमदद्विपेन्द्र-
 कण्ठीरवं कमपि वीरमुपासितुं नः ॥ १३६

முன் எப்போதோ செய்த கடும் தவத்தின் வலிவால் வேள்விகளில் உணவு ஏற்கிற இந்திரன் முதலான பல தேவர்கள் இருந்தாலும், என் மனம் மத யானை போன்ற ராவணனை அழித்த சிங்கமான ஒரு வீரனை வழிபட விரும்புகிறது. (136)

प्राचीनप्रभवशतार्जितैस्तपोभिः
 प्रोन्मीलत्कुतुकतरङ्गमन्तरङ्गम्।
दिष्ट्या मे दिनकरवंशदीपमेकं
 कोदण्डाभरणमुपैति कोसलेन्द्रम् ॥ १३७

பல முன் பிறவிகளில் சேமித்த தவத்தின் பலனாக, குதூஹல அலைபாய்கின்ற என் உள்ளம் என் பாக்கியத்தின்

பலஞக, கோதண்டமணிந்தவரும் ஸூர்ய வம்சத்துத் தீபமுமான கோஸல நாட்டரசனை அணுகுகிறது.

कारुण्यामृतपरिवाहभागपाङ्गं
वैदेहीस्तनघनसारवासिताङ्गम्।
नाराचक्षपितनदीश्वरावलेपं
ध्यायामः कमपि करात्तबाणचापम्।। १३८

கருணை எனும் அமுத நீர் பெருகுகின்ற கடைக் கண் கொண்டவர். ஸீதை மார்பகத்துப் பச்சைக் கர்பூரப் பூச்சின் நறுமணம் கொண்டவர், கூர்மிக்க அம்பால் கடலின் செருக்கை அடக்கியவர். கைகளின் அம்பும் வில்லும் கொண்டவர், அந்த ஒருவரைத் தியானிப்போம். (138)

लङ्केशद्विरदमृगाधिपो गुणानां
संकेतस्थलमवनीसुतासहायः।
निर्वेलप्रसृदलयोऽस्तु मे शरण्यः
सर्वेषामपि जगतां स कश्चिदीशः।। १३९

ராவணனென்ற யானையைக் கொன்ற சிங்கம், குணச் சிறப்பின் இருப்பிடம். ஸீதையின் துணைவன், எல்லையற்றுப் பரவிய கருணை, இவ்வுலகங்களனைத்திற்கும் ஈசன், அவர் எனக்கு சரணமளிக்கட்டும். (139)

अशनिपरुषघोषा जीवितं हर्तुकामा
यमभटजनपङ्क्तिर्याविदायाति भीमा।
मरतकमणिनीले मैथिलीकेलिलोले
महिमनि मम तावन्मग्नमस्त्वन्तरङ्गम्।। १४०

இடிபோன்ற கோர ஒலியுடன் என் உயிரைப் பறிக்க பயங்கரமான யம கிங்கரர்களின் படை என்னை நெருங்கு முன் என் உள்ளம், மரகத ரத்னம் போன்ற நீல வண்ணத்தானும், மைதிலியுடன் கேளிக்கையில் ஈடுபட்டவனுமான அந்தப் பெருமை மிக்கவனிடம் ஆழ்ந்திருக்கட்டும். (140)

देहावसानसमये दयया रघूणां
वीरः कराम्बुजविराजदभीतिमुद्रः ।
आरुह्य पुष्पकमलंकृतवामभागो
देव्या विदेहसुतया मम संनिधत्ताम् ।। १४१

*என் உடலின் இறுதி நேரத்தில் ரகு வீரன் தாமரை போன்ற கையால் அபயமுத்திரை காட்டுபவராக மடியின் இடது புறத்தில் அமர்ந்த ஸீதையுடன் புஷ்பக மேறி தயையால் என் முன் தோன்றட்டும். (141)*

सुरैः प्रथमतः स्तुता तदनु योगिभिर्भाविता
ततः प्लवगभल्लुकैर्जय जयेति संभाविता ।
जगत्त्रितयनायिका जनकराजकन्यान्विता
मदीयकुलदेवता वसति रत्नसिंहासने ।। १४२

*என் குலதேவதை முதலில் தேவர்களால் துதிக்கப் பெற்றது. பின் யோகிகளால் தியானிக்கப் பெற்றது. பின்னர் குரங்குகளாலும் கரடிகளாலும் ஜய ஜய என வாழ்த்தப் பெற்றது. மூவுலகின் நாயகம், ஸீதையுடன் கூட ரத்ன ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்துள்ளது. (142)*

आश्चर्यं न किमनवेक्ष्य लोकपालान्
उल्लङ्घ्य द्रुहिणमुपेक्ष्य चन्द्रचूडम् ।
अस्माभिः सविनयमञ्जलिः कृतोऽयं
पादाब्जं भजति पयोधिबन्धनस्य ।। १४३

*திக் பாலகர்களைப் பொருட்படுத்தாமல் பிரும்மாவைத் தாண்டி, சிவனைக் கவனியாமல், கடலைக் கட்டுப்படுத்திய ராமனது தாமரைத் திருவடியை வழிபட்டு பணிவுடன் எங்களால் அஞ்ஜலி செய்யப்பெற்றது. வியப்பிற்குரிய தல்லவா? (143)*

श्रीकण्ठायुधशिथिलीकृतिप्रवीणो

निःशेषीकृतभृगुनन्दनावलेपः।

स्रोतस्विन्यधिपतिसूचितप्रतापो

देवो मे दशमुखशासनः शरण्यः॥ १४४

*சிவனின் ஆயுதத்தைச் சிதைவுறச் செய்வதில் திறமை படைத்தவர், பிருகு குலத்திய பரசுராமரின் செருக்கை மீதமறச் செய்தவர், நதிகளின் நாயகனை கடலரசனிடம் தன் பிரதாபத்தைக் காட்டியவர், ராவணனை அடக்கிய தேவன், அவரே எனக்குச் சரணமானவர். (144)*

सुत्रामप्रमुखसुपर्ववन्द्यलीलं

भल्लूकप्लवगपरिष्कृताङ्घ्रिमूलम्।

वैदेहीवलयपदाङ्कशोभितांसं

चेतो मे स्मरति चिरंतनं पुमांसम्॥ १४५

*இந்திரன் முதலிய தேவர்களால் வணங்கத்தக்க லீலையுள்ளவர், கரடிகளும் குரங்குகளும் கழுவிய திருவடிகளுள்ளவர், வைதேஹியின் கை வளைகள் அழுத்திய அடையாளத்தைத் தோளில் கொண்டவர், மிக முன்னவருக்கும் முன்னவர். அவரை என் உள்ளம் நினைவு கூறுகிறது. (145)*

संक्रन्दनस्यन्दनभूषणानां

नाराचधारार्दितरावणानाम्।

वैमानिकाश्चर्यरणक्रमाणा-

मध्येमि केषामपि विक्रमाणाम्॥ १४६

*இந்திரனின் தேரில் அழகிய அணியாக அமர்ந்தவர், அம்பின் மழையால் ராவணனை வதைத்தவர், விமானத்தில் அமர்ந்த தேவர் முதலானோர் கண்ட போர் முறை கொண்டவர், வீரமே வடிவான அவரை வாயாரப் புகழ்கிறேன். (146)*

आम्नायमौलिमणिमब्जभवादिवन्द्यं
नाम्ना विभूषितनगेन्द्रसुतामुखेन्दुम्।
द्वैधीकृतेशधनुषं पुरुषं तमेकं
नाथं विधाय हृदयं मम नानटीति ॥ १४७

*வேதத்தில் தலையில் சூடப் பெற்ற இரத்தினம், பிரும்மா முதலானோரால் வணங்கத்தக்கவர், மலை மகளின் நாவைத் தன் நாமத்தால் அலங்கரிப்பவர், ஈசனின் வில்லை இருதுண்டுகளாக்கியவர், அந்த மாமனிதரை நாதனாகக் கொண்டு என் உள்ளம் கூத்தாடுகிறது. (147)*

सुग्रीवाङ्गदजाम्बवद्धनुमतां सूक्ष्मेक्षिकालक्षितं
श्रुत्वा मन्त्रमनन्यतन्त्रहृदये श्च्योतद्दयोर्मीमये।
दर्पान्धं दशकन्धरं विजहतस्तद्भ्रातुरभ्यागमं
सार्थीकुर्वति निर्वृतिं भजति मे स्वान्तं कबन्धान्तके ॥ १४८

*ஸுக்ரீவனும் அங்கதனும் ஜாம்பவானும் அனுமானும் ஸூக்ஷ்மமாக ஆராய்ந்து கூறிய மந்திராலோசனையைக் கேட்டு, பிறர் வசப்படாத இதயமுள்ளவரும், தயை அலைப் பெருக்காக விளங்குபவரும், செருக்கால் குருடான ராவணனை உதறிவிட்டுத் தன்னருகே வந்த அந்த ராவணனின் தம்பியின் வரவைப் பயனுள்ளதாக்கியவரும், கபந்தனை மாய்த்தவருமான ராமனிடம் என் உள்ளம் அமைதியைப் பெறுகிறது. (148)*

पारावारतटे धनुःशरपरिष्काराग्रहस्ताम्बुजं
नम्रस्याशरनायकानुजनुषो नाथीभवद्याचतः।
मेघश्यामलकान्तिमेदुरकृपामेदस्विनेत्राञ्चलं
किंचिद्वस्तु निवस्तुमस्तु हृदि मे कीशाच्छभल्लावृतम् ॥ १४९

*குரங்குகளும் கரடிகளும் சூழ்ந்து நிற்க, மேகம் போன்ற ஒளிமிக்க கரு நிறத்தால் அழகியதும் கிருபை கசிகிற கண்ணோரம் கொண்டதுமான ஒரு பொருள், கடற்கரையில்*

வில்லும் அம்புகளும் ஏந்திய தாமரை போன்ற கைகளுடன் வணங்கி நின்று அபயம் வேண்டுகிற அரக்க அரசனின் தம்பிக்குக் காப்பாளனுகியது. அது என் உள்ளத்தில் தங்கட்டும். (149)

उत्सृज्याग्रजमुग्रजल्पितमपि क्रव्यादभव्याधिपं
संप्राप्तेन विभीषणेन सचिवैः सार्धं स्थितेनाम्बरे।
दीनत्राणधुरीण देव करुणा देया मयीत्यर्थितं
भक्तास्मो हृदि राघवं परिवृतं भल्लूकशाखामृगैः ॥ १५०

கொடுஞ் சொல் பேசுகிற அரக்கர்களின் அரசனுன அண்ணனை விட்டகன்று, தன் மந்திரிகளுடன் தன்னை அணுகிய விபீஷணன் வானில் நின்றபடி ''எளியவரைக் காப்பதில் முன் நிற்பவரே! தேவரே! என்னிடம் பரிவு காட்டவேண்டும்'' என வேண்டப்பட்டவரும் கரடிகளாலும் வானரர்களாலும் சூழப் பெற்றவருமான ராகவனை உள்ளத்தில் இடம் பெறச் செய்வோம். (150)

सुग्रीवागतमेनमानय दशग्रीवानुजं वा दश-
ग्रीवं वा प्लवगेन्द्र किं गणनया दत्तं मयास्याभयम्।
इत्यामन्त्र्य विभीषणाय ददतो लङ्काधिपत्यं प्रभो-
र्ध्यायामः प्रतिपन्नसंनतदयादीक्षान्कटाक्षाङ्कुरान्॥ १५१

ஸுக்ரீவரே! அவன் ராவணனது தம்பியோ ராவணனே! இங்கு வந்த அவனை அழைத்து வருவீர். யோசிப்பதில் பலனில்லை. இவனுக்கு என்னுல் அபயம் தரப்பட்டது என்று யோசனை கூறி, விபீஷணனுக்கு இலங்கையரசையளித்த பெருமானின், சரணடைந்து வணங்கி நிற்பவரிடம் தயை காட்டுவதை விரதமாகக் கொண்ட கடாக்ஷக் கதிர்களைத் தியானிப்போம். (151)

दर्भास्तरन्यस्तशरीरभारं सिन्धोः प्रसादाय रघुप्रवीरम्।
मदव्यपेतं महति प्रतापेऽप्यन्वेति नन्वेष ममान्तरात्मा॥

*பெருவலிவிருந்தும் செருக்கின்றிக் கடலரசனின் அருள் பெறத் தர்ப்பை விரிப்பின் மீது உடலைக் கிடத்திய ரகுவீரனை என் உள்ளம் அணுகுகிறதே! ஆச்சரியம். (152)*

दानोत्कर्षक्षममुपदधद्दक्षिणं बाहुदण्डं
दीर्घीकुर्वन्नितरमसितज्याकिणाङ्कप्रकोष्ठम्।
प्रान्ते कृत्वा धनुरिषुमपि प्राप्नुमब्धेः प्रसादं
देवो दर्भास्तरणशयितश्चित्तमुत्तम्भते नः॥ १५३

*பிறருக்குப் பொருளை வாரி வழங்குகிற வலது கையைத் தலையணையாக்கி, நாணின் அடியால் வடுவுள்ள மணிக்கட்டு கொண்ட இடது கையை நீட்டி, வில்லையும் அம்பையும் அருகில் கிடத்திக் கடலரசனின் அருள் பெற தர்ப்பை விரிப்பில் படுத்துள்ள தேவன் நம் உள்ளத்தைத் தூக்கி நிறுத்துகிறான். (153)*

भक्तिप्रह्वविभीषणार्पितकरन्यस्तैकहस्ताम्बुजः
सुग्रीवेण पुरो निवारितजनः सौमित्रिणानुद्रुतः।
संभ्राम्यद्भरतोपनीतचरणत्राणार्पिताङ्घ्रिद्वयो
दिष्ट्या संप्रति मानसं विशति मे राजैष राज्ञामपि॥ १५४

*பக்தியால் வணங்கி நிற்கிற விபீஷணனின் கையில் ஒரு கையை ஊன்றி, ஸுக்ரீவன் மக்கள் கூட்டத்தை முன் தடுத்து நிறுத்த, லக்ஷ்மணன் தொடர்ந்தோடி வர, பரபரப்புடன் பரதனால் கொணரப் பெற்ற பாதுகைகளில் தன் திருவடிகளைப் பொருத்துகிற அரசர்களின் அரசனான ராமன் பாக்கியத்தால் இப்போது என் மனத்தினுள் அடிவைக்கிறான். (154)*

वयश्चतुरमस्थिरं गुणवती वधूरध्रुवा
न संपदविनश्वरा न चिरजीविनो बान्धवाः।
इति स्वयमवेत्य चिद्घनसदात्मके शाश्वते
रमस्व रघुपुंगवे हृदय नान्यदालोचय॥ १५५

இதயமே ! உனக்குப் பிடித்த வயது நிலையற்றது. குணவதியான மனைவி நிலைத்தவளல்ல. எந்த சொத்தும் அழியாததல்ல. உறவினர் சிரஞ்ஜீவிகளல்ல. இதனைத் தானே உணர்ந்து ஸச்சித் வடிவினனான நிலைத்த ரகுபுங்கவனிடம் ஈடுபடுவாய். வேறொன்றைப் பற்றியும் சிந்தியாதே. (155)

उत्तुङ्गभूमितनयाकुचशैलशृङ्ग-

काश्मीरगैरिकपरागकरम्बिताङ्गः ।

भग्नक्षपाचरतरुर्भरताग्रजन्मा

मत्तद्विपो विहरतान्मनसि ह्रदे मे ।। १५६

பரதனின் அண்ணனான ஒரு மதயானை, மேடிட்ட ஸீதையின் மலைச் சிகரம் போன்ற மார்பகத்தில் பூசப்பெற்ற குங்குமப்பூ பூங்காவிப் பூச்சால் பிசிறலாகப் பூசப் பெற்றது. அரக்கராகிய மரத்தை வேருடன் பிடுங்கி எறிந்தது. அது என் மனமெனும் மடுவில் விளையாடட்டும். (156)

रणभुवि कृतलङ्कातङ्कहुंकारगर्भ-

भ्रुकुटिविकटवक्त्रः कार्मुकारूढपत्रः ।

निखिलनिजसपक्षक्षेमकामः पुरो मे

स भवतु रघुवीरः साध्वसध्वंसहेतोः ।। १५७

போரரங்கில் லங்கையைக் கலக்கமடையச் செய்கிற ஹுங்காரத்தாலும் புருவ நெரிப்பாலும் கோணிய முகமுள்ளவர், வில்லில் அம்பைப் பூட்டியுள்ளவர், தன்னைச் சார்ந்தவரனைவரின் நலனைப் பெரிதும் விரும்புபவர், என் பரபரப்படங்க என் முன் அந்த ரகுவீரர் தோன்றட்டும். (157)

रणप्रवणरावणव्रणदबाणमोक्षक्षण-

क्वणद्गुणधनुर्ध्वनित्वरितमारितारिव्रजः ।

जगद्दुरितजर्जरीकरणजागरूकक्रमो

मम व्यपनयेद्भयं मनुकुलप्रवीराग्रणीः ।। १५८

*மனு குலத்தில் புகழ்பெற்று முன் நிற்பவரான ராமன், போரில் சூரனுன ராவணனைப் புண்படுத்துகிற அம்பை விடுகிற போது எழுந்த நாணொலியால் தன் எதிரிக் கூட்டத்தை வேகமாக மாய்த்தவர், உலகின் துயரை வலிவிழக்கச் செய்வதில் விழிப்புள்ள நடையுள்ளவர். அவர் என் பயத்தைப் போக்கட்டும். (158)*

स्फुरदभिनवरत्नश्रेणिरज्यत्किरीटे
सुरभिलवनमालालंकृतोरःकवाटे ।
सरति खलु मनो मे सर्वलोकैकनाथे
पुरभिदभिमताख्ये पुंसि सीतासनाथे ॥ १५९

*அவர் ஸீதையுடன் கூடிய பரமபுருஷர். அவரது நாமம் சிவனுக்கு மிகவும் ப்ரியமானது. புதிய ஒளிமிக்க ரத்தின வரிசைகளால் ஒளிர்கிற கிரீடம் உள்ளவர். மணமிக்க வனமாலையணிந்த கதவு போன்ற மார்புள்ளவர். உலகனைத்தின் நாதன். அவரிடம் என் மனம் மெள்ள நகர்ந்து செல்கிறது. (159)*

पुष्पाण्याक्षिपता फलानि हरता पृथ्वीरुहान्भञ्जता
व्याघ्रान्द्रावयता द्विपान्प्रहरता कण्ठीरवान्कर्षता ।
रक्षःसैन्यजिगीषुणा हरिचमूचक्रेण साकं व्रजन्
स्वामी चेतसि मे मुदं स कुरुते भूमीसुतावल्लभः ॥ १६०

*வானரர்களின் படைவரிசை பூக்களைப் பிய்த்தெறிகிறது. பழங்களைப் பறிக்கிறது. மரங்களை ஒடிக்கிறது. புலிகளை விரட்டுகிறது. யானைகளை அடித்து வீழ்த்துகிறது. சிங்கங்களை இழுத்துத் தள்ளுகிறது. அரக்கர் படையை வெல்கிற வேகத்துடன் வருகிற வானர ஸேனையுடன் வருகிற ஸீதையின் மணாளன் என் எஜமானன். அவர் என்னுள்ளத்தில் ஆனந்தத்தை விளைவிக்கிறார். (160)*

कदनमरिनगर्याः कर्तुमुद्दामभीमैः
कपिभिरनिलसूनुस्कन्धमारुह्य यान्तम् ।

कनकशिखरिशृङ्गारूढकालाम्बुदाभं
कमपि मनसि वीरं कुर्महे शर्महेतोः ।। १६१

எதிரியின் தலை நகரை அழிக்க, கட்டுக்கடங்காமல் பயத்தை உண்டாக்குகிற வானரர்கள் சூழ்ந்து வர, அனுமானின் தோளில் ஏறிச் செல்கிற, தங்கமலை மீது காண்கிற கருமேகம் போன்ற ஒரு வீரனை ஆனந்தம் பெற மனத்தினுள் கொள்வோம். (161)

उग्रे तपस्यपि पयोधिमुपेक्षमाणं
बाणत्रुटत्तिमितिमिंगिलरक्तशोणम् ।
कुर्वन्रुषा मनुकुलीनकुमारवीरः
कौतूहलं दिशति मे हृदि कौसलेयः ।। १६२

உக்கிரமான தவத்திலிருந்தாலும் பொருட்படுத்தாத கடலரசனிடம் கோபம் கொண்டு அம்புகளால் சுறு, திமிங்கலம் முதலியவற்றைச் சிதைத்து அவற்றின் செந்நீரால் கடலைச் சிவந்ததாக்குகிற மனு குலத்திலுதித்த இளைஞனை வீரனை கோஸலையின் மகன் என் உள்ளத்தில் குதூஹலத்தை விளைவிக்கிறார். (162)

जलधिजनितकोपजायमानभ्रुकुटिविटङ्कभयंकराननाय ।
गगनचरगणः प्रणाममस्मत्कुलपतये कुरुते स्म राघवाय ।। १६३

கடலரசனிடம் வந்த கோபத்தால் முகப்புருவ நெரிப்பால் பயத்தை விளைவிக்கிற நம் குல தெய்வமான ராகவனுக்கு வானில் உலாவுகிற தேவர் கூட்டம் வணக்கம் தெரிவிக்கிறது. (163)

जलदनीलतनौ जनकात्मजावदनचन्द्रवशीकृतमानसे ।
शरशरासनचारुकराम्बुजे रघुपतौ रमतां हृदयं मम ।। १६४

மேகம் போன்ற நீல வண்ணம் கொண்ட மேனியரும், ஜனகனின் மகளின் சந்திரனைப் போன்ற முகத்தின் வசப்பட்ட மனம் உள்ளவரும் அம்பும் வில்லும் ஏந்திய தாமரை போன்ற

கைகளுள்ளவருமான ரகுபதியிடம் என் மனம் ஈர்க்கப்படட்டும். (164)

दलदुत्पलदामकोमलाङ्गं दयमानं मनुवंशशैलशृङ्गम्।
करपद्मगृहीतचापबाणं कलये कंचन पूरुषं पुराणम्।। १६५

அவர் ஒரு பழைய புருஷர், மலர்கிற அல்லிப்பூ போன்று மென்மை மிக்க வடிவழகர், பரிவுமிக்கவர், மனுவம்சமான மலையின் சிகரம், கையில் வில்லும் அம்பும் ஏந்தியவர், அவரை உள்ளத்தில் காண்கிறேன். (165)

पिपासितास्त्रनिष्पीतप्रेयसीमातृमेखलम्।
वस्तु विध्वस्तपौलस्त्यं पुरस्तादाविरस्तु नः ।। १६६

தன் அன்புக்குரிய மனைவி ஸீதையின் தாயான பூமி தேவியின் இடுப்பணியாக உள்ள கடலை நா வரட்சி மிக்க அஸ்திரங்களைக் கொண்டு பருகச் செய்தவர், புலஸ்தியர் வழிவந்த ராவணனை அழித்தவர். அந்தப் பெரும் பொருள் என் முன் தோன்றட்டும். (166)

स्मरतरलविदेहराजकन्या-
कुचतटकुङ्कुमयोगपिञ्जराय।
मनुकुलमणये नमोऽस्तु गौरी-
रमणशरासनसालकुञ्जराय।। १६७

மன்மத தாபத்தால் இளகிய ஸீதையின் மார்பகத்தின் குங்குமப் பூச்சால் சிவந்தவரும் மனு குலத்தின் ரத்தினமும் சிவனது வில்லாகிய ஆச்சான் மரத்தை ஒடித்த யானையுமாகிய ராமருக்கு நமஸ்காரம். (167)

## द्वितीयो निष्यन्दः

वन्दे तमिन्दीवरदामनीलं वन्दारुमन्दारपदारविन्दम्।
रामं सुरामङ्गलकृद्विरामं क्षेमंकरामन्दशराभिरामम्।। १

அல்லிப் பூ மாலை போன்று நீலமானவரும் வணங்கியவருக்கு மந்தாரமெனும் கற்பகமரமான திருவடித்

தாமரை உள்ளவரும் தேவர்களது மங்கள நிலையைக் குலைப்ப வரை மறையச் செய்பவரும் நலம் தரும் வேகம் மிக்க அம்புகளால் அழகானவருமான ராமனை வணங்குகிறேன். 1

भजामि देवं भरताग्रजं तं पदाम्बुजं यस्य पवित्रकीर्त्तेः ।
शिरांसि वा शीलयति श्रुतीनां मनांसि वा मत्कुलसंभवानाम् ॥ २

வேதங்களின் தலைப்பகுதியான உபநிஷதங்களையும் என் குலத்தவரின் மனங்களையும் பழக்குகிற தூயப் புகழ் பெற்ற திருவடி கொண்ட பரதனின் அண்ணனை தேவனை வழிபடுகிறேன். 2

ममान्तरुन्मीलति मानवेन्दुर्महीसुताविभ्रमसूत्रकारः ।
निपातयामास निशाचरेन्द्रं विदन्बुधानां विधिगौरवं यः ॥ ३

ஒரு மாமனிதனாகிய சந்திரன் என் உள்ளத்தில் உதிக்கிறார். அவர் ஸீதையின் கேளிகளுக்கு வழியமைப்பவர், தேவர்களின் விதியின் வலிமையை உணர்ந்து அரக்க அரசனை வீழ்த்தியவர். 3

देवतासु शरणीकरणार्थं धावता सुचिरमेकतमा मे ।
चेतसा गतिवशेन गृहीता धूतसागरमदा विशिखैर्या ॥ ४

சரணடைவதற்கென வெகுகாலம் தேடி அலைந்த போது தேவதைகளில் ஒன்று மட்டுமே சுற்றி வந்த என் மனத்தால் கண்டுபிடிக்கப்பட்டது. அது பாணங்களால் கடலின் செருக்கை அடக்கியது. 4

कुम्भजादिमुनिकोटिनुतं चेत्तं भजानि तपनान्वयदीपम् ।
वासरे न चरमे भविता मे कासरेण सह कालनिरीक्षा ॥ ५

அகஸ்தியர் முதலிய முனிவர்களாலேயே வணங்கப் பெற்ற அந்த ஸூர்ய குலத்தின் தீபத்தை வழிபடுவேனாயின். வாழ்க்கையின் இறுதி நாளில் எருமையுடன் காலன் வருவதை எதிர்பார்க்க வேண்டியிராது. 5

आमनेम यदि कोमलवर्णं रामनाम भुवने महनीयम् ।
व्योमसीमनि वसेम सुखाढ्ये धाम डामरमियाम न याम्यम् ॥ ६

அழகிய எழுத்துக்களால் அமைந்ததும் உலகில் புகழ் பெற்றதுமான ராம நாமத்தை ஜபித்துவந்தால் ஆனந்தம் நிரம்பிய சுவர்க்கத்தில் வசிப்போம். யமனின் கொட்டகைக்குச் செல்லமாட்டோம். 6

नूतनागमघनाभशरीरे भूतनाथधनुरक्षमसारे।
पूतनामनि मनो यदि रामे यातना न भविता यमतो मे ।। ७

புதிதாகத் தோன்றிய மேகம் போன்ற உடல் கொண்டவரும் சிவனது வில்லால் தாங்க முடியாத வலிவு கொண்டவரும் தூய நாமம் கொண்டவருமான ராமனிடம் மனம் பதித்தால் யமனிடமிருந்து வாதனை எனக்கு வராது. 7

पूर्वजन्मकृतपुण्यमहिम्ना पुञ्जितेन मतिरुज्झितनिम्ना।
कुत्रचिद्विहरते गुणतुङ्गे कुम्भकर्णकुमुदैकपतङ्गे ।। ८

முன் பிறவியில் செய்து குவிந்துள்ள புண்யத்தின் பெருமையால் பள்ளத்தில் விழுவதைத் தவிர்த்து குணச் சிறப்பால் உயர்ந்த ஓரிடத்தில் என் மனம் விளையாடுகிறது. அந்த இடம் கும்பகர்ணனாகிய ஆம்பல் பூவை சூர்யனாக நின்று தலையெடுக்க விடாதது. 8

पापिनोऽयमिह पावयितेति प्रत्ययेन मम चित्तमुपैति।
भूयसा हतनिशाचरलोकं भूसुताहृदयतस्करमेकम् ।। ९

அரக்கர் குலத்தை அழித்தவரும் ஸீதையின் உள்ளத்தைத் திருடியவருமான ஒருவரை, பாவியான என்னைத் தூய்மைப்படுத்துபவர் என்ற நம்பிக்கையுடன் என் உள்ளம் அணுகுகிறது. 9

अङ्कितं जनकजाकुचभाजा कुङ्कुमेन च कुरङ्गमदेन।
तं कठोरशरकारितलङ्कातङ्कमेव मतिरेति युवानम् ।। १०

ஸீதையின் மார்பகத்தில் பூசப் பெற்ற குங்குமப்பூச் சாந்தாலும் கஸ்தூரியாலும் அடையாளமிடப்பட்டவனும் கொடும் அம்பால் லங்கைக்குத் துயர் விளைவித்தவனுமான வாலிபனை என் மனம் அணுகுகிறது. 10

उत्पलद्युतिमुदञ्चितयोगं विद्युतेव च विदेहकुमार्या।
चातको नवमिवाम्बुदमेकं चापभूषितमुपैति ममात्मा ॥ ११

*அல்லியின் நிறமுடையதும், மின்னல் கொடிபோன்ற ஸீதையுடன் அழகுறச் சேர்ந்துள்ளதும் வில்லால் அழகுற்றதுமானதொன்றை சாதகபக்ஷி மேகத்தை நாடுவது போல் என் உள்ளம் நாடுகிறது. 11*

अस्तु मे हृदयमप्यणुमात्रं वस्तुमेव वलते कृपयाऽस्मिन्।
कोटिभिः परिवृतः प्लवगानां कोऽपि कोकनदबन्धुकुलीनः ॥ १२

*என் உள்ளம் அணுவளவாக இருக்கட்டுமே! கோடி வானரர்கள் சூழ்ந்து நிற்க, ஸூர்ய வம்சத்தில் தோன்றிய ஒருவன் இதனுள் கருணையுடன் வசிக்கச் சுற்றி வருகிறான். 12*

निग्रहे युधि निशाटचमूनामुग्रहेतिभिरुदग्रविहारम्।
तापसामरशरण्यमुपासे चापसायकधरं रघुवीरम्॥ १३

*போரில் அரக்கர் படையை அடக்க உக்கிரமான ஆயுதங்களுடன் கடுமையுடன் போரிடுபவரும் தவம் செய்கிற முனிவருக்கும் தேவருக்கும் அடைக்கலம் தருபவரும் வில்லும் அம்பும் ஏந்தியவருமான ரகுவீரரை வழிபடுகிறேன். 13*

हस्तेनाम्बुजकोमलेन चरणाम्भोजकणन्नूपुरं
कौसल्याकरपल्लवाङ्गुलिदलान्यालम्ब्य मन्दं चरन्।
पश्यत्पङ्क्तिरथाक्षिपङ्कजनवादित्यो हरत्येव मे
चित्तं कोऽपि चिरंतनोक्तियुवतेरुत्तंसभूतः शिशुः ॥ १४

*ஒரு சிசு கால்களில் சிலம்பு கொஞ்ச, தாமரை போன்று மெதுவான கையால் கௌஸல்யையின் துளிர் போன்று மெதுவான கைவிரல்களைப் பிடித்துக் கொண்டு மெள்ள நடக்கிறது. தசரதரின் தாமரை போன்ற கண்களின் முன் உதிக்கின்ற சூரியனாக உள்ளது. வேதமெனும் யுவதியின்*

*தலையில் சூடிய பூங்கொத்து போன்ற அது என் மனத்தைக் கவர்கிறது. 14*

चेतः शीतलयत्यधिष्ठितवता सौधस्थलीमुन्नता-
मानन्दार्द्रितचेतसा दशरथेनालोकिताभ्यागमः ।
श्यामाङ्गः शरदिन्दुबिम्बवदनः स्मेरारविन्देक्षणः
कोऽपि स्वर्णकुथाभिरामकलभस्कन्धाधिरूढः शिशुः ॥ १५

*ஒரு சிசு என் உள்ளத்தைக் குளிர்விக்கிறது. உயர்ந்த உப்பரிக்கை மீது அமர்ந்து ஆனந்தத்தால் உள்ளம் நனைய தசரதன் அதன் வருகையை உற்றுப் பார்க்கிறார். நீலவண்ணன், சரத் காலத்துச் சந்திரன் போன்ற முகமுள்ளது, புன்னகையால் மலர்ந்த தாமரை போன்ற கண்களுள்ளது, யானையின் முதுகில் விரித்த தங்க மெத்தையில் அமர்ந்துள்ளது. 15*

मणिसरधरं कण्ठे मध्ये हिरण्मयकिंकिणी-
नहनसुभगं नालीकाक्षं नवाम्बुदमेचकम् ।
दशरथनृपस्त्रीणामङ्केषु संक्रमितं क्रमा-
द्विचिनुत जनास्त्रय्यन्तार्थं विडम्बितशैशवम् ॥ १६

*வேதங்களின் உட்பொருளானதொன்று பேதைக் குழந்தையாக வேஷமிட்டுத் தசரதரின் மனைவிகளின் மடிகளில் மாறி மாறி அமர்ந்து விளையாடுகிறது. கழுத்தில் ரத்னமாலைச் சரம், இடுப்பில் தங்கச் சலங்கை உள்ள அரைஞாண், தாமரை போன்ற கண்கள், புது மேக வண்ண அழகு மிக்க உடல் இதனைத் தேடிக் கண்டுபிடிப்பீர். 16*

गुरुपरिचरणेनालं कुवलयनीलं गृहीतशिशुलीलम् ।
द्रक्ष्यथ दशरथनृपतेः शुद्धान्तेष्वागमान्तसिद्धान्तम् ॥ १७

*குருவிற்குப் (பெரியோர்களுக்குப்) பணிவிடை செய்தது போதும். தசரத அரசனின் அந்தப்புரத்தில் வேத முடிவின் உட்பொருளானது குவளைப்பூ போல் நீல உடலுடன் சிசுவாக விளையாடிக் கொண்டிருப்பதைக் காண்பீர். 17*

प्रतिकलमजसूनुसुन्दरीभिः पृथगुपलालितमङ्कमण्डलेषु।
विकचकुवलयद्युतिं विनोदादुपनिषदर्थमुदीक्षितुं यतध्वम्॥ १८

*ஒவ்வொரு நொடியிலும் அஜனின் மகனுன தசரதரின் அழகிய மனைவியரால் தனித் தனியே மடியிலிட்டுக் கொஞ்சி மகிழப் பெற்ற சிசு அது. மலர்ந்த குவளைப் பூவின் ஒளியுள்ளது. உபநிஷத்துக்களின் உட்பொருள். அதனை உற்றுப் பார்க்க முயன்று பார்ப்பீர். 18*

हत्वा चण्डपराक्रमं दशमुखं क्षिप्रं रणप्राङ्गणे
वामं न्यस्य करं शरासशिखरे सव्ये शरं बिभ्रतः।
बन्धस्रंसिजटाभरस्य निटिलव्याकीर्णघर्माम्भसो
देवस्यावतु नस्त्रिभङ्गिललिता धीरोद्धता च स्थितिः॥ १९

*கொடும் பராக்கிரமம் பெற்ற ராவணனைப் போரரங்கில் நொடிப் பொழுதில் கொன்று இடது கையை வில்லின் மீது வைத்து வலது கையில் அம்பை ஏந்தி நிற்கிறுர். சடை முடி அவிழ்ந்து தொங்குகின்றது. நெற்றி முழுவதும் வியர்வை வடிகிறது. தீரனுக வெற்றி பெற்ற பெரு நிலை கொண்டு உடலில் மூன்று வளைவுடன் தேவன் நிற்கிற நிலை நம்மைக் காக்கட்டும். 19*

केनापि कीशभटकोटिनिषेवितेन
मन्दोदरीमधुमदासहमार्गणेन।
जीमूतमेचकरुचा जलजेक्षणेन
वीरेण तुष्टमपि हृष्टमिदं मनो मे॥ २०

*நீர் நிரம்பிய மேகத்தின் ஒளியுடன், தாமரை இதழ் போன்ற கண்களுடன் நிற்கிற ஒரு வீரன். சுற்றி வானரப்படை கோடிக்கணக்கில் சூழ நிற்பவர். மந்தோதரியின் மதுவாலான கிறக்கத்தைப் பொறுக்காத அம்புள்ளவர். அவரால் என் மனம் மகிழ்ச்சியும் நிறைவும் பெற்றுள்ளது. 20*

धाराधीश्वरवंशमण्डयितरि क्रोधोत्पतत्ताडका-
हन्तर्यध्वररक्षितर्यृषिवधूशापन्यपाकर्तरि।
चन्द्रापीडशरासभेत्तरि महीकन्यासमुद्वोढरि
क्रुध्यद्भार्गवदर्पभञ्जरि मनः कुर्यां नृवर्यात्मजे ॥ २१

*பேரரசரின் மகனான ராமனிடம் என் மனத்தைப் பதிப்பேன். அவர் இக்ஷ்வாகு வம்சத்தின் அணிகலன். கோபத்துடன் எதிர்த்த தாடகையைக் கொன்றவர். விசுவாமித்திரரின் யாகத்தைக் காத்தவர், அகலிகையின் சாபத்தை நீக்கியவர், சிவனின் வில்லை ஒடித்தவர், பூமியின் புதல்வியை மணந்தவர், கோபத்துடன் எதிர்த்த பரசுராமரின் செருக்கை அடக்கியவர். 21*

नवकुवलयश्यामे वामेन बिभ्रति पाणिना
धनुषमितरेणाजावाजानसिद्धजयं शरम्।
विहर हृदयेदानीमानीलजूटजटाधरे
विबुधमकुटीहीरे वीरे विराधविरोधिनि ॥ २२

*இதயமே! போர்க்களத்தில் இடது கையால் வில்லையும் வலது கையில் தோன்றியது முதல் வெற்றியையே கண்டு வருகிற அம்பையும் தாங்கிய புதிய குவளைப் பூ போன்ற மேனியர் அவர். கருத்த சடை முடி தரித்தவர். தேவர்களின் கிரீடத்து வைர ரத்தினமானவர். விராதனின் எதிரி, அந்த வீரருடன் இப்போது விளையாடுவாய். 22*

कमपि च पुरुषं कृपाविधेयं
गुहजननीगुणनीयनामधेयम्।
शरविदलितशाम्बरीकुरङ्गं
शरणमुपैति मदीयमन्तरङ्गम् ॥ २३

*என் உள்ளம் ஒரு மாமனிதனைச் சரணடைகிறது. அவர் கருணை சொல்படி நடப்பவர், பார்வதியால் ஜபிக்கப் பெறுகிற*

திருநாமம் உள்ளவர். வஞ்சனை மிக்க மானை (மாரீசனை) அம்பால் பிளந்தவர். 23

सान्द्रं पुष्प्यति चम्पकः कुरबको धत्ते नवान्कोरका-
न्माकन्दः स्तबकान्व्यनक्ति वकुलः पुष्पाणि पुष्णाति च।
झंकुर्वन्ति मधुव्रता विदधते चारुस्वनं कोकिलाः
पश्येति क्षितिकन्यकामनुनयन्दीव्यत्यटव्यां प्रभुः ॥ २४

''அதோ பார்! சம்பகம் நெருக்கத்துடன் பூத்துள்ளது. வாடாமல்லி மொட்டிட்டுள்ளது. ஒட்டுமா காய்களின் கொத்துக்களை வெளிப்படுத்துகிறது. மகிழ மரம் பூக்களை முழுமை பெறச் செய்கிறது. வண்டுகள் ஒலிக்கின்றன. குயில்கள் அழகாகக் கூவுகின்றன'' எனக் காட்டில் ஸீதையை அழைத்துக் கொண்டு பிரபு ராமன் சுற்றி வருகிறார். 24

स्वेनालंकृतपद्मबान्धवकुलां मेनातनूजापते-
र्भङ्क्त्वा चापमवापितां वसुमतीकन्याकराब्जग्रहम्।
कामप्यन्वहमाश्रयेम करुणां कादम्बिनीमेचकां
काकक्रोष्टुकदम्बसात्कृतखरक्रव्यामटव्यां पुरा ॥ २५

அது வடிவெடுத்த கருணை, ஸூரிய குலத்தை அலங்கரிப்பது, மேனையின் பெண்ணான பார்வதியின் மணாளனின் வில்லை ஒடித்து பூமியின் பெண்ணின் கரதலம் பற்றியது. மேகக் குவியல் போன்று கறுத்தது. காட்டில் கரனின் உடல் பகுதிகளை காக்கைகளுக்கும் நரிகளுக்கும் அளித்தது. அதனைத் தினந்தோறும் அண்டி நிற்போம். 25

कल्याणी मतिरद्य काङ्क्षितपरित्राणा रघूणां प्रभुं
सौवर्णत्सरुरच्यमानचलरुच्याक्षेपिकौक्षेयकम्।
मायूरच्छदमेचकच्छविमिलत्पुङ्खस्फुरन्मार्गणं
कंचित्काञ्चनपट्टलाञ्छनबृहत्कोदण्डमाहिण्डते ॥ २६

*என் புத்தி இன்று காப்பாளரை விரும்பி மங்களமாகச் சிந்தித்து, ரகுவம்சத் தலைவரைத் தேடுகிறது. தங்கப்பிடி கொண்ட பளபளக்கிற கத்தியை இடுப்பில் கச்சையில் செருகியுள்ளவர். மயில் தோல் போன்ற வழவழத்த ஒளி மிக்க பிடி கொண்ட பாணமுள்ளவர். தங்கப்பட்ட மடித்த பெரும் வில்லாளர். 26*

वालास्फालितवारणैः करतलव्याकीर्णकण्ठीरवैः
पादाघातचटच्चटायितपतत्प्रोत्तुङ्गपृथ्वीरुहैः ।
गर्जद्भिः कपियूथपैः सह दशग्रीवं विजेतुं व्रजन्
इन्द्धे चेतसि मे समीरतनयस्कन्धेऽधिरूढो विभुः ॥

*அனுமானின் தோளில் ஏறி அமர்ந்த பெருமான் ராவணனை வெல்ல வானரப்படை வீரர்களுடன் செல்பவராக என் உள்ளத்தில் காட்சி தருகிறார். வானர வீரர்கள் வால்களால் எதிரிப் படையிலுள்ள யானைகளின் கன்னங்களில் அடிக்கின்றனர். சிங்கங்களை கைத் தலங்களால் பிளக்கின்றனர். காலடி மிதியால் படபடா என நெடிய மரங்களை வீழ்த்துகின்றனர். 27*

अंसे निषङ्गमवसज्य करारविन्दे
चापं शरं च जनकात्मजया वहन्त्या ।
साकं प्रसूनहरणाय वने चरन्तं
साकेतनाथमनुयाति मनो मदीयम् ॥ २८

*தோளில் அம்புறாத்தூணியைக் கட்டிக் கொண்டு தாமரை போன்ற கையில் அம்பையும் வில்லையும் சுமக்கிற ஜானகியுடன் கூட பூப்பறிக்கக் காட்டில் செல்கிற அயோத்தி அரசனை என் மனம் பின் தொடர்ந்து செல்கிறது. 28*

पुण्ये पञ्चवटीनदीपरिसरे पुष्पावचाये कृते
प्रस्विन्नाननपङ्कजः प्रसृमरश्वासालसालोकनः ।
श्रीखण्डद्रुममूलवर्तिनि शिलापट्टे समन्दानिले
विश्राम्यन्सह सीतया मनसि मे विश्राम्यतीव प्रभुः ॥

புனிதமான பஞ்சவடியில் உள்ள நதிக்கரையில் பூப்பறித்ததும் தாமரை போன்ற முகம் வியர்த்து. பெரு மூச்சுடன் தளர்ந்து காணப்படுபவராக, சந்தன மரத்தின் அடியிலுள்ள கல் தரை மீது இளங்காற்றை அனுபவித்துக் களைப்பாறுகிற பெருமான் ஸீதையுடன் என் உள்ளத்தில் களைப்பாற்றிக் கொள்கிறான் போலும். 29

सेवन्तामितरे शशाङ्कशकलोत्तंसं पुमांसं तथा
वेणूदञ्चितनादवञ्चितलसद्गोपीजनं वा जनाः ।
सेव्यः कश्चन निश्चितो मम जनस्थानाटवीसंकट-
क्रव्याद्योधसहस्रसप्तकयुगच्छेदक्रियासाहसी ।। ३०

மற்றவர் பிறை சூடிய பெருமானையும் புல்லாங்குழலின் மேல் ஸ்தாயி ஒலியால் கோபிகளை மயக்குகிறவருமான கிருஷ்ணனையும் வழிபடட்டும். என் வழிபாட்டிற்குரியவர் எனத் தீர்மானிக்கப் பெற்றவர் ஜனஸ்தானக் காட்டில் பதினான்காயிரம் அரக்க வீரர்களை வெட்டி மாய்த்து ஸாஹஸம் புரிந்த ஒருவரே. 30

चक्रीकृत्य शरासनं धलधलाकुर्वत्सुवर्णाञ्चलं
मुञ्चन्दिक्षु विदिक्षु काञ्चनभृतः पुङ्खानुपुङ्खान्शरान् ।
स्वामी नः खरसेनया निखिलया साकं समीकक्षितौ
कृत्तक्षिप्तभुजाशिरश्चरणया क्रूरं परिक्रीडते ।। ३१

போர்க் களத்தில் வில்லை வட்டமாக வளைத்து அதன் நுனியில் கட்டிய மணிகளை தள தள என ஒலிக்கச் செய்து தங்கப் பூண் போட்ட அம்புகளை ஒன்றன் பின் ஒன்றாக எட்டு திக்குகளிலும் செலுத்தி, கரனின் படை வீரர்களின் கை தலை கால் என ஒவ்வொன்றையும் வெட்டி வீசியபடி அவர்களுடன் குரூரமாக நமது வீரரான ஸ்வாமி விளையாடுகிறார். 31

यस्याः सन्ति कराः सहस्रमपि वा यस्याः सहस्रं दृशः
कृत्वा देवतयोर्द्वयोरपि तयोः स्वस्थौ सुतौ विश्रुते ।

वीरे विश्रवसश्चतुर्ष्वपि सुतेष्वाद्यन्तशेषीक्रिया-
विद्याचुञ्चुशिलीमुखे विहरते वीतक्लमं मे मनः ॥ ३२

ஒரு தேவதைக்கு ஆயிரம் கிரணங்களாகிற கரங்கள். (ஸூரியன்) மற்றொரு தேவதைக்கு ஆயிரம் கண்கள். (இந்திரன்) இவர்களிருவருக்கும் இரு புதல்வர்கள் (ஸுக்ரீவனும் வாலியும்). இவர்களில் முன்னவனையும் விச்ரவஸ்ருஷிக்கு (குபேரன், ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என) நான்கு புதல்வர்களில் முன்னவனை வானிலிட்டும், பின்னவனைத் தன் நிலை பெறச் செய்தும், கடையவனையும் மீதப்படுத்துகிற கலையில் தேர்ந்த பாணமுடைய புகழ்பெற்ற வீரனிடம் என் மனம் தளர்வின்றி விளையாடுகிறது. 32

आक्रान्तं हृदयं दयापरवशस्वान्तेन दान्ते जने
चापज्यापटुघोषभीषितनमत्कल्लोलिनीकामिना।
क्रव्यादेषु कृतान्तकेलिकलनाचातुर्यधुर्येषुणा
केनापि प्लवमानसैनिकपरीवारेण वीरेण मे ॥ ३३

ஒரு வீரனால் என் மனம் சுற்றி வளைக்கப்பட்டுள்ளது. அடக்கமுள்ளவனிடம் தயை மிக்க உள்ளத்துடன் பழகுபவன். நதிகளின் கணவரான ஸமுத்ரராஜனை வில்லின் நாணின் உரத்த ஒலியால் பயந்து வணங்கச் செய்பவன். அரக்கர்களிடம் யமனின் விளையாட்டை நடத்துவதில் தேர்ந்த அம்பு கொண்டவன். எப்போதும் வானில் மிதக்கும் வானரப் படை வீரர் சூழநிற்பவன். 33

प्रच्छायद्रुम ऋश्यमूकशिखरे पार्श्वस्थितेनैकशः
सुग्रीवेण निवेद्यमानजननस्थानप्रभावाह्वयान्।
पश्यन्वानरयूथपानुपगतान्पाथोदनीलाकृति-
र्वीरः सावरजः स भाति हृदि मे विश्वत्रयाधीश्वरः ॥

மேக வண்ணனும் மூவுலகத்தலைவனுமான அந்த வீரன் தம்பியுடன் என் உள்ளத்தில் காட்சி தருகிறான். நிழலடர்ந்த

மரங்கள் சூழ்ந்த ருச்யமூக மலைச் சிகரத்தில் அருகில் நின்று கொண்டிருக்கிற ஸுக்ரீவன் தன் ஆணையால் கூட்டம் கூட்டமாக வருகிற வானரப் படை வீரர்களை அவர்களது பிறப்பு, வாழ்கிற ஊர், செயலாற்றல், திறமை, பெயர் முதலியவற்றை விபரமாக அறிமுகப்படுத்த, அவர்களைப் பார்வையிடுகிறான். 34

कृपारसपयोधिना खरवरूथिनीयोधिना
महामहिमशालिना मुनिहृदब्जकोशालिना ।
मनो मम कृपाणिना शरशरासभृत्पाणिना
जटामकुटधारिणा तरलितं विराधारिणा ॥ ३५

கருணை ரஸக் கடலும் கரனது ஸேனையுடன் போரிடுபவரும் பேராற்றல் பெற்றவரும், முனிவரின் உள்ளத் தாமரையில் வண்டு போன்று சுற்றிவருபவரும், கத்தியை இடுப்பில் கட்டி வில்லும் அம்பும் ஏந்திய கைகளுள்ளவரும், சடைமுடி தரித்தவரும் விராதனின் எதிரியுமான ராமனால் என் மனம் அலை மோதுகிறது. 35

कन्दर्पकोटिशतसुन्दररूपधेयं
कंचित्प्रभुं भुवनमङ्गलनामधेयम् ।
नन्वस्थिरेऽपि हृदये नतिकृद्विधेयं
कुर्मः कुशेशयसुहृत्कुलभागधेयम् ॥ ३६

நூறு கோடி மன்மதர்களுக்கொப்பான வடிவழகு கொண்டவர். உலகிற்கு மங்களம் தருகிற பெயருள்ளவர், வணங்குகிறவருக்கு வசப்படுபவர். ஸூரியவம்சத்துப் புண்யமானவர். அந்தப் பெருமானை தடுமாறும் உள்ளத்திலும் கொள்வோம்.

मौलिविराजन्मणिमयमकुटीमञ्जुनिपातनहृतरिपुगर्वः
सर्वसुपर्वस्तुतिपदसमरप्राङ्गणचंक्रणादिषुगणलीलः ।

भल्लुकमल्लप्लवगवरचमूपाणिपदाहतिविरचितलङ्का-
गोपुरभङ्गः कुतुकयति मनः कोऽपि कुशेशयदयितकुलीनः ॥ ३७

ஸூரிய வம்சத்தைச் சார்ந்த ஒருவர் என் மனத்தில் ஆவலை எழுப்புகிறார். தலையில் ஏந்திய ரத்தின கிரீடத்தைச் சாய்த்து வீழ்த்துவதால் எதிரியின் செருக்கை அடக்குபவர். போர்க் களத்தில் பேரொலி எழுப்புகிற இவரது அம்புக் கூட்டத்தை தேவரனைவரும் துதிப்பர். கரடி வீரர்கள், வானர வீரர்கள் இவர்களின் கால்களின் உதைப்பாலும் கைகளின் அடியாலும் இலங்கையின் கோபுரங்களை வீழ்த்தியவர். 37

वार्षिकपाथोवहरुचिवपुषा वारितवारिधिबहलमदेन
प्रातरुदञ्चत्प्रभकमलदलप्रस्तुतविस्तृतनयनतुलेन ।
निटिलजटालीनिबिडितशिरसा निस्तुलकार्मुकविशिखधरेण
क्रीतमिवान्तःकरणमिदमहो केनचिदाननसुलभकृपेण ॥ ३८

இவரது முகத்திலேயே கருணை வழிந்து எளிதில் கிட்டும். இந்த வீரனால் என் உள்ளம் விலைக்கு வாங்கப்பட்டது போலும், மழை காலத்து மேகம் போன்ற மேனி வண்ணம் கொண்டவர். கடலின் வெளிப்படையாக வழிகிற திமிரை அடக்கியவர். காலையில் மலர்கிற ஒளி மிக்க தாமரை இதழ் போன்று விரிந்த கண்களுள்ளவர், தலையில் அடர்ந்த சடைமுடி உள்ளவர், இணையற்ற அம்பும் வில்லும் கொண்டவர். 38

सुन्दराकृति यत्कबन्धवसुंधरारुहखण्डने
    गन्धसिन्धुरदूर्मिबन्धुरसिन्धुबन्धधुरंधरम् ।
यस्तु निस्तुलमस्तु तद्धृदि शस्त्र शस्तपुलस्त्यभू-
    हस्तमस्तकमास्तिकस्तुतिविस्तरार्हयशस्ततम् ॥ ३९

அந்தப் பரம் பொருள் உள்ளத்தினுள் துலங்கட்டும். இணையற்றது, அழகிய வடிவுள்ளது, கபந்தன் எனும் மரத்தை முறித்துச் சாய்ப்பதில் மதயானை, அலைகளை நெருக்கமாக எழுப்புகிற கடலைக் கட்டுவதில் முனைந்தது, தன் வாளால்

ராவணனின் கைகளையும் தலைகளையும் வேறுபடுத்தியது, ஆஸ்திக மக்களால் பாராட்டப் பெற்ற எங்கும் பரவிய புகழ் உள்ளது. 39

कृत्तराजसमत्तरावणमुत्तराधरयोः समं
दत्तमङ्गलमुत्तमं नृषु चित्तमञ्चति मामकम् ।
तं कुतूहलि संकुचल्लिकुचस्मयक्षितिजाकुच-
द्वन्द्वसंगमलग्नकुङ्कुमपिञ्जरं रघुकुञ्जरम् ।। ४०

ரஜோகுணமும் செருக்கும் மிக்க ராவணனை வெட்டிச் சாய்த்த ரகுகுலத்து யானை அது. மேலானவருக்கும் கீழானவருக்கும் சமமாக மங்களமளிப்பது, மனிதர்களில் மிக மிகச் சிறந்தது, குதூஹலம் நிரம்பியது, எலுமிச்சம் பழத்தின் அழகைச் சுருங்கச் செய்கிற ஸீதையின் மார்பகத்துக் குங்குமப்பூச்சு ஒட்டியதால் மார்பில் சிவந்தது. அதனை என் சித்தம் அணுகுகிறது. 40

कल्पकद्रुमदर्पहृत्पदपङ्कजप्रचलद्रजः
स्पर्शदर्शितगौतमप्रियमेतमप्रतिमं नरम् ।
तुङ्गसंगररङ्गसंगमितप्लवंगमपुंगव-
प्रेरितद्रुमदारितक्षणदाचरं गतिमाचरम् ।। ४१

அந்த இணையற்ற மாமனிதரை நான் பற்றுக் கோடாகக் கொள்கிறேன், கற்பக மரத்தின் செருக்கை அடக்குகிற இவரது திருவடிகளின் தூசிபட்டதும் கௌதமரது விருப்பம் நிறைவேறியது, அகலியை வெளிப்பட்டாள், கடும் போரரங்கில் கூடிய சிறந்த வானரர்கள் எறிந்த மரங்களால் அரக்கர்களை அழித்தவர். 41

ऊर्मिलध्वनिकार्मुकच्छलवार्मुगुज्झितमार्गणा-
सारदुर्बलवीरकर्बुरवारनिर्भरकौतुकैः ।
गृध्रमोदिनि युद्धसीमनि सिद्धचारणकिंनरैः
श्लाघितो हृदि मोघितैनसि राघवो मम भासते ।। ४२

*கழுகுகள் மகிழ்ச்சியடைகிற போரரங்கில் அலையலையாகப் பரவுகிற வில்லொலியாகிய மேகத்தின் அம்புப் பொழிவால் வலிவிழந்த வீரர்களின் வீழ்ச்சியைக் கண்டு கோலாஹலம் செய்கிற ஸித்தர் சாரணர் மற்றும் கின்னரர்களால் பாராட்டப் பெற்ற ராகவன் பாபத்தின் வேகம் மழுங்கியுள்ள என் உள்ளத்தில் துலங்குகிறார். 42*

तापसामरगोपसाहसिचापसायकलाञ्छनः
चारुगोस्तनजानकीस्तनकौतुकी स्तनयित्नुभाः ।
क्रुध्यदापतदुद्यतायुधविध्यदन्तककिंकरे
कश्चिदेव हि निश्चितो मम पश्चिमेऽहनि रक्षिता ।। ४३

*தவமியற்றுபவரையும் தேவர்களையும் காப்பதில் தீரர் என்பதன் அடையாளமாக வில்லையும் அம்பையும் ஏந்தியவர். அழகிய பசுவின் மடிபோன்ற ஜானகியின் மார்பகத்தில் ஆர்வமிக்கவர், மின்னல் போன்ற ஒளியுள்ளவர், கடும் கோபத்துடன் ஆயுதம் ஏந்தி மேலே விழுந்து யம கிங்கரர்கள் தாக்கும் அந்த இறுதி நாளில் காப்பவர் என ஒருவரைத் தீர்மானித்துள்ளேன்.43*

दिष्ट्या संप्रति मे मनः स्पृहयते दुष्टाशरानीकिनी-
कष्टापादनतुष्टिकृत्कपिचमूश्रीकामिने स्वामिने ।
दूरादस्तसुरार्तये दशमुखध्वंसोन्मिषत्कीर्तये
तत्कालस्थितलोकलोचनसुधावर्तीभवन्मूर्तये ।। ४४

*என் மனம் அதிருஷ்ட வசமாக ஒருவரை மிகவும் விரும்புகிறது. துஷ்டரான அரக்கர் படைக்குக் கஷ்டம் விளைவிப்பதால் மகிழ்விக்கிற வானரர் படையின் வெற்றியை விரும்புபவர், என் உடைமையாளர், தேவர்களின் துயரைத் தூரத்தில் அகற்றுபவர். ராவணனை மாய்த்ததால் உயர்ந்த புகழ் பெற்றவர். ராவண வதத்தின் போது அருகில் இருந்த மக்களின் கண்களுக்கு அமுத தீபமானவர். 44*

कलमकणिशपुञ्जपिञ्जराङ्ग-
    प्लवगकदम्बकरन्धितोपकण्ठम्।
उदयदरुणचन्द्रबिम्बचिह्न-
    प्रभमुपसर्पति मानसं प्रभुं नः ।। ४५

என் மனம் அந்த பிரபுவை நாடுகிறது. நெற் கதிர் போன்ற நிறமுள்ள வானரர் கூட்டத்தால் சூழப்பெற்றவர், உதிக்கின்ற சிவந்த சந்திர பிம்ப ஒளி கொண்டவர். 45

शरहतदशकंधरं धरित्रीदुहितृपयोधरपत्रलेखधुर्यम्।
कमपि नृपकुमारमेकवीरं भजति मनो मम भानुवंशरत्नम्।।

அந்த ராஜகுமாரர் அம்பால் ராவணனை அழித்தவர். ஸீதையின் மார்பகத்தின் மீது சித்திரம் வரைவதில் ஆர்வமுள்ளவர். ஒரே வீரர், ஸூர்ய வம்சத்தின் ரத்தினம். அவரை என் மனம் வழிபடுகிறது. 46

विकचकमलपत्रमित्रनेत्रं विकटजटापटलीभृदुत्तमाङ्गम्।
कपिकुलकलिताब्धिसेतुबन्धं कमपि कबन्धभुजाभिदं भजामः ।।

மலர்ந்த தாமரை இதழ் போன்ற கண்ணுள்ளவர், படியாத சடை வரிசையைத் தலையில் தாங்குபவர், வானரர் கூட்டத்தால் ஸேது அணை கட்டியவர், கபந்தனின் தோளை வெட்டியகற்றியவர், அந்த ஒருவரை வழிபடுகிறேன். 47

आकाशमध्यगतनाकालयप्रकरशोकापनोदनजय-
श्रीकामवानरसमीकावपातितमहाकायराक्षसकुलम्।
राकामृगाङ्कमधुराकारवक्त्रमगनीकाशकार्मुकधरं
काकापराधसहमाकारयामि हृदि लोकाधिपं रघुपतिम्।। ४८

உலகத் தலைவரான ரகுபதியை இதயத்தில் உருவகப்படுத்துகிறேன். வானின் நடுவே உள்ள ஸ்வர்கத்தில் வசிப்பவரின் துயரத்தை நீக்குவதில் வெற்றியை விரும்புகிற வானரர் இட்ட போரில் ராக்ஷஸக் கூட்டத்தையே வீழ்த்தியவர்,

பௌர்ணமி சந்திரன் போன்ற அழகிய முகமுள்ளவர், மலை போன்ற வில் ஏந்தியவர், காக்கையின் குற்றத்தைப் பொறுத்துக் கொண்டவர். 48

वन्दारुहृष्यदरविन्दासनप्रभृतिबृन्दारकव्रजशिरः-
संदानिताभिनवमन्दारदाममकरन्दाभिषिक्तचरणम्।
तं दाशरथ्यभिहितं दानवारिमृषिबृन्दाय मोक्षपदवी-
संदायिनं भजति मन्दापि मे मतिरियं दाशकीशसुलभम्॥ ४९

வணங்கி மகிழ்கிற பிரும்மா முதலிய தேவர்களின் தலையில் சூடப்பட்ட புதிய மந்தார மாலையின் மகரந்தப் பொடியால் நீராட்டப் பெற்ற திருவடிகள் உள்ளவர். தாசரதி (தசரதர் மகன்) என்று புகழப் பெறுபவர். அஸுரர்களின் எதிரி, ருஷிகள் கூட்டத்திற்கு மோக்ஷம் தருபவர். வேடனுக்கும் வானரனுக்கும் எளிதில் கிட்டுபவர், அவரை மந்தமான என் புத்தியும் வழிபடுகிறது. 49

सुत्रामपावकपवित्रादिदेवजनवित्रासनक्षमभुजा-
मित्रातिघोरदशवक्त्रावखण्डनजचित्रावदातयशसि।
सत्रा शरेण धनुरत्रासुपञ्चकममित्रावलेर्दधति मे
कुत्रापि धामनि पवित्राभिधेऽनुषजति त्राणलिप्सु हृदयम्॥ ५०

இந்திரன் அக்கினி வாயு முதலிய தேவரினத்தைப் பயமுறுத்துகிற தோள் வலிவு கொண்ட எதிரியான மிகவும் பயமூட்டுபவனான ராவணனை வெட்டி வீழ்த்திப் பெரும் புகழ் கொண்டவர், அழிக்கின்ற பாணத்தால் எதிரிக் கூட்டத்தின் ஐந்து பிராணன்களையும் கொணர்பவர். தூய்மை மிக்க அந்த பேரருளாளனிடம் காப்பைப் பெற விரும்பி என் இதயம் ஒட்டிக் கொள்கிறது. 50

तीराचलोदरविसारानुनादितगुणारावभैरवधनुः-
दूरापविद्धशरधारानिपातहतनीराकरस्मयभरम्।

आराधनीयमखिलैरादियोगिभिरुदारानुकम्पमधुना
धीरादरेण मम वीराग्रगण्यमयते राघवान्वयमणिम् ।। ५१

*கடற்கரையில் உள்ள மலைகளை நடுவே பிளக்கச் செய்கிற எதிரொலி கொண்ட நாணொளியால் அச்சமூட்டுகிற வில்லால் தூரத்தில் வீசப்பட்ட அம்பு மழை வீழ்ச்சியால் கடலரசனின் செருக்கை அடக்கியவர், ஆதியோகிகள் அனைவராலும் வழிபடத்தக்கவர். வள்ளலான கருணையுள்ளவர், ரகு குலத்து ரத்தினம், வீரர்களில் முதலில் குறிப்பிடப் பெறுபவர், அவரிடம் என் புத்தி பணிவுன்புடன் சென்று நிறைவு பெறுகிறது. 51*

भूतावसादिति रणे तादृशि च्युततनौ ताडिते दशमुखे
गीतापदानमुपयाता सुरैः सह विनीताशयेन विधिना ।
सीताविहारसखमातातमाविधि च मे तावदन्वयभुवां
नेतारमेव भजते तापमुज्झितुमुदीतादरं मन इदम् ।। ५२

*உயிரினத்தையே அழித்த அத்தகைய (ராம-ராவண)ப் போரில் அடிபட்டு ராவணன் உயிரிழந்ததும் தேவர்களுடன் பணிவு மிக்க பிரும்மாவால் புகழப் பெற்றவர், ஸீதையின் கேளிக்கைகளில் உரிய துணைவன், என் தந்தையிலிருந்து பிரும்மா வரை என் வம்சத்தில் தோன்றியவருக்குத் தலைவர், பரிவு மிக்கவர், இந்த மனம் தாபம் நீங்க அவரை வழிபடுகிறது. 52*

पश्यन्तः शबरार्भकाः शुकगणभ्रान्त्या जिघृक्षन्ति यां
सारङ्गाश्च नवोन्मिषत्तृणधिया संरुन्धते चर्वितुम् ।
दूरादेव पलायते फणिकुलं बर्हभ्रमाद्बर्हिणां
सैषा पञ्चवटीजुषो रघुपतेः शोभा पुरो भाति मे ।। ५३

*பஞ்சவடியில் வசித்த ரகுபதியின் சோபை (ஒளிவட்டம்) என் முன் காணப் பெறுகிறது. அதனைக் கண்ட வேடச் சிறுவர்கள் கிளிக் கூட்டம் எனக் கருதிப் பிடிக்க*

முனைகின்றனர். மான்கள் புதிதாக முளைத்த புல் எனக் கருதி மென்று விழுங்க அதன் பாதையைத் தடுக்கின்றன, மயிலின் தோகை என மிரண்டு பாம்புகள் ஓடி அப்பால் செல்கின்றன.

अस्तामीलनमक्षिनीलनलिनव्यूहेन देहेऽर्चितः
शङ्कातङ्कविवर्जितेन शबरस्त्रीणां मृगीणामिव।
वीरश्चेतसि विश्लथीकृतखरोच्छ्रायो महायोगिनां
वन्द्यः पञ्चवटीवनान्तरकुटीवासी ममासीदति॥ ५४

யோகிகளின் வணக்கத்திற்குரியவரும் பஞ்சவடிக் காட்டினிடையே உள்ள குடிலில் வசிப்பவருமான வீரராமன் என் மனத்தில் வந்தமர்கிறான். வேடப் பெண்களாலும் பெண் மான்களாலும் ஐயமும் கவலையுமின்றி கண் மூடாமல் தம் கண்களாகிய நீல அல்லிக் குவியலால் உடல் மீது அர்ச்சனை செய்யப் பெற்றவன் அவன். 54

पाण्योः कार्मुकमाशुगं च शिरसि श्यामं जटामण्डलं
कट्यां चीरमुदारमंसफलके तूणीरमाबिभ्रतम्।
शाणोल्लीढहरिन्मणिस्मयहरच्छायं कृपायन्त्रितं
भूमानं कमपि स्मरन्मरतकश्यामायते मे मनः॥ ५५

கைகளில் வில்லும் அம்பும், தலையில் கருத்த சடை முடியும், இடுப்பில் மரவுரியும், தோளில் பெரிய அம்புறுத்தூணியும் ஏந்தியவர், சாணை பிடிக்கப் பெற்ற மரகதப் பச்சை ரத்தினத்தின் சாயல் கொண்டவர், கருணைக்கு அடங்கியவர், அந்தப் பெருமானை நினைவிற்கொண்ட என் மனம் தானும் மரகதம் போல் பச்சை நிறம் கொள்கிறது. 55

अधिरोहतीव हृदयं ममाधुना युधि रोषपातितविभीषणाग्रजः।
स्मरचारुतामदहरस्तनुश्रिया शरचापलाञ्छितकराम्बुजः प्रभुः॥

போரில் கோபத்தால் விபீஷணனின் அண்ணனை வீழ்த்தியவர், உடல் வனப்பால், மன்மதனின் அழகுச் செருக்கை அகற்றியவர், வில்லாலும் அம்பாலும்

அடையாளமிடப்பட்ட கைகளுள்ளவர், அந்தப் பெருமான் இப்போது என் இதயத்தினுள் ஏறி அமர்கிறார் போலும். 56

अवसानहीनभवसागरान्तरे पतितः परेतपतितस्त्रसन्नहम् ।
शरणीकरोमि धरणीकुमारिकादयितं दयावलयितं दृगञ्चले ।। ५७

முடிவற்ற ஸம்ஸாரக் கடலின் நடுவே விழுந்த நான் யமனிடம் பயந்து கண்ணோரத்தில் கருணைக்கு வசப்பட்ட ஸீதையின் மணாளனைச் சரணடைகிறேன். 57

किमनेन मेऽन्यनमनेन लभ्यते लघुना यदस्मि रघुनायकं भजन् ।
कुरुते जनः किमुरुतेजसार्जिते कनकाञ्चले क्वचन काचमार्गणम् ।।

எளிதில் ரகுநாதனை வழிபட்டுப் பெறுவதை வேறொரு தைவத்தை வணங்குவதால் பெற இயலுமா ? கஷ்டப்பட்டு பெற்ற தங்க மலையில் எங்காவது கண்ணாடியைத் தேடுவாரா ?

मनुराजवंशजनुराजवंगवच्छिदुरोऽसदाननदुरासदाभिधः ।
महता शरेण स हताशरेश्वरः कृपयातिमात्रमुपयाति मानसम् ।।

மனு ராஜனின் வம்சத்தில் தோன்றியவர், சிவனது வில்லை முறித்தவர், கெட்டப் பேச்சாளருக்கு எளிதில் கிட்டாத நாமம் உள்ளவர், பெரும் அம்பால் அரக்கரரசனை அழித்தவர், அவர் கருணையால் என் மனம் நோக்கி மிக அருகில் வந்துள்ளார். 59

एकवारमपि नाकवासिषु विवेकवानधिकमेकको
धावता न घटतेऽवतारयितुमेव तादृशि कृपां मयि ।
एहि मान्यगुण पाहि मामिति ततोऽहिमांशुकुलशेखरं
चेतसाऽवृणि निशातसायकविधूत सागरमदं प्रभुम् ।। ६०

ஸ்வர்கத்தில் வசிப்பவர்களில் பகுத்தறிவுள்ளவர் ஒருவர் இருக்கலாம். ஆனால் (பயத்தால்) ஓடிக் கொண்டேயிருக்கிற அவருக்கு என் மீது கருணையை இறக்குவதற்கு இயலவில்லை. ''பெருமதிப்புக்குரிய சிறப்புள்ளவரே ! வருவீர் ! என்னைக்

*காப்பீர்'' எனத் தன் கூர்மிக்க அம்பால் கடலின் செருக்கை அடக்கிய பெருமானிடம் மனத்தால் வேண்டினேன். அவர் சூரிய குலத்தின் சூடாமணியாயுள்ளவர். 60*

भैरवाहवविहारवानरचमूरवाकलितराक्षस-
त्रासना गिरिसुतासनाथपुरशासनादृतनिजाभिधा।
घोरदानवशरीरदारणविशारदाशुगधनुर्धरा
भावना परिजनावनानुगुणसेवना मनसि भाति मे ॥ ६१

*பயங்கரமான போரில் விளையாடுகிற வானர ஸேனையின் பேரொலியால் அரக்கர்களை நடுங்கச் செய்ததும், பார்வதியின் நாதனால் நல்லதென ஏற்கப்பட்ட திருநாமம் உள்ளதும், கொடும் அரக்கர்களின் உடலைப் பிளப்பதில் தேர்ந்த அம்பையும் வில்லையும் ஏந்தியதும் தனது பரிவாரமாகிய மக்களைக் காப்பதற்கேற்ற வழிபாட்டு முறை கொண்டதுமான ஓர் உள்ளத்து உருவகம் என் மனத்தில் துலங்குகிறது. 61*

न क्षिणोति खलशिक्षणोऽतिममदक्षिणोदधिमवज्ञया
जोषमास्थितमशेषमान्यगतिरेष मार्गणगणः कथम्।
इत्यमुं मथितुमत्यमुञ्चदिह नित्यमुञ्छितरिपूनिषून्
यस्तमालिखति नस्तमालरुचिमस्तमायिकमृगं मनः॥

*துஷ்டரைச் சிக்ஷிக்கிற இவரது கோரிக்கையை ஏற்காமல் மௌனமாக இருக்கிற மமதை மிக்க தென் கடலை எல்லோராலும் மதிக்கப் பெற்ற ஆற்றலுள்ள ராமனது அம்புக் கூட்டம் இதனைப் பொருட்படுத்த வேண்டாம் என்ற எண்ணத்தால் அழிக்க வில்லையோ ? எதிரிகளை முழுவதும் அழிக்கிற அம்புகளைக் கடலைக் கடைவதற்கே ஏவினரோ ? பச்சிலை வண்ணமுள்ளவரும் மாயமானை அழித்தவருமான அந்த ராமனை என் மனம் சித்திரமாக வரைகிறது. 62*

गीर्वाणैरिव कविभिः कृताभिमुख्ये
नित्यं च क्षितिसुतया निबद्धसख्ये।

मच्चेतः सरति मनुप्रसूतिमुख्ये
    मैनाकस्वसृमहनीयमङ्गलाख्ये ॥ ६३

*தேவர்களைப் போல் கவிகளாலும் வரவேற்கப்பட்டவர். ஸீதையிடம் எப்போதும் அன்பு பூண்டவர். மனு வம்சத்தில் முக்கியமானவர். மைனாகத்தின் ஸகோதரியான பார்வதியால் பெருமையுடன் ஜபிக்கப் பெறுகிற திருநாமமுள்ளவர். அவரிடம் என் மனம் நெருங்குகிறது. 63*

किं ब्रूमहे तत इतोऽपि गवेषणाया-
    मालम्बनं क्वचिदपि त्रिजगत्यलब्ध्वा ।
हन्त द्रुतं पतति मामकमन्तरङ्गं
    काकुत्स्थनामनि गभीरकृपाम्बुराशौ ॥ ६४

*என்ன சொல்வோம் ? அங்குமிங்கும் தேடிய பிறகும் மூவுலகிலும் ஒரு பிடிப்பைப் பெறுமல், என் உள்ளம், ஆழமிக்க கருணைக் கடலும் காகுத்ஸ்தன் என்ற பெயருள்ளவருமான ராமரிடம் விரைவுடன் விழுகிறது. 64*

कादम्बिनीनिभरुचा कमलेक्षणेन
    कात्यायनीकमनकार्मुकभञ्जनेन ।
केनापि कीलितपयोनिधिना गृहीतं
    चित्तं तथापि मम चिन्तयते न किंचित् ॥ ६५

*மேக வரிசை போன்ற நிறம் கொண்டவரும், தாமரைக் கண்ணரும், சிவனது வில்லை ஒடித்தவரும், கடலை அடக்கியவருமான ஒருவரால் என் சித்தம் சிறை பிடிக்கப்பட்டுள்ளது. அப்போதும் அது வேறொன்றை நினைக்கவில்லை. 65*

नक्तंचरेन्द्रजयनन्दितविष्टपेन
    नालीकिनीरमणवंशनवाङ्कुरेण ।

नाथेन बद्धमपिनद्धनदीश्वरेण
नन्वद्य मानसमिदं मम नानटीति ।। ६६

*அரக்கரரசனை வென்றதால் மூவுலகமும் மகிழ்ச்சி பெறச் செய்தவரும் ஸூரிய வம்சத்தின் புதுமுளையானவரும், நதிகளின் தலைவனான கடலைக் கட்டியவருமான என் நாதனால் கட்டுப்பட்ட என் மனம் இன்று கூத்தாடுகிறது. 66*

दशग्रीवोदग्रस्मयदलनकेलीचणशरः
शरीरश्रीनिर्वापितहरितदूर्वारुचिमदः ।
स कश्चिन्निश्चिन्तः प्रविशति कठोरेऽपि हृदि मे
दृषद्रूक्षारण्यभ्रमणकृतशिक्षाबल इव ।। ६७

*ராவணனின் அளவுக்கு மீறிய செருக்கை அடக்குவதில் விளையாட்டாக ஈடுபட்ட அம்பு கொண்டவர், உடலழகால் பசும் அருகம் புல்லின் ஒளியின் திமிரை அணைத்தவர், அத்தகைய ஒருவர் கவலையின்றி கடினமான என் உள்ளத்தினுள், பாறைகளால் சுரசுரப்புற்ற காட்டில் நடந்து பழகியவர் போல் நுழைகிறார். 67*

भ्रान्त्वा दिक्षु विदिक्षु दुर्लभसुखोपायं मदीयं मनो
दिष्ट्या धावति देवताः परिहरद्दीनानुकम्पोज्झिताः ।
प्राप्ते साप्तपदीनतां करुणया दाशेन कीशेन वा
नन्दिग्रामकृताधिपत्यचरणत्राणे पुराणे नरे ।। ६८

*எட்டு திக்குகளிலும் அலைந்தும் ஸுகத்திற்கான உபாயம் கிட்டாததால் என் மனம் எளியவரிடம் பரிவு காட்டாத தேவர்களைத் தவிர்த்து விட்டது. வேடனும் (குஹனும்) வானரனும் ஏழடி கூட நடந்து அவரது கருணையால் அவரது நட்பைப் பெற்றதைக் கண்டு நந்தி கிராமத்தின் தன் பாதுகைகளுக்கே அரசாட்சியை அளித்த அந்த புராண புருஷரிடம் என் மனம் சென்றடைகிறது. 68*

उत्प्लुत्य व्रजतां स्फुटभ्रुकुटिकं हुंकारमातन्वतां

बालाग्राणि विधून्वतां किलिकिलाकोलाहलं कुर्वताम्।

योधानामरविन्दकेसररुचां मध्ये तमध्येति मे

चेतश्चापशिलीमुखोज्ज्वलकराम्भोजं रघूणां प्रभुम्॥ ६९

*தாமரைக் கோது போன்ற நிறம் கொண்ட படைவீரர்கள் குதித்தோடுகின்றனர். புருவ நெரிப்புடன் ஹூம் என கர்ஜிக்கின்றனர். வால்களின் நுனிகளை உதறி ஆட்டுகின்றனர். கிலி கிலா என சத்தமிட்டுக் கோலாஹலம் புரிகின்றனர். அவர்களிடையே வில்லும் அம்பும் ஏந்தி ஒளிர்கிற தாமரை போன்ற கைகளையுடைய ரகு குலத்துப் பெருமானிடம் என் மனம் செல்கிறது. 69*

प्रायेण चेतसि मम प्रणयेन वस्तु-

मस्मत्प्रभुः समुपसर्पति पुष्पकेण।

चण्डोन्मिषत्किलिकिलाश्चलदीर्घपुच्छा

यच्छादयन्ति गगनं गणशः प्लवंगाः॥ ७०

*என் மனத்தினுள் குடிபுகப் பெரும்பாலும் புஷ்பகத்திலேறி எங்கள் பெருமான் நெருங்கி வருகிறார் போலும். கிலி கிலா என உரக்கக் கூவி நீண்ட வாலை ஆட்டிக் கொண்டு கூட்டம் கூட்டமாக வானரர்கள் வானத்தை மறைக்கிறார்களே! 70*

कोऽयं विकर्षति मनो मम कुञ्जरेन्द्रो

नालीकनालमिव नन्वयमेव जाने।

रक्षोधिराजरमणीहृदयार्पिताग्नि-

रक्षौहिणीशतपतिः कपिभल्लुकानाम्॥ ७१

*யாரோ ஒரு சிறந்த யானை போன்றவர் என் மனத்தைத் தாமரைக் கொடியை வலிய இழுப்பது போல் இழுக்கிறாரே! ஆம்! புரிகிறது! ராக்ஷஸ ராஜனின் மனைவிகளின் இதயத்தில்*

நெருப்பை அள்ளிக் கொட்டியவரும் வானரர்கள் மற்றும் கரடிகளின் பெரும்படைத் தலைவருமான ராமரே அவர். 71

भल्लूकप्रकरेण जङ्गममषीपाषाणखण्डत्विषा
गोलाङ्गूलकदम्बकेन वदने नीलाञ्चितश्मश्रुणा।
पक्वोदुम्बरपाटलेन च कपिव्यूहेन नीरन्ध्रया
वाहिन्या सह वर्तते हृदि स मे स्तोकेऽपि लोकेश्वरः ।। ७२

நடமாடுகிற கருங்கல் துண்டு போன்ற மேனி கொண்ட கரடிக் கூட்டத்தாலும் முகத்தில் நீலநிற மீசை கொண்ட பசுவால் குரங்குக் கூட்டத்தாலும் பழுத்த அத்திப் பழம் போன்று சிவந்த வானரர்களின் கூட்டத்தாலும் இடைவெளியற்று நெருக்கமுற்ற படையுடன் என் உலகத்தலைவர் என் சிறு உள்ளத்தினுள் உள்ளார். 72

स्वच्छन्दं कपिभिर्विहृत्य सुतरामाश्लिष्य दिव्यान्मुनी-
न्दिक्पालेष्ववतीर्य मन्दमितरान्देवानतीत्याञ्जसा।
दीनं दूरत एव साध्वसवशात्तिष्ठन्तमेतीव मां
देवस्य क्षणदाचरेन्द्रजयिनो दृष्टिर्दयाशीतला ।। ७३

அரக்கரரசனை வென்ற தேவனின், தயையால் நனைந்த பார்வை, பயந்து தூரத்தில் ஒதுங்கி நின்ற என் மீது படர்கிறது போலும். அப்போது அவர் விருப்பப்படி வானரர்களுடன் விளையாடி, தேவர்களையும் முனிவர்களையும் நன்கு கட்டியணைத்து, மற்ற தேவர்களிடமிருந்து விரைவுடன் விலகி மெள்ள திக்பாலகர்களிடம் இறங்கி அது வந்துள்ளது. 73

वेदान्तविभ्रमवने विहितप्रचारः
काकुत्स्थवंशमवतीर्य कदापि खेलन्।
वाल्मीकिवाङ्निकरवागुरया गृहीतो
हृत्पञ्जरं व्रजति कश्चिदयं शुको मे ।। ७४

வேதத்தின் முடிவான உபநிஷத்தாகிய விளையாட்டுக் காட்டில் விளையாடிய பின் காகுஸ்த வம்சத்தில் ஒரு சமயம்

இறங்கி (பிறந்து) விளையாடிப் பின் வால்மீகியின் வாக்காகிய தூண்டிலில் பிடிபட்ட இந்தக் கிளி ஒன்று மெள்ள என் உள்ளமாகிய கூண்டை அடைந்தது. 74

दशकण्ठकलत्रकण्ठरिक्तीकृतिधौरेयशरे क्वचिन्नरेन्द्रे।
कलहंस इव स्फुटेऽरविन्दे कलयत्येष कुतूहलं ममात्मा ।। ७५

ராவணனின் மனைவியரின் கழுத்து வெறுமை பெறத் தாக்குவதில் தேர்ந்த அம்புகொண்ட மாமனிதனிடம், மலர்ந்த தாமரையில் அன்னத்தைப் போல், என் உள்ளம் ஆர்வம் காட்டுகிறது. 75

विषयेषु विहारि निर्विशङ्कं
हृदयं मे हृतवानलीव कीटम्।
विभुरेष विदेहराजकन्या-
कुचकुम्भच्युतकुङ्कुमारुणाङ्गः ।। ७६

வைதேஹியின் மார்பகத்திலிருந்து நழுவிய குங்குமப் பூச்சாந்தால் சிவந்த மேனியரான பெருமான், வெளிப் பொருளை நாடிக் கவலையற்றுச் சுற்றி வந்த என் உள்ளத்தைப் புழுவை வண்டு பிடிப்பது போல் பிடித்துக் கொண்டான். 76

अयि मन्मथ कोप लोभमोहौ
मद मात्सर्य वृथायमुद्यमो वः ।
शरणं कुरुते यतो मनो मे
शरकृत्ताशरनायकं प्रभुं तम्।। ७७

மன்மதனே! (காமமே!) கோபமே! லோபமே! மோகமே! மதமே! மாத்ஸர்யமே! உங்கள் முயற்சி வீணே! அம்பால் அரக்கனை வென்ற பெருமானை என் மனம் சரணடைந்து விட்டது. 77

पश्याञ्चितापमचिरोज्झितपञ्चबाण-
विद्यापुनर्गणनदायिपदारविन्दे।

देवे मनश्चरति चन्द्रकलापचाप-
द्वैतोपदेशविधिदेशिकबाहुदण्डे ।। ७८

*சிறிது காலம் முன்பாகக் கை விட்ட மன்மத வித்யைக்கு மறு மதிப்பு தருகிற திருவடித் தாமரைகள் உள்ளவரும், சிவனது வில்லே இரண்டாக்க வழிமுறையைக் கிட்ட இருந்து காட்டிய கைகள் உள்ளவருமான தேவனிடம் மனம் சென்று கொண்டிருக்கிறது. கால்களின் சூட்டைப்பார்! 78*

देवतान्तरमपास्य जन्मितादावतान्तजनमुक्तिदायिनम् ।
जानकीशमवलम्बते दयास्थानकीशनिवहं मनो मम ।। ७९

*மற்ற தேவர்களைப் புறக்கணித்து விட்டு, மறுபிறப்பாகிய காட்டுத் தீயில் வாடிய மக்களுக்கு முக்தி அளிக்கிறவரும் தயைக்கு வானரக் கூட்டத்தைத் தகுதியுள்ளதாக்கியவருமான ஜானகீபதியை என் மனம் பிடித்துக் கொண்டுள்ளது. 79*

वारिधिस्मयनिरोधिसायके
वासराधिपतिवंशनायके ।
भक्तलोकभरणक्षमाशये
भद्रकाङ्क्षि हृदयं निवेशये ।। ८०

*கடலின் செருக்கைத் தடுத்த அம்புள்ளவரும், சூரிய வம்சத்தின் நாயகரும், பக்தர் கூட்டத்தை ரக்ஷிக்கிற திறமையுள்ளவருமான ராமனிடம் என் உள்ளத்தை நன்மையை நாடி காப்பாக வைக்கிறேன். 80*

तिष्ठन्साकमनेकवानरभटैस्तीरेऽम्बुधेरुत्तरे
देवश्चेतसि भाति मे कुटिलितभ्रूवल्लि दत्तेक्षणः ।
आगच्छत्यपगच्छति व्यतिषजत्युज्जृम्भमाणे पत-
त्याविध्यत्यभिगर्जति प्रतिमुहुः कल्लोलजाले पुरः ।।

*தன் எதிரில் அலைவரிசை நெருங்குவதையும் அகலுவதையும் மோதுவதையும் எழும்புவதையும் வீழ்வதையும் அடிப்பதையும் பேரொலி எழுப்புவதையும் மீண்டும் மீண்டும் புருவ நெரிப்புடன் கடலின் வடகரையில் பல வானரர்களுடன் காண்கின்ற ராமன் என் மனத்தில் காட்சி தருகிறார். 81*

उत्सर्पज्जलसर्पजालकमुपागच्छद्दुलीकच्छपं
वल्गत्कर्कटशङ्खसंघमुदयत्कुम्भीरडिम्भोत्करम् ।
उद्धूताण्डजषण्डमुच्चनिनदप्रारम्भमम्भोनिधिं
लक्षीकुर्वति वर्वृतीति मम धीरक्षीणसारे प्रभौ ।। ८२

*தண்ணீர் பாம்புகள் மேலெழ, சிறிதும் பெரிதுமான ஆமைகள் அருகில் வர, நண்டும் சங்குப் பூச்சியும் குதித் தோட, சுறா மீன் குட்டிகள் வெளிப்பட, பறவைகள் வானில் பறக்க, பேரொலியுடன் முழங்குகிற கடலைக் கூர்ந்து பார்க்கிறவரும் வலிவு குன்றாதவருமான பெருமானிடம் என் மனம் ஆழ்ந்து பதிகிறது. 82*

गङ्गादिमेन तटिनीगृहिणीशतेन
साकं कृताञ्जलिपुटं शरणं वृणानम् ।
वैदूर्यवर्णतनुमर्णवमन्वगृह्णा-
दीनैक बन्धुरहिमद्युतिवंशदीपः ।। ८३

*கங்கை முதலிய நூற்றுக்கணக்கான மனைவியருடன் கை கூப்பி அடைக்கலம் வேண்டி நிற்கிற வைடூர்ய நிறத்திலுள்ள ஸமுத்திரத்தை எளியவருக்கு ஒரே உறவினரும் ஸூர்ய வம்சத்தின் தீப ஒளியுமான ராமன் அருள்பாலித்தார். 83*

द्रागुन्मूलितनीतशैलशिखरप्रक्षेपशीर्णध्वन-
त्कल्लोलोत्पतदम्बुशीकरकुलक्लिन्नैः प्लवंगव्रजैः ।
नीरन्ध्रीकृततीरसैकततले नीराकरे कौतुक-
न्यस्ताक्षो हृदि भाति मे धृतधनुर्बाणो रघूणां प्रभुः ।।

முன்னதாக வேருடன் பிடுங்கப்பட்டு, கரையருகே எடுத்துச் செல்லப்பட்ட மலை முகடுகளை எறிவதால் சிதறி முழங்குகிற அலைகளிலிருந்து கிளம்பிய நீர்த் திவிலைகளால் நனைந்த வானரர் கூட்டத்தால் நெருக்கப்பட்ட மணல் தரைப் பகுதி கொண்ட கடலின் மீது வைத்த கண்களுடன் வில்லும் அம்பும் ஏந்திய ரகு குலத்துப் பெருமான் என் உள்ளத்தில் துலங்குகிறார். 84

खेयाम्भांसि मुखैः पिबाम चरणैर्मथ्नाम सालं गृहा-
न्प्लोषाम ज्वलनेन विभ्रमवनान्युत्पाटयामौजसा।
रक्षांसि प्रहराम पाणिभिरिति व्याहारिभिर्वानरै-
र्लङ्कां रोधयति स्म राघवकुलालंकारभूतः प्रभुः ॥ ८५

''வானத்து நீரை வாயால் பருகுவோம் ! அரணைக் கால்களால் மிதித்துத் தூளாக்குவோம் ! வீடுகளைக் கொளுத்துவோம் ! உல்லாஸத் தோட்டங்களை வலிவுடன் பிடுங்கி அழிப்போம் ! அரக்கர்களைக் கைகளால் அடித்து அழிப்போம் ! என்று உரக்க முழங்குகிற வானரர்களுடன் ரகு குலத்தின் அலங்காரமான பெருமான் இலங்கையை முற்றுகையிடுகிறார். 85

मा चेतस्त्वरितं गमः परिसरे देवस्य यद्दूरत-
स्तौ सुग्रीवविभीषणावपि समं सौमित्रिणा तिष्ठतः।
हस्ताग्रापिहितानन्नं हनुमता कर्णे गिरं जल्पता
द्वन्द्वं मन्त्रयते प्लवंगमचमूमध्यस्थितोऽयं प्रभुः ॥ ८६

மனமே ! தேவனின் அருகே வேகமாக அணுகாதே ! ஸுக்ரீவரும் விபீஷணருமே லக்ஷ்மணனுடன் தூரத்தில் நிற்கின்றனர். வானரர் படையின் நடுவே அமர்ந்த பெருமான் கைத் தலத்தால் வாய் பொத்திக் காதினருகே ரஹஸ்யம் பேசுகிற ஹனுமானுடன் ஏதோ மந்திராலோசனை புரிகிறார். 86

पामरसार्थदुरापं तामरसार्धनपदाक्षिसौलभ्यम्।
मानसमुद्धतमयते दीनसमुद्धरणदक्षिणं रामम्॥ ८७

*பாமரர் கூட்டத்தால் எளிதில் அணுக முடியாதவரும், தாமரைப் பூவால் திருவடியையும் கண்களையும் எளிதில் அணுக வேண்டப்பட்டவரும், எளியோரைத் தூக்கி விடுவதில் தேர்ந்தவரும் பெருநடை கொண்டவருமான ராமனை உள்ளம் அணுகுகிறது. 87*

पातकराजिहराख्यं शीतकराजिक्षमाननं देवम्।
कुञ्जरयानमुपासे पिञ्जरयानद्धकार्मुकं मौर्व्या॥ ८८

*பெயரால் பாபத்தைப் போக்குபவரும், சந்திரன் பொறுமைப்படுகிற முகமுள்ளவரும், யானை மீது செல்பவரும், மஞ்சள் நிற நாண் கயிற்றால் கட்டப்பட்ட வில்லுள்ள வருமான தேவனை வழிபடுகிறேன். 88*

सुग्रीवेण यवाग्रशोभिकणिशश्रेणीपिशङ्गश्रिया
कालोन्मीलितकर्णिकारकलिकागौरेण सौमित्रिणा।
साकं वानरसैनिकेषु निवसन्सान्द्रानुबद्धातसी-
सच्छायः कुतुकं करोति हृदि मे साकेतपृथ्वीपतिः॥ ८९

*யவைக் கதிரின் நுனியில் உள்ள தானிய மணியை ஒத்த நிறமுள்ள ஸுக்ரீவனுடனும், உரிய காலத்தில் மலர்ந்த கொன்னை மொட்டு போல் மஞ்சள் கலந்த வெண்ணிறம் கொண்ட லக்ஷ்மணனுடனும் வானரர் படையின் நடுவில் அடர்ந்த காயாம்பூ நிறம் கொண்ட ஸாகேத அரசன் உள்ளார். அவர் என் மனத்தில் மகிழ்ச்சியைத் தருகிறார். 89*

संनह्यद्भटकोटिकौणपपुरीसंदर्शने कौतुका-
दारूढेन सुवेलशैलशिखरं श्यामाम्बुवाहश्रिया।
चापं वासवचापचारु दधता शाखामृगानीकिनी-
संबाधान्तिकभूमिना हृतमिव स्वान्तं मम स्वामिना॥ ९०

*கோடிக் கணக்கான படை வீரர் போருக்குத் தயாராகி நிற்கிற அரக்கரின் நகரான இலங்கையைக் காண ஆவல் கொண்டு ஸுவேல மலையின் முகட்டில் ஏறி கருமேக*

ஒளியுடன் வானவில் போன்ற அழகிய வில்லை ஏந்தி வானரர் படை புடை சூழ நிற்கிற என் உடமையாளரான ராமனால் என் உள்ளம் கவர்ந்து செல்லப்பட்டது போலும். 90

आरूढभ्रुकुटीविटङ्कनिटिलामारक्तनेत्राम्बुजां
गाढोन्नद्धजटाभरां कपिचमूकल्याणदानोन्मुखीम्।
बाणानुत्सृजतीं रणे निशिचरप्राणापहारक्षमां
लीलां कामपि चिन्तयामि मनसा नीलाम्बुदश्यामलाम्॥

கார்மேகம் போன்ற மேனியனான ராமனின் வடிவெடுத்த லீலை புருவ நெரிப்பால் குறுகிய நெற்றியுடன், சிறிது சிவந்த தாமரைக் கண்களுடன் இறுக முடித்த சடை முடியுடன் விளங்குகிறது. வானரர் படைக்கு நன்மை அளிப்பதில் முனைந்துள்ளது. அரக்கர் உயிரைக் குடிப்பதில் தேர்ந்த அம்புகளைப் போரில் எய்வது, அதனை நினைவில் கொள்கிறேன். 91

प्रसर्पदनुपप्लवप्लवगसैनिकप्रेक्षण-
क्षणप्रहृतनैर्ऋत द्रुतगृहीतधूतायुधे।
रणे पटुरणद्गुणप्रहितबाणबाणासन-
प्रसन्नकरपुष्करे रघुवरे विरूढं मनः॥ ९२

தடையின்றி முன்னேறுகிற வானரர் படையைக் காண்கிற நொடியில் ஆயுதம் வீசுகிற அரக்கர் மீது வேகத்துடன் ஆயுதமெடுத்து அடிப்பவரும், போரில் திறமையுடன் நாணொலியுடன் பாணத்தை எய்வதில் தெளிவுடன் செயல்படுகிற கைகளுள்ளவருமான ரகுவரனிடம் மனம் வேரூன்றி நிற்கிறது. 92

बाणच्छिन्नविकीर्णरावणशिरःश्रेणीधुरीणीकृते
घोरे संगरचत्वरे क्रतुभुजां यः प्रीतये तत्वरे।
तस्यातस्यसितश्रियः श्रितजनश्रेयस्कृतो धन्विनः
स्मारं स्मारमये क्षिपेम समये दुर्वारसर्वापदः॥ ९३

அம்பால் வெட்டப்பட்டுச் சிதறிய ராவணனின் தலை வரிசையால் மும்முரமடைந்த கோரமான போர்க் களத்தில் தேவர்களின் விருப்பம் நிறைவுற வேகப்பட்ட, நீலமேனியரும் அண்டிய மக்களின் நன்மையைச் செய்பவரும், வில்லாளியுமான ராமனது தொடர்ந்த நினைவால் தடுக்க இயலாதிருந்த ஆபத்துக்களனைத்தையும் களைவோம். 93

नाराचेन समं निशाचरचमूवाराशिकुम्भीभुवा
प्रावृण्मेघमुहूर्तलाञ्छनधनुःप्रख्यं दधानो धनुः ।
लङ्कातङ्कनिदानवानरभटव्रातानपेतान्तिको
वीरः कोऽपि विकर्षतीव हृदयं विष्वक्प्रचारप्रियम् ।। ९४

அரக்கர் படையைக் கடலை அகஸ்தியர் போல் குடித்த அம்போடு கூட பெரு மழை காலத்து வானவில் போன்ற வில்லை ஏந்தியவரும் இலங்கைக்குக் கேடு விளைவிக்கிற வானரர் படையை விட்டு அகலாதவருமான ஒரு வீரர் அங்குமிங்கும் அலைகிற நம் உள்ளத்தை இழுத்துப் பிடிக்கிறார். 94

सालग्राम इवार्कमण्डल इव क्षीराम्बुराशाविव
श्रीवैकुण्ठ इवागमाञ्चल इव प्राचेतसोक्ताविव ।
निर्व्याजेन कृपाभरेण नितरां निर्धूय मोहांहसी
काङ्क्षत्येष ककुत्स्थवंशतिलकः कर्तुं पदं मे हृदि ।। ९५

ஸாலக்ராமத்திலும் சூர்ய மண்டலத்திலும் பாற்கடலிலும், ஸ்ரீ வைகுண்டத்திலும் வேத முடிவிலும் வால்மீகியின் சொற்களிலும் போல், எதிர்பார்ப்பற்ற கனத்த கிருபையால் மோகத்தையும் பாபத்தையும் அகற்றி என் மனத்தினுள் இடம் பெற ககுத்த வம்சதிலகனை ராமன் விரும்புகிறார். 95

निहतवति कबन्धं नीरधौ सेतुबन्धं
विहितवति विचित्रं वीक्षकाणां पवित्रम् ।

जगदुपकृतिनिष्ठे ज्याकिणाङ्कप्रकोष्ठे
    मम हृदयमुदारे मज्जति कापि वीरे ॥ ९६

கபந்தனை மாய்த்தவர், கடலில் பார்ப்பவர்க்கு வியப்பளிப்பதும் தூயதுமான ஸேது அணைகட்டி, உலகிற்கு உதவுவதில் திடமான ஆர்வமுள்ளவர், நாணடிபட்டு வடு கொண்ட மணிக்கட்டுள்ளவர், பெரும் வள்ளலான வீரர், அவரிடம் என் மனம் ஆழப்பதிந்துள்ளது. 96

शरस्फुरदुषर्बुधक्कथितजृम्भदम्भोवह-
    द्बृहत्तरतरङ्गसंकुलितकूलशैलोदरे।
उदन्वति वितन्वति स्तुतिमवक्रिमप्रक्रमः
    क्रमेत हृदि मे तरण्यभिजनप्रदीपः प्रभुः ॥ ९७

அம்பில் வெளியான நெருப்பால் கொதித் தெழுந்த கடலின் பேரலையால் கரையும் அருகிலுள்ள மலையும் நீரிலாழ, கடலரசன் துதி செய்ய, நேர்மை மிக்க வீரம் கொண்டவரும் ஸூர்ய வம்சத்தின் தீபமுமான பெருமான் என் உள்ளத்தில் அடிவைக்கட்டும். 97

जगत्त्रयपवित्रया जनितचित्रचारित्रया
    महीभवकलत्रया महितभानुमत्पुत्रया।
दयारुचिरशीलया दमितताडकाबालया
    कयापि घननीलया कवचितं मनो लीलया ॥ ९८

அடர்ந்த நீலநிறம் கொண்டதொரு லீலா வடிவம். மூவுலகையும் தூய தாக்கியது. வியப்பிற்குரிய வரலாறு படைத்தது. பூமியின் புதல்வியை மனைவியாகக் கொண்டது. ஸூரியன் புதல்வனை ஸுக்ரீவனைப் பெருமைப்படுத்தியது. தயையில் ஆர்வமிக்க பழக்கமுள்ளது, தாடகையை அடக்கியது. அது என்னைக் கவசம் போல் காக்கிறது. 98

निरर्गलधनुर्गुणप्रहितनिर्गलन्मार्गण-
    प्रपञ्चहतवञ्चनासमरचुञ्चुनक्तंचरम्।

चिरत्नमुनिरत्ननत्युचितयत्नमात्मा मम
स्मरत्ययमनत्ययं प्रभुमदित्यपत्यान्वयम्।। ९९

*ஸூரிய வம்சத் தோன்றலான பெருமான் அவர். வஞ்சனையுடன் போர் புரிவதில் தேர்ந்த அரக்கரை தடையின்றி வில்லின் நாணால் எய்யப் பெற்ற அம்புக் கூட்டத்தால் மாய்த்தவர். மிகப் பழைய சிறந்த ருஷிகளின் வணக்கத்துக்குரியவர், என் ஆத்மா அவரை இடைவிடாமல் நினைவில் கொள்கிறது. 99*

बिभ्रत्प्रत्यवपन्नसर्वभुवनश्वःश्रेयसश्रीपुनः
प्रत्युत्थापनविभ्रमैकरसिकौ पाण्योर्धनुःसायकौ।
स्थान्यादेशपदाधिरोपितदशग्रीवेदमेकान्तर-
भ्रातृव्यञ्जितशक्तिरस्तु हृदि मे वीराग्रणी राघवः ।।

*உறுதியுடன் ஏற்கப் பெற்ற உலகின் நன்மையை மறுபடி நிலை பெறச் செய்வதற்கான ஏற்பாட்டை ஆர்வத்துடன் ஏற்ற வில்லும் அம்பும் கைகளில் ஏந்தி ராவணனை அப்புறப்படுத்தி அவனது இரண்டாவது தம்பியைப் பதவியில் ஏறச் செய்வதில் தன் ஆற்றலை வெளிப்படுத்திய வீரர்களின் முன்னோடியான ராகவன் என் உள்ளத்தில் நிலை பெறட்டும். 100*

समीकभुवि चण्डया सरणधूतवेतण्डया
भुजाविजितशुण्डया भुजगभीमकोदण्डया।
प्रतिद्विषमकुण्ठया प्रथमवासवैकुण्ठया
प्रविद्धदशकण्ठया प्रसृतमन्तरुत्कण्ठया।। १०१

*ஒரு பெரும் வேட்கை போர் களத்தில் கோரமாகச் செயல் புரிந்தது. நடையில் யானையை வென்றது. புஜத்தால் துதிக்கையை வென்றது. பாம்பு போன்று சீறும் வில்லுள்ளது. ஒவ்வொரு எதிரியிடமும் முனை மழுங்காதது. முதன் முதலில் வைகுண்டத்தில் குடியிருந்தது. ராவணனைச் சிதைத்தது. அது என் உள்ளத்தில் பரவி நிற்கிறது. 101*

प्रभूतगुणभूषणा प्रबलरक्षसां भीषणा
प्रमोदितविभीषणा प्रदरजाब्धिसंशोषणा।
मखाशिषु कृतावना महदमुक्तसंसेवना
महीदुहितृसेवना मनसि भाति मे भावना॥ १०२

*என் மனத்தில் ஒரு உருவகம் பதிந்துள்ளது. அது சிறப்பு மிக்க குணங்கள் நிறைந்தது. வலிவு மிக்க அரக்கர்களுக்குப் பயமூட்டுவது. விபீஷணனை மகிழச் செய்தது. கடலைப் பிளந்து வற்றச் செய்தது. தேவர்களைக் காத்தது. மஹான்களை இடைவிடாமல் வழிபடச் செய்தது. ஸீதையால் பணிவிடை செய்யப்பட்டது. 102*

दयारसधुरीणया दमिषु दत्तकल्याणया
दरीसदृशतूणया दलितरावणप्राणया।
मलीमसविदूरया मनुकुलोदिताकारया
मनः सुकृतधारया मम हृतं महोदारया॥ १०३

*ஒரு புண்ணியத்தின் இடையறாத தாரையால் என் மனம் கவரப்பட்டது. அது பெரு வள்ளல். தயையின் ஸாரத்தை முன் நிற்கச் செய்வது. அடக்கமுள்ளவருக்கு மேன்மை தருவது, குகை போன்ற அம்புறாத்துணி கொண்டது. ராவணனின் உயிரைப் பறித்தது. அப்பழுக்கற்றது. மனு வம்சத்தில் வடிவெடுத்தது. 103*

कृच्छ्रादन्तः सुरपरिषदः प्राप्य मार्गं प्रविश्य
ब्रह्मर्षीणां गणमथ चलत्कीशसंबाधखिन्नम्।
राजन्ये मे लगति हृदयं क्वापि पृथ्वीकुमारी-
पीनोत्तुङ्गस्तनमकरिकालेखविद्याधुरीणे॥ १०४

*சிரமத்துடன் தேவர் கூட்டத்தில் நுழைந்து பின் பிரும்ம ரிஷிகளின் கூட்டத்தினுள் வாழ்ந்து, பின் வானரர் கூட்டத்தில் அடிபட்ட என் மனம் பூமியின் புதல்வியின் மேடிட்ட*

*மார்பகத்தில் மகரிகைச் சித்திரம் எழுவதில் முனைவு கொண்ட ஓர் அரசனிடம் பதிந்துள்ளது. 104*

निःशब्दस्तिमितप्लवंगमभटश्रेण्यन्तरालस्थली-
विक्रान्ताङ्गदहूतदर्शितविमुक्तैकैकदिक्पालकाम् ।
आस्थानीमवलोकितस्मितशिरःकम्पादिसंवाहनां
संतुष्यत्सकलामरां रघुपतेरन्तश्चिरं चिन्तये ।। १०५

*ரகுபதியின் ஆஸ்தான மண்டபம்; சப்தமின்றி அசைவின்றி நிற்கிற வானரர் படை வரிசையின் நடுவில் பேராற்றல் பெற்ற அங்கதனால் அழைக்கப் பெற்ற திக்பாலகர்கள் வரிசையாக வந்து ராமனை தரிசித்து வெளியேற, புன் சிரிப்புடனும் தலையசைவுடனும் கூடிய பார்வையால் அரங்கப் பணி நிறைவுற, தேவர்களனைவரும் மகிழ, ரகுபதி அதில் காட்சி தருகிறார். அதை நீண்ட நேரம் உள்ளத்தில் உருவகப்படுத்தி மகிழ்கிறேன். 105*

# आदिवराहावतारः

(वायुपुराणे प्रक्रियापादतः)

श्वेतवराहकल्पारंभे सृष्टिप्रक्रिया

## ஸ்ரீ ஆதிவராஹாவதாரம்

(வாயுபுராணம் - பிரக்ரியா பாதத்திலிருந்து)

ஸ்ருஷ்டியின் தொடக்கம்

वाराहरूपवर्णनम्

सूत उवाच—

आपो ह्यग्रेः समभवन्नष्टेऽग्नौ पृथिवीतले।
सान्तरालैकलीनेऽस्मिन्नष्टे स्थावरजङ्गमे ॥ १

एकार्णवे तदा तस्मिन्न प्राज्ञायत किञ्चन।
तदा स भगवान्ब्रह्मा सहस्राक्षः सहस्रपात् ॥ २

सहस्रशीर्षा पुरुषो रुक्मवर्णो ह्यतीन्द्रियः।
ब्रह्मा नारायणाख्यः स सुष्वाप सलिले तदा ॥ ३

सत्त्वोद्रेकात्प्रबुद्धस्तु शून्यं लोकमुदीक्ष्य सः।
इमं चोदाहरन्त्यत्र श्लोकं नारायणं प्रति ॥ ४

आपो नारा वै तनव इत्यपां नाम शुश्रुम।
अप्सु शेते च यत्तस्मात्तेन नारायणः स्मृतः ॥ ५

*ஸூதர் கூறுகிறார் - பிரளயத்தின் இறுதி நிலையில் அசைவதும் அசையாததுமாயிருந்த உலகம் எரிந்து பிரளயாக்னியிலிருந்து தோன்றிய பிரளயக் கடல் நீரில் கரைந்தன. எங்கும் நீர் ஒன்றே மீந்திருந்தது. எரிபொருளற்ற நிலையில் பிரளய அக்னியும் தணிந்து மறைந்தது. எல்லாம் உருவிழந்த நிலை. ஆயிரம் (எண்ணற்ற) கண்களும் ஆயிரம்*

கால்களும் ஆயிரம் தலைகளும் கொண்டு உலகமாகியிருந்த நாராயணன் பிரும்மாவாக சொக்கத் தங்க நிறமேனியாக எவருக்கும் புலப்படாதிருந்தவர் படைக்கவிருக்கிற உலகின் மூலப் பொருளான காரணோதகம் எனும் நீர் பரப்பின் மீது துயில் கொண்டிருந்தார். ரஜஸூம் தமஸூம் அடங்கி சுத்த ஸத்வ நிலை வெளியானதால் தானே விழித் தெழுந்தார். உலகம் சூனியமாயுள்ளதை உணர்ந்தார். உலகின் உயிரினத்தின் (நரனின்) உருவகம் நீர் (நாரம்)ஆக இருந்தது. அதில் தான் மட்டும் உறைந்திருந்த படியால் (அயனம்) தான் நாராயணன் என்று பெயரற்ற தனக்குப் பெயர் வந்ததை உணர்ந்தார்.

तुल्यं युगसहस्रस्य नैशं कालमुपास्य सः ।
शर्वर्यन्ते प्रकुरुते ब्रह्मत्वं सर्गकारणात् ॥ ६

ब्रह्मा तु सलिले तस्मिन्वायुर्भूत्वा तदा चरन् ।
निशायामिव खद्योतः प्रावृट्काले ततस्ततः ॥ ७

ततस्तु सलिले तस्मिन्विज्ञायान्तर्गतां महीम् ।
अनुमानादसंमूढो भूमेरुद्धरणं प्रति ॥ ८

अकरोत्स तनुं ह्यन्यां कल्पादिषु यथा पुरा ।
ततो महात्मा मनसा दिव्यं रूपमचिन्तयत् ॥ ९

सलिलेनाप्लुतां भूमिं दृष्ट्वा स तु समन्ततः ।
किं नु रूपं महत्कृत्वा उद्धरेयमहं महीम् ॥ १०

जलक्रीडासु रुचिरं वाराहं रूपमस्मरत् ।
अधृष्यं सर्वभूतानां वाङ्मयं धर्मसंज्ञितम् ॥ ११

துயில் கொண்ட நேரம் ஆயிரம் யுகங்கள் கொண்ட பிரும்மனது இரவு. இரவின் இறுதியில் பிரும்மா (நாராயணன்) படைப்பைத் தொடங்குகிறார். இயக்க மற்றிருந்த நிலையை மாற்ற வாயுவாகி, மழை நாள் இரவில் மின் மினிப் பூச்சி சுற்றுவது போல் அங்குமிங்கும் அந்த நீரில்

சுற்றினார். பிரளயக் கடல் நீரில் பூமி கரைந்திருப்பதை உணர்ந்து தெளிந்து பூமியை நீர் பரப்பின் மீது உருவாக்க நினைத்தார். ஒவ்வொரு பிரளயத்தின் இறுதியிலும் இவ்வாறு வடிவெடுப்பது வழக்கம். நாராயணன் படைக்கிற பிரும்மாவானார். தைவத் தன்மை மிக்க ஒரு வடிவம் பெற நினைத்து நீரில் விளையாட ஏற்ற அழகான பன்றி உருவம் பிரளய நீரில் கரைந்து அடித்தளத்தில் தேங்கிய பூமியை வெளிக் கொணர ஏற்றதெனக் கண்டார்.

दशयोजनविस्तीर्णं शतयोजनमुच्छ्रितम्।
नीलमेघप्रतीकाशं मेघस्तनितनिस्वनम्॥ १२

महापर्वतवर्ष्माणं श्वेतं तीक्ष्णोग्रदंष्ट्रिणम्।
विद्युदग्निप्रकाशाक्षं आदित्यसमतेजसम्॥ १३

पीनवृत्तायतस्कन्धं सिंहविक्रान्तगामिनम्।
पीनोन्नतकटीदेशं सुश्लक्ष्णं शुभलक्षणम्॥ १४

रूपमास्थाय विपुलं वाराहममितं हरिः।
पृथिव्युद्धरणार्थाय प्रविवेश रसातलम्॥ १५

வராஹ வடிவம் மற்ற உயிரினத்தின் எதிர்ப்பை அடக்கும். ஒலியே அதன் வடிவம். தர்மத்தின் உருவகம். பத்து யோசனை பரப்பும் நூறு யோசனை உயரமும் கொண்டு கார்மேகம் போன்று இடியையொத்த உறுமலும் பெருமலையின் உறுதியும் வெண்ணிறமும் கூர்மிக்க தெற்றிப் பற்களும் மின்னல் போன்ற கண்ணொளியும் சூர்யன் போன்ற மேனி ஒளியும் பருத்த வட்டமான தோள்களும், சிங்கம் போன்ற பெருநடையும் பருத்துயர்ந்த இடுப்பும் மழமழப்பு மிக்க தோலும் மங்களமான தோற்றமும் கொண்ட வர-அஹர் (சிறந்த அழகான வலிய உடலமைப்பு கொண்டவராக) தோன்றினார். பூமியைத் தேடி நீர்ப் பகுதியின் அடியிற் சென்றார்.

स वेदपाद्यूपदंष्ट्रः क्रतुवक्षाश्चितीमुखः ।
अग्निजिह्वो दर्भरोमा ब्रह्मशीर्षो(र्षा) महातपाः ।। १६

अहोरात्रेक्षणधरो वेदाङ्गश्रुतिभूषणः ।
आज्यनासः स्रुवतुण्डः सामघोषस्वनो महान् ।। १७

सत्यधर्ममयः श्रीमान्धर्मविक्रमसंस्थितः ।
प्रायश्चित्तरथो घोरः पशुजानुर्महाकृतिः ।। १८

उद्गात्रन्त्रो होमलिङ्गः स्थानबीजी महौषधिः ।
वेद्यन्तरत्मा मन्त्रस्फिगाज्यस्पृक्सोमशोणितः ।। १९

वेदस्कन्धो हविर्गन्धो हव्यकव्यातिवेगवान्
प्राग्वंशकायो द्युतिमान्नानादीक्षाभिरन्वितः ।। २०

दक्षिणाहृदयो योगी महासत्रमयो विभुः ।
उपाकर्मेष्टिरुचिरः प्रवर्ग्यवित्तभूषणः ।। २१

नानाछन्दोगतिपथो गुह्योपनिषदासनः ।
छायापत्नीसहायो वै मणिशृङ्ग इवोच्छ्रितः ।। २२

भूत्वा यज्ञवराहो वै अतः स प्राविशत्प्रभुः ।
अद्भिः संछादितामुर्वीं स तामश्नन्प्रजापतिः ।। २३

उपगम्योज्जहाराऽऽशु अपस्ताश्च स विन्यसन् ।
सामुद्रीर्वै समुद्रेषु नादेयीश्च नदीष्वथ ।। २४

रसातलतले मग्नां रसातलतले गताम् ।
प्रभुर्लोकहितार्थाय दंष्ट्रयाऽभ्युज्जहार गाम् ।। २५

*அவரது உடல் உலகின் மூலப் பொருளாக அமைந்தது. உலகத்தின் மூலப் பொருள் வேள்வி. உலகம்*

வேள்வியாலானது. வேள்விக்கு உதவுபவை அனைத்தும் உடற்பகுதிகளாக அமைந்தன. வேதம் அவரது திருவடி. வேள்வியின் கட்டுத்தறி (யூபம்) தெற்றிப்பல், வேள்வி மார்பு, நெருப்பூட்டல் வாய், நெருப்பு நாக்கு, தர்ப்பை ரோமங்கள், பெருந்தவமியற்றுகிற பிரமன் தலை, இரவும் பகலும் கண்கள், வேதத்தின் அங்கங்களான சிக்ஷை முதலியவை காதணிகள், நெய் மூக்கு, ஹோமக் கரண்டி முகவாய், ஸாம வேதம் உருமல், ஸத்யமும் தருமமும் உரு, தர்மம் வீரநடையும் ஆதாரம், கழுவாய் தேர், வேள்வியில் ஸாமகானம் செய்பவர் குடல், ஹோமம் குறி, ஹோம ஒஷதி அண்ட கோசம், மேடை அந்தராத்மா, மந்திரம் புட்டச்சதை, நெய் தொடு நீர், ஸோமக்கொடி இரத்தம், வேதம் தோள் என வேள்விகளின் பல நிலைகளைக் கொண்ட உடலமைப்பு, வேதம் காட்டுகிற பாதையே அவர் செல்கிற வழி, அவரது உடல் நிழலே மனைவி, ரத்தினத்தாலான கொம்பு, யஜ்ஞ வராஹர் என்ற பெயர். நீரில் மறைந்த பூமியை உருவாக்கி வெளிக் கொணர்ந்தார். சுற்றி நின்ற நீரை கடல்களாகவும் ஆறுகளாகவும் மாற்றி பூமிக்கு அணைகட்டினார், பூமியைத் தன் தெற்றிப்பற்களால் தாங்கி வெளிக்கொணர்ந்தார்.

ततः स्वस्थानमानीय पृथिवीं पृथिवीकरः ।
मुमोच पूर्वं मनसा धारयित्वा धराधरः ॥ २६

तस्योपरि जलौघस्य महती नौरिव स्थिता ।
चरितत्वाच्च देहस्य न मही याति विप्लवम् ॥ २७

ततोद्धृत्य क्षितिं देवो जगतः स्थापनेच्छया ।
पृथिव्याः प्रविभागाय मनश्चक्रेऽम्बुजेक्षणः ॥ २८

पृथिवीं तु समीकृत्य पृथिव्यां सोऽचिनोद्गिरीन् ।
प्राक्सर्गे दह्यमानास्तु तदा संवर्तकाग्निना ॥ २९

तेनाग्निना विशीर्णास्ते पर्वता भुवि सर्वशः ।
शैत्यादेकार्णवे तस्मिन्वायुनाऽऽपस्तु संहृताः ।। ३०

निषिक्ता यत्र यत्राऽऽसंस्तत्र तत्राचलोऽभवत् ।
स्कन्नाचलत्वादचलाः पर्वभिः पर्वताः स्मृताः ।। ३१

गिरयोऽन्तर्निगीर्णत्वाच्चयनाच्च शिलोच्चयाः ।
ततस्तेषु विशीर्णेषु लोकोदधिगिरिष्वथ ।। ३२

विश्वकर्मा विभजते कल्पादिषु पुनः पुनः ।
ससमुद्रामिमां पृथ्वीं ससद्वीपां सपर्वताम् ।। ३३

भूराद्यांश्चतुरो लोकान्पुनः सोऽथ प्रकल्पयत् ।
लोकान्प्रकल्पयित्वा च प्रजासर्गं ससर्ज ह ।। ३४

*பிரளயத்திற்கு முன் பூமி இருந்த நிலையை மனக் கண்ணுல் கண்டு, அதே இடத்தில் பெரும் நீர் நிலையில் ஓடம் போல் பூமியை மிதக்க விட்டு மறுபடி சிதறுதிருக்க ஸமதரையாக்கிப் பாகம் பாகமாகப் பிரித்து மண்ணைக்குவித்து மலையாக்கி ஆங்காங்கு நிறுவினுர். பிரளயத்தில் அவை பிரளய நெருப்பில் சிதைந்திருந்தன. அவற்றினுள்ளிருந்த நீர்ப்பகுதியைக் காற்ருல் வரள வைத்து இறுகச் செய்து முன்பு இருந்த பள்ளங்களில் அவற்றை அசையாதிருக்கும்படி (அசல) பல தரப்பட்ட இறுக்கம் கொண்டவாறு - (பர்வ - த) மண்ணின் சாரமனைத்தையும் உட்கொண்டவாறு (கிரி) பல பாறைகள் ஒன்றன் மீது இடையின்றி அடுக்கப்பட்டதாக (சிலா - உச்சயம்) அமைத்தார். உலகின் ஆதாரமாக பூமி அமைந்தது. பல தரப்பட்ட சிற்பங்களில் தேர்ந்தவராக (விச்வகர்மா) ஆன பிரும்மா, பூமியின் கீழும் மேலும் (பாதாளம் பூமி வானுலகம் ஸ்வர்க்கம் என்ற) நான்கு உலகங்களைப் படைத்தார். அவற்றினுள் வாழ உயிரினத்தைப் படைத்தார்.*

ब्रह्मा स्वयंभूर्भगवान्सिसृक्षुर्विविधाः प्रजाः ।
ससर्ज सृष्टिं तद्रूपां कल्पादिषु यथा पुरा ।। ३५

तस्याभिध्यायतः सर्गं तदा वै बुद्धिपूर्वकम् ।
प्रध्यानसमकालं वै प्रादुर्भूतस्तमोमयः ।। ३६

तमो मोहो महामोहस्तामिस्रो ह्यन्धसंज्ञितः ।
अविद्या पञ्चपर्वैषा प्रादुर्भूता महात्मनः ।। ३७

पञ्चधा चाऽऽश्रितः सर्गो ध्यायतः सोऽभिमानिनः ।
सर्वतस्तमसा चैव दीपः कुम्भवदावृतः ।। ३८

बहिरन्तःप्रकाशश्च शुद्धो निःसंज्ञ एव च ।
यस्मात्तैः संवृता बुद्धिर्मुख्यानि करणानि च ।। ३९

तस्मात्ते संवृतात्मानो नगा मुख्याः प्रकीर्तिताः ।
मुख्यसर्गं तथाभूतं ब्रह्मा दृष्ट्वा ह्यसाधकम् ।। ४०

अप्रसन्नमनाः सोऽथ ततोन्याः सोऽभ्यमन्यत ।
तस्याभिध्यायतस्तत्र तिर्यक्स्रोतोऽभ्यवर्तत ।। ४१

तस्मात्तिर्यग्व्यवर्तन्त तिर्यक्स्रोतस्ततःस्मृतम् ।
तमोबहुत्वात्ते सर्वे ह्यज्ञानबहुलाः स्मृताः ।। ४२

उत्पथग्राहिणश्चापि ते ध्यानाद्ध्यानमानिनः ।
तिर्यक्स्रोतस्तु दृष्ट्वा वै द्वितीयं विश्वमीश्वरः ।। ४३

अहंकृता अहंमाना अष्टाविंशद्विधात्मकाः ।
एकादशेन्द्रियविधा नवधा चोदयस्तथा ।। ४४

अष्टौ च तारकाद्याश्च तेषां शक्तिविधाः स्मृताः ।
अन्तःप्रकाशास्ते सर्व आवृताश्च बहिः पुनः ।। ४५

यस्मात्तिर्यक्प्रवर्तेत तिर्यक्स्रोताः स उच्यते ।
तिर्यक्स्रोतश्च दृष्ट्वा वै द्वितीयं विश्वमीश्वरः ।। ४६

अभिप्रायमथोद्भूतं दृष्ट्वा सर्वं तथाविधम् ।
तस्याभिध्यायतो नित्यं सात्त्विकः समवर्तत ।। ४७

முன் கல்பத்திலிருந்தவாறு படைப்பைத் தொடங்க பிரும்மா எண்ணியதும் அவர் முன் இருள் சூழ்ந்தது. தமஸ், மோஹம், மஹாமோஹம், தாமிஸ்ரம், அந்த தாமிஸ்ரம் என்ற ஐந்து அஜ்ஞானத்தின் மூலப்பொருட்கள் தோன்றின. இவை அஹங்காரத்தின் பின் விளைவுகள். (தமஸ் - தன் நிலை உணராமை, மோஹம் - உள்ளத்தில் குழப்பம், மஹாமோஹம் - சிற்றின்ப வேட்கை, தமிஸ்ரம் - சிற்றின்பம் கிட்டாத போது அதற்குத் தடையாக நிற்பதில் கோபம், அந்ததாமிஸ்வரம் - தான் நாடுவதைப் பெறாத போது தன்னையே இழந்ததாகக் கருதி மரணம் வரை நாடுதல்.) அறிவிருந்தும் குடத்திலிட்ட தீப ஒளி வலி விழப்பது போல் எங்கும் இருள் சூழ்ந்தது, உள்ளும் வெளியிலும் ஒளியூட்டி தூய்மை பெறாமல் அறிவும் மனமும் பொறிகளும் பயனற்று மலை மரம் போல் இயக்கமின்றியிருந்தது, இவைகளின் உணவுப் பாதை கீழிருந்து மேலோக்கிச் செல்லும். மரம் செடி இவ்வகையின. முதல் படைப்பு பயனற்றதைக் கண்ட பிரும்மா மனம் குன்றிப் படைக்க முற்பட்டார். உணவு உண்டு வாழ்கிற உயிரினத்தைப் படைக்கத் தொடங்கியதும் குறுக்கே உணவுப் பாதையைக் கொண்ட உயிரினங்கள் தோன்றின். அவையும் தமோகுணம் மிகுந்து அறியாமையால் மாடு, ஆடு, எருமை என இரு குளம்புகள் கொண்டவை, ஒரு குளம்பு கொண்டவை, ஐந்து விரல் நகங்கள் கொண்டவை என 28 வகை பிராணிகள் தோன்றின. உள்ளத்தொளி கொண்டிருந்தும் வெளியொளியின்றியிருந்ததால் படைப்பின் இலக்கு நிறைவுறவில்லை.

ऊर्ध्वस्रोतास्तृतीयस्तु स चैवोर्ध्वं व्यवस्थितः ।
यस्माद्व्यवर्ततोर्ध्वं तु ऊर्ध्वस्रोतास्ततः स्मृतः ।। ४८

ते सुखप्रीतिबहुला बहिरन्तश्च संवृताः ।
प्रकाशा बहिरन्तश्च ऊर्ध्वस्रोतोद्भवाः स्मृताः ॥ ४९

तेन वातादयो ज्ञेयाः सृष्टात्मानो व्यवस्थिताः ।
ऊर्ध्वस्रोतास्तृतीयो वै तेन सर्गस्तु स स्मृतः ॥ ५०

ऊर्ध्वस्रोतःसु सृष्टेषु देवेषु स तदा प्रभुः ।
प्रीतिमानभवद्ब्रह्मा ततोऽन्यं सोऽभ्यमन्यत ॥ ५१

ससर्ज सर्गमन्यं स साधकं प्रभुरीश्वरः ।
अथाभिध्यायतस्तस्य सत्याभिध्यायिनस्तदा ॥ ५२

प्रादुर्बभूव चाव्यक्तादर्वाक्स्रोतः सुसाधकम् ।
यस्मादर्वाग्व्यवर्तेत ततोऽर्वाक्स्रोत उच्यते ॥ ५३

ते च प्रकाशबहुलास्तमःसत्त्वरजोधिकाः ।
तस्मात्ते दुःखबहुला भूयोभूयश्च कारिणः ॥ ५४

प्रकाशा बहिरन्तश्च मनुष्याः साधकाश्च ते ।
लक्षणैस्तारकाद्यैस्ते अष्टधा च व्यवस्थिताः ॥ ५५

सिद्धात्मानो मनुष्यास्ते गन्धर्वसहधर्मिणः ।
इत्येष तैजसः सर्गो ह्यर्वाक्स्रोताः प्रकीर्तितः ॥ ५६

*மறுபடி ஆராய்ந்து படைக்கப்பட்டவை மேலிருந்து கீழ் நோக்கி உணவுப்பாதை கொண்டவை. இவை உள்ளொளி நிறைந்தவை. முக்குணங்களும் இயற்கையளவை மீறிச் செயல்படுவதால் துன்பம் மிக்கவை. திரும்பத்திரும்பச் செய்ததையே செய்யும். மனிதன் இப்பிரிவைச் சார்ந்தவன். இதில் நினைத்ததை நடத்திக் காட்டுகிற ஸித்தர்களும் உண்டு. இதனைத் தைஜஸப் படைப்பு என்பர்.*

पञ्चमोऽनुग्रहः सर्गश्चतुर्धा स व्यवस्थितः ।
विपर्ययेण शक्त्या च तुष्ट्या सिद्ध्या तथैव च ।। ५७

विवृत्तं वर्तमानं च तेऽर्थं जानन्ति तत्त्वतः ।
भूतादिकानां सत्त्वानां षष्ठः सर्गः स उच्यते ।। ५८

ते परिग्रहिणः सर्वे संविभागरताः पुनः ।
खादनाश्चाप्यशीलाश्च ज्ञेया भूतादिकास्तुते ।। ५९

विपर्ययेण भूतादिरशक्त्या च व्यवस्थितः ।
प्रथमो महतः सर्गो विज्ञेयो महतस्तु सः ।। ६०

तन्मात्राणां द्वितीयस्तु भूतसर्गः स उच्यते ।
वैकारिकस्तृतीयस्तु सर्व ऐन्द्रियकः स्मृतः ।। ६१

इत्येष प्राकृतः सर्गः संभूतो बुद्धिपूर्वकः ।
मुख्यसर्गश्चतुर्थस्तु मुख्या वै स्थावराः स्मृताः ।। ६२

तिर्यक्स्रोताश्च यः सर्गस्तिर्यग्योनिः स पञ्चमः ।
तथोर्ध्वस्रोतसां षष्ठो देवसर्गस्तु स स्मृतः ।। ६३

तथाऽर्वाक्स्रोतसां सर्गः सप्तमः स तु मानुषः ।
अष्टमोऽनुग्रहः सर्गः सात्त्विकस्तामसस्तु सः ।। ६४

पञ्चैते वैकृताः सर्गाः प्राकृतास्तु त्रयः स्मृताः ।
प्राकृतो वैकृतश्चैव कौमारो नवमः स्मृतः ।। ६५

प्राकृतास्तु त्रयः सर्गाः कृतास्ते बुद्धिपूर्वकाः ।
बुद्धिपूर्वं प्रवर्तन्ते षट्सर्गा ब्रह्मणस्तु ते ।। ६६

विस्तरानुग्रहं सर्गं कीर्त्यमानं निबोधत ।
चतुर्धाऽवस्थितः सोऽथ सर्वभूतेषु कृत्स्नशः ।। ६७

विपर्ययेण शक्त्या च तुष्ट्या सिद्ध्या तथैव च ।
स्थावरेषु विपर्यासस्तिर्यग्योनिषु शक्तिता ।। ६८

सिद्ध्यात्मानो मनुष्यास्तु तुष्टिर्देवेषु कृत्स्नशः ।
इत्येते प्राकृताश्चैव वैकृताश्च नव स्मृताः ।। ६९

सर्गाः परस्परस्याथ प्रकारा बहवः स्मृताः ।

மலை போன்ற அசையாப் பொருள், மரம் செடி போன்ற மேனோக்கிய உணவுப் பாதை கொண்டவை. மாடு ஆடு போன்ற குறுக்கில் உணவுப் பாதை கொண்டவை, மனிதன் போன்று மேலிருந்து கீழ்நோக்கிய உணவுப் பாதை கொண்டவை. இந்நான்கு படைப்புகளின் தனித் தனி இயல்பாக நான்காகப் படைத்தார். நான்காம் படைப்பில் கந்தர்வர் தேவர் போன்ற உயரினமும் அடங்கும். மரம் செடி முதலியவற்றில் விபர்யயம் என்ற உருவ வளர்ச்சி இயல்பு. குறுக்காக வளர்ந்த உயிரினத்தில் ஆற்றல் இயல்பு. மனித இனத்தில் ஸித்தி எனும் நினைத்ததை நிறைவேற்றுவது இயல்பு. தேவர் முதலியவரிடத்தில் துஷ்டி எனும் உள்ளத்து நிறைவு இயல்பு. இந்த இயல்புகளின் உதவியால் நடந்ததையும் நிகழ்வதையும் ஆழ்ந்து நோக்குவது வளர்கிறது. இவை மூலப் பொருளைக் கொண்டு நிகழ்ந்த உருமாற்றத்தின் விளைவு. விக்ருதிஸ்ருஷ்டி எனப்படும் விக்ருதிக்குக் காரணமான ப்ரக்ருதி எனும் மூலப் பொருள் அடைகிற மாறுபாடும் ஸ்ருஷ்டியில் அடங்கும். மூலப் பொருள் எனும் பிரகிருதி வேற்றுமையற்றது. உருவ வேற்றுமை பெற மஹத் என்ற நிலைபெற்றது. அறிவின் மூலப் பொருள் இது. அதிலிருந்து ஐந்து பூதங்களின் மூல நிலையான பூதாதி. ஐந்து பூதங்கள் ஒன்றோடொன்று கலந்து உலகமாக மாறுபடுவதற்கு முன் தனித் தனியே மிக சூட்சுமநிலையில் கலப்பற்றிருந்த நிலை. (பஞ்சீகரணம் என்ற கலப்பு முறைக்கு உட்படாத நிலை.) தன் மாத்திரம் என்பர். ஆகாசதன் மாத்திரம் - ஆகாயமாக மட்டும் இருந்த உருப்பெறாத நிலை. இது பூதஸ்ருஷ்டி, ஐந்து பூதங்களின் தனி இயல்பு சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம்

எனப்படும். இந்நிலையில் மஹத் அஹங்காரம் என்ற இரண்டின் வெளிப்பாட்டிற்கு உதவுகிற கண் முதலிய பொறிகளும் மனமும் வெளிப்பட்டன. இது இந்திரிய ஸ்ருஷ்டி. இவை மூலப் பொருட்களின் படைப்பின் விரிவு. இவற்றைக் கொண்டு அசையாப் பொருட்களும் அசைபவையும் உருப்பெற்றன. மஹத்தின் பின் விளைவான ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்கள் ஏற்றத் தாழ்வால் ஸம நிலை ஸாத்வீகம், ராஜஸம் தாமஸம் என்ற பிரிவிற்கு உட்பட்டன.

अग्रे ससर्ज वै ब्रह्मा मानसानात्मनः समान् ।। ७०

सनन्दनं च सनकं विद्वांसं च सनातनम् ।
विज्ञातेन निवृत्तास्ते वैवर्तेन महौजसः ।। ७१

संबुद्धाश्चैव नानात्वादपविद्धास्त्रयोऽपि ते ।
असृष्ट्वैव प्रजासर्गं प्रतिसर्गं गताः पुनः ।। ७२

तदा तेषु व्यतीतेषु तदाऽन्यान् साधकांश्च तान् ।
मानसानसृजद्ब्रह्मापुनःस्थानाभिमानिनः ।। ७३

आभूतसंप्लवावस्थान्नामतस्तान्निबोधत ।
आपोऽग्निः पृथिवी वायुरन्तरिक्षं दिशस्तथा ।। ७४

स्वर्गं दिवः समुद्रांश्च नदाञ्शैलान्वनस्पतीन् ।
ओषधीनां तदाऽऽत्मानो ह्यात्मानो वृक्षवीरुधाम् ।। ७५

लवाः काष्ठाः कलाश्चैव मुहूर्ताः संधिरात्र्यहाः ।
अर्धमासाश्च मासाश्च अयनाब्दयुगानि च ।।
स्थानाभिमानिनः सर्वे स्थानाख्याश्चैव ते स्मृताः ।। ७६

பிரும்மா படைப்பின் இலக்கைக் காட்டுகிற முன் உதாரணமாக தன் மனத்திலிருந்து ஸநகர், ஸனந்தனர்,

வித்வானுன ஸனத்குமாரர் ஸநாதனர் என்ற நால்வரைப் படைத்தார். இவர்கள் பிரும்ம ஜ்ஞானத்தால் உலகாகிய விவர்த ஸ்ருஷ்டியில் பங்கெடுக்காமல் மூலநிலேயைக் கண்டு விட்டனர். அதில் திருப்தியுருத பிரும்மா படைப்பு தானே தொடர வழி வகுத்தார். நீர், நிலம், நெருப்பு, காற்று, வானம், திக்குகள், ஸ்வர்கம், கடல், ஆறு, மலே, பெரு மரங்கள், செடி கொடிகள் என்று அது விரிந்தது. இவற்றைக் கட்டுப்படுத்த கணம், விநாடி, நாடி, முஹூர்த்தம், இரவு, பகல், இவற்றின் சந்திப்பு, பக்ஷம், மாஸம், வருஷம், யுகம், என்ற நிலேத்த காலவரைகளேப் படைத்தார்.

वक्त्राद्यस्य ब्राह्मणाः संप्रसूतास्तद्वक्षस्तः क्षत्त्रियाः पूर्वभागे।
वैश्याश्चोर्वोर्यस्य पद्भ्यां च शूद्राः सर्वे वर्णा गात्रतः संप्रसूताः ॥

नारायणः परोऽव्यक्तादण्डमव्यक्तसंभवम्।
अण्डाज्जज्ञे पुनर्ब्रह्मा लोकास्तेन कृताःस्वयम्॥ ७८

एष वः कथितः पादःसमासान्न तु विस्तरात्।
अनेनाऽऽद्येन पादेन पुराणं संप्रकीर्तितम्॥ ७९

முகத்திலிருந்து அந்தணர்கள், மார்பிலிருந்து க்ஷத்திரியர்கள், தொடைகளிலிருந்து வைச்யர்கள், கால்களிலிருந்து சூத்திரர்கள் என அவரது உடலிலிருந்து வெளிப்பட்டனர்.

இந்த பிரும்மாண்டத்தின் முன்னிருந்தது பிரகிருதி. பிரகிருதி உலகின் மூலப்பொருள். அதில் உலகின் அடையாளம் எதுவும் தென்படாததால் அதனே அவ்யக்தம் என்பர். பிரகிருதிக்கு முற்பட்டவர் நாராயணன். அவரிடமிருந்து தோன்றிய பிரகிருதி வட்ட வடிவத்துடன் (முட்டை வடிவில்) தோன்றியது. நாராயணனின் படைக்கும் எண்ணம் பிரும்மாவானது. பிரும்மா பிரகிருதியை உருமாற்றி உலகமாக்கினுர். ஸ்ருஷ்டி முறை பின் விரிவு இவ்வாறு தொடங்கியது.

# श्रीमद्वाल्मीकिरामायणमाहात्म्यम्

(स्कान्दपुराणतः)

प्रथमोऽध्यायः ।

## ஸ்ரீமத் ராமாயண மாஹாத்ம்யம்

(ஸ்கந்த புராணத்திலிருந்து)

அத்யாயம் - 1

नारद उवाच-

पितामहोऽसि लोकानां पिताऽसि मम च प्रभो ।
तत्त्वां पृच्छामि लोकेश लोकानां मम चाब्जज ।। १

हिताय करुणासिन्धो कृपयाऽऽख्यहि सादरम् ।
उक्तं किल त्वया ब्रह्मन् पठनाच्छ्रवणादपि ।। २

श्रीरामायणकाव्यस्य चतुर्वर्गो भवेदिति ।
कथं पाठाद्भवेद्धर्मः कथं चार्थश्च सिद्ध्यति ।। ३

कथं कामो भवेत्पुंसां मोक्षो वाऽपि कथं भवेत् ।
विभवं विस्तरं चैव नियमं च सकल्पनम् ।। ४

प्रब्रूहि जगतां नाथ सर्वज्ञोऽसि मतो मम ।
ब्रह्मोवाच-
शृणु नारद वक्ष्यामि श्रीरामायणवैभवम् ।। ५

यस्य स्मरणमात्रेण नरः पापात्प्रमुच्यते ।
त्वन्मुखेनाखिला लोका उत्तरेयुर्भवार्णवात् ।। ६

श्रीमद्रामायणं पुण्यमितिहासं पुरातनम् ।
येऽर्चयन्ति रघूत्तंसं स्मरन्तस्ते सुखा नराः ।। ७

ब्रह्मक्षत्रियविट्छूद्रैः चतुर्वर्गफलेप्सुभिः ।
श्रोतव्यं नियमान्नित्यं श्रीरामायणमादरात् ।। ८

पठनं च प्रवचनं ब्राह्मणाधीनमेव च ।
श्रीमद्रामायणाख्यस्य कल्पवृक्षस्य नारद ।। ९

सप्तकाण्डाह्वयाः शाखाः सप्तरूपफलप्रदाः ।
पठनाच्छ्रवणं पुण्यं अधिकं संप्रयच्छति ।। १०

अर्थप्रवचनं तस्मात् महापुण्यतमं स्मृतम् ।

*நாரதர் பிரும்மாவிடம் கேட்டார். ''ஸ்ரீமத் ராமாயணத்தைப் படித்தால் அறம் பொருள் இன்பம் முக்தி என்ற நான்கும் கிட்டுகிறதென்பர். கதையைப் படிப்பதால் இவை எங்ஙனம் கிட்டும் ? அதற்கான படிக்கிற முறை, நியமம், ஸங்கல்பம் இவை தனித்துள்ளதெனில் கூறுவீர்'' என.*

*பிரும்மா கூறினார் - ஸ்ரீ ராமாயணத்தின் பெருமை. அதனை நினைவிற் கொண்டால் பாபம் நீங்கும். ராமனை வழிபடுபவரும் ராமாயணத்தைப் படிப்பவரும் மேன்மையனைத்தையும் பெறுவர். தினமும் முறைப்படி கட்டுப்பாட்டுடன் படிப்பதும் கேட்பதும் பொருள் விளக்கம் பெறுவதும் புனிதமானது. ராமாயணம் எனும் கற்பக மரத்திற்கு காண்டம் என்ற ஏழு கிளைகள். அவைகளில் ஏழுவகை பயன்களாகிய பழங்கள் உள்ளன. அவற்றைப் பெறப் பொருள் விளக்கத்துடன் அதனைப் படிக்க வேண்டும்.*

पुत्रपौत्रादि संपत्तिं सर्वरोगनिवारणम् ।। ११
पत्नीपुत्रादि कलहनाशनं क्षेमवर्धनम् ।
करोति बालकाण्डस्य पठन श्रवणादिकम् ।। १२

*பால காண்டத்தைப் படிக்க, கேட்க, விளக்கம் பெற, மக்கள் பேறு, நோய் நீக்கம், மனைவி மக்களுடன் கலகமின்றி ஒற்றுமை, வாழ்க்கை நலம் முதலியவற்றைப் பெறலாம்.*

अभीष्टकार्यप्रत्यूहनाशनं धर्मवर्धनम्।
पितृपुत्रादिवात्सल्यं रामदास्येऽधिकां रुचिम्॥ १३
अयोध्याकाण्ड पठनं करोति रुचिरं नृणाम्।

*நினைத்ததைப் பெறுவதில் தடைநீக்கம், அறவழி செல்லுதல், பெற்றோர் - மக்களிடம் ஒற்றுமை. ராமனது வழிபாட்டில் மிக்க ஆர்வம். இவற்றை அயோத்யா காண்டம் படிப்பதால் பெறலாம்.*

वियुक्तबन्धुसंश्लेषं पतिभक्तिं च योषिताम्॥ १४
धर्माविरुद्धां कामानामवाप्तिं साधुषु स्पृहाम्।
लभते वनकाण्डस्य पठनश्रवणान्नरः॥ १५

*ஆரண்ய காண்டத்தைப் படிக்க பிரிந்த உறவினர் கூடுவர். பெண்கள் கணவரிடம் பேரன்பு கொள்வர். அறவழி மீறாமல் விரும்பியது கிட்டும். நல்லோருடன் இணக்கம் நேரும்.*

अर्थावाप्तिं च विपुलां मित्रलाभगुणानपि।
सत्साहाय्यं सुखप्राप्तिं स्वामिभक्तिं च निर्मलाम्॥ १६

किष्किन्धा काण्ड सर्गाणां पठनात्प्राप्नुयान्नरः।

*கிஷ்கிந்தா காண்டம் படிப்பதால் பெரும் செல்வம் பெறுவர். நல்ல நண்பர் கிட்டும். நல்லோர் உதவுவர். எஜமானனிடம் மாசற்ற அன்பு கொள்வர்.*

यद्यत्संकल्पितं चित्ते सुकरं वाऽपि दुष्करम्॥ १७

शत्रुहस्ताद्विमुक्तिं च कारागाराद्विमोक्षणम्।
लभते सुन्दराख्यस्य काण्डस्य पठनान्नरः॥ १८

दिने दिने सप्त सर्गास्तस्य काण्डस्य यो नरः।
पठेद्भक्त्या तु काकुत्स्थं हृदि कृत्वा नमस्य च॥ १९

तस्य जन्मान्तरशतैः संचितस्य च पाप्मनः ।
नाशं कुर्यात्सुप्रसन्नो रामो विष्णुः सनातनः ।। २०

किं पुनश्चिन्तितार्थासिं चिन्तयामः पुनः पुनः ।

*ஸுந்தர காண்டத்தைப் படிக்க நினைத்தது செய்ய எளிது. கஷ்டமானாலும் நிறைவுறும். எதிரியின் பிடி விலகும். சிறை வாசம் நீங்கும். தினம் 7-7 ஸர்கமாகப் படித்து ஸ்ரீ ராமனை பக்தியுடன் வழிபட முற்பிறவிகளில் செய்த பாபங்கள் ராமனின் அருளால் விலகும்.*

युद्धकाण्डस्य पठनात् श्रवणाच्च प्रवाचनात् ।। २१

सर्वशत्रुक्षयो भूयात् असाध्यं साध्यतामियात् ।

*யுத்த காண்டத்தைப் படிப்பதால் எதிரிகள் அழிவர். இயலாத செயலும் கை கூடும்.*

श्रीमदुत्तरकाण्डस्य पठनाद्भक्तितो नरः ।। २२

जीवन्मुक्तः स विज्ञेयो राघवस्य प्रसादनः ।
न पुनः स तु जायेत कर्म भोक्तुं स्वयं कृतम् ।। २३

उषित्वा स तु वैकुण्ठे कार्यब्रह्मसमीपतः ।
ब्रह्मज्ञानं प्रपन्नोऽथ विष्णोः सायुज्यमाप्नुयात् ।। २४

*உத்தர காண்டம் படிப்பதால் ராமனின் அருளால் ஜீவன் முக்தி நிலை பெறுவர். தனது வினைகளை அனுபவிக்கவென மறுபடி பிறக்கமாட்டார். வைகுண்டமடைந்து பிரும்ம ஜ்ஞானம் பெற்று விஷ்ணுவுடன் இரண்டறக் கலப்பர்.*

येषां गृहेषु तिष्ठेत श्रीरामायणपुस्तकम् ।
यक्षरक्षःपिशाचाद्याः भिया धावन्ति तद्गृहात् ।। २५

श्रीरामायण कोशस्य यैः पूजाऽक्रियतादरात् ।
तस्य देवास्तु निखिलाः प्रसीदन्ति स्वयं सुत ।। २६

यैर्नित्यं पठ्यते भक्त्या दिनविच्छित्तिशून्यकम्।
गच्छन्तमनुगच्छेत्तं श्रीरामः करुणावशः ।। २७

ராமாயண புத்தகம் உள்ள வீட்டில் பேய் பிசாசு முதலியவை பயத்தால் அணுகா. அதனை தெய்வமாக வழிபடுவதால் தேவர்கள் அனைவரும் அருள்புரிவர். ஒரு நாள் கூட விடாமல் ராமாயண பாராயணம் செய்பவர்களை ஸ்ரீ ராமன் என்றும் பின் தொடர்வார்.

पाठः काम्यश्च नित्यश्च मोक्षार्थश्चेति स त्रिधा।
संकल्प्यानिष्टनाशं वा इष्टावाप्तिं मनोरथे।। २८

श्रीरामायणपाठस्तु काम्यः स परिकीर्तितः।
काण्डस्य सुन्दराख्यस्य सप्तसर्गीविधानतः ।। २९

संपूर्णस्यापि षट्काण्डसंमितस्य विधानतः।
पुनर्वसौ समारंभः संपूर्तिश्च पुनर्वसौ।। ३०

चैत्रे वाऽऽश्वयुजे मासि नवरात्रे महोत्सवे।
पठनं कुरुते विप्रः कामानां परिपूर्तये।। ३१

संगवादौ समारभ्य मुहूर्तत्रयपाठनम्।
काम्यपाठ इति प्रोक्तो नित्यपाठमथो शृणु।। ३२

ராமாயண படனம் காம்யம் நித்யம் மோக்ஷத்திற்காக என மூவகைப்படும். **காம்யபடனம்** என்பது விரும்பத்தகாதது நேராதிருப்பதற்கோ விரும்பியது நடப்பதற்கோ ஸங்கல்பித்துப் பாராயணம் செய்வதாகும். ஸுந்தர காண்டத்தை மட்டும் தினமும் 7 ஸர்க்கங்களாகத் தொடர்ந்து திரும்பத் திரும்பப் படித்து 68 நாட்களில் முடிப்பது காம்யம். ராமாயணம் முழுவதையும் புனர்வஸுவில் தொடங்கி, புனர்வஸுவில் முடிப்பதும் காம்யமாகும். சித்திரை மாதத்து வஸந்த நவராத்திரியிலும் புரட்டாசி மாதத்து சாரதநவராத் திரியிலும் விருப்பம் நிறைவேற நவாஹ (ஒன்பது நாட்கள்)

*பாராயணமும் விரும்பியதைத் தரும். ஸங்கவ காலத்தில் தொடங்கி மூன்று முகூர்த்தங்கள் தொடர்ந்து படிப்பதும் காம்யமே. (ஸங்கவம் - உதித்து 2 - 24 மணிக்கு மேல் 4-48 மணிக்குள்) முஹூர்த்தம் - 48 நிமிஷங்கள்.*

दिने दिने त्वविच्छित्त्या मनसा द्रव्यतोऽपि वा।
संपूज्य सीतारमणं तं ध्यात्वा पुस्तके धिया।। ३३

नित्यकर्माविरोधेन प्रातः सङ्गव एव वा।
पठेद्रामायणं पुण्यमुच्चैः सुस्वरमेव च।। ३४

अनश्नन्नेव च पठेत् राघवस्य कृपासये।
पठेत्तु सर्गान्दश वा पञ्चवा त्रीनथापि वा।। ३५

एकं वापि पठेत्सर्गं प्रयतो नान्यमानसः।
उत्तमं दशसर्गास्तु मध्यमं सर्गपञ्चकम्।। ३६

अधमं तु त्रयः सर्गाः एकसर्गोऽधमाधमः।
न सर्गमध्ये विरमेत् यदि दैवाद्विरम्यते।। ३७

पुनस्तदादिमारभ्य पठेन्नियमपूर्वकम्।
एवं कृते फलं यत्स्यात्तद्वदिष्यामि नारद।। ३८

दारिद्र्यनाशो रोगाणां द्रावणं सुखवर्धनम्।
भवेज्जन्मान्तरे चैव यत्पापं रचितं नृभिः।। ३९

तच्चापि नश्यति क्षिप्रं ज्ञानं स्यान्मोक्षसाधनम्।
न पुनर्जायते सोऽयं सवित्रीयोनितो भुवि।। ४०

*நித்ய பாடம் என்பது ஒவ்வொரு நாளும் இடைவிடாமல் தொடர்ந்து மனத்தாலும் பொருளாலும் ஸீதா ராமனை வழிபட்டு புஸ்தகத்தில் அவரைத் தியானித்து ஸந்தியா வந்தனம் முதலியவற்றிற்கு இடையூறு இன்றி பிராத: காலத்திலோ (உதித்து 2-24 மணி நேரத்திற்குள்) ஸங்கவ காலத்திலோ ராமாயணத்தை இனிய குரலில் உரக்கப்*

படிப்பதாகும். பாராயணம் முடிகிற வரை உணவு ஏற்கக் கூடாது. ராகவனின் அருள் பெறத் தினம் 10, அல்லது 5, அல்லது 3 அல்லது ஒரு ஸர்க்கமாவது படிக்க வேண்டும். 10 ஸர்க்கம் படிப்பது மிகச் சிறந்தது. ஸர்கத்தின் நடுவில் நிறுத்தக்கூடாது. நிறுத்த நேர்ந்தால் மறுபடி அந்த ஸர்க்கத்தின் முதலிலிருந்து தொடங்கிப் படிக்க வேண்டும். ஏழ்மை நீங்கும். நோய் விலகும். இன்பம் பெருகும். முன் பிறவியில் செய்த பாபமும் அழியும். பேரறிவுடன் வாழ்ந்து முக்தி அடையலாம். மறுபடி தாய் வயிற்றில் பிறக்க நேராது.

मोक्षार्थपाठं वक्ष्यामि शृणु वीणामुने शुभम् ।
दिवा भुक्त्यन्तरं विप्रस्त्वपराह्णे यतव्रतः ।। ४१

एकावरं तु श्रोतारं कल्पयित्वा शुचिव्रतम् ।
अखादित्वा तु तांबूलं अपीत्वा तु जलं शुचि ।। ४२

यथाशक्ति च संपूज्य श्रीरामायणपुस्तकम् ।
एकावरान् पठेत्सर्गान् विरक्तस्तु त्रिवर्गके ।। ४३

न संभाषेत दारैर्वा पुत्रैर्वा पाठमध्यतः ।
आरभ्य नारदप्रोक्तं सर्गं वाल्मीकये पुरा ।। ४४

यावदुत्तरकाण्डान्तं पठेदेवं क्रमेण तु ।
च तुर्विंशति साहस्रश्लोकमण्डलमादरात् ।। ४५

पठित्वा तु समाप्याथ ब्राह्मणान् भोजयेद्बहून् ।
प्रतिसाहस्रकश्लोकमेकैकं भोजयेद्द्विजम् ।। ४६

மோக்ஷபடன முறை என்பது பகலுணவு முடிந்த பின் உடன் பிற்பகலில் நியமத்துடன் ஒருவரையாவது கேட்பவராக அமைத்து தாம்பூலமும் ஜலபானமும் ஏற்குமுன் ராமாயண புத்தகத்தில் ராமனை வழிபட்டு அறம் பொருள் மற்றும் இன்பத்தில் ஈடுபாடின்றித் தினமும் ஒரு ஸர்க்கமாவது படிக்க வேண்டும். படிக்கிற போது மனைவி மக்களுடன் பேசுவதைத்

தவிர்க்க வேண்டும். நாரதர் வால்மீகிக்கு உபதேசித்த ஸம்க்ஷேப ராமாயணம் தொடங்கி உத்தர காண்ட முடிவு வரை உள்ள 24 ஆயிரம் சுலோகங்களையும் படித்து முடித்ததும். ஆயிரம் சுலோகங்களுக்கு ஒருவரென அந்தணர்களுக்கு உணவிட வேண்டும்.

श्रीरामजनने चैव सीतायाः पाणिपीडने।
पादुकाराज्यलाभे च जटायोर्मोक्षसंगतौ ॥ ४७

सुग्रीवराज्यलाभे च तरणेऽब्धेर्हनूमतः।
अंगुलीयकदाने च विभीषणसमागमे ॥ ४८

विभीषणस्य राज्यार्थं लङ्कायामभिषेचने।
श्रीरामपट्टाभिषेके च कारयेदुत्सवं प्रभोः ॥ ४९

श्रीमदुत्तरकाण्डस्य समाप्तौ तु द्विजोत्तम।
महोत्सवं प्रकुर्वीत रामस्य परमात्मनः ॥ ५०

नित्यपाठे च पाठे च मुमुक्षूणां यथाक्रमम्।
काण्डाः सप्तापि पाठ्याः स्युरन्यथा निष्फलं भवेत् ॥ ५१

काम्य पाठे तु षट्काण्डमिदं रामायणं पठेत्।
न तत्रोत्तरकाण्डस्य पठने श्रेयसां क्षतिः ॥ ५२

ஸ்ரீ ராம ஜனனம், ஸீதா விவாஹம், பாதுகா பட்டாபிஷேகம், ஜடாயு மோக்ஷம், ஸுக்ரீவ பட்டாபிஷேகம், ஹனுமானின் ஸமுத்ரம் தாண்டல், அங்குலீயக ப்ரதானம், விபீஷண ஸமாகமம், விபீஷணனுக்கு இலங்கையில் பட்டாபிஷேகம், ஸ்ரீ ராம பட்டாபிஷேகம். இந்தக் கதைப் பகுதி படிக்கும் போது உற்சவமாகக் கொண்டாட வேண்டும். உத்தர காண்டம் முடிந்ததும் பேருற்சவமாகக் கொண்டாடுவர். காம்யபாடத்திலும் முதல் ஆறு காண்டங்கள் மட்டும் படிப்பர். அதில் ஏழாவது காண்டத்தையும் படிக்கலாம். குறையொன்றும் நேராது.

रामायणस्य पठनं यदाऽऽरभ्येत हि कचित् ।
तद्ग्रन्थस्य पुरस्तात्तु कोऽपि नासीत सर्वथा ।। ५३

शृणोति तत्र ह्यासीनो हनुमान् राघवीं कथाम् ।
स्वस्थाने यः समासीनस्तं शपेत्स तु कोपतः ।। ५४

सर्वशास्त्रार्थपारज्ञो भक्तियुक्तो रघूत्तमे ।
वाल्मीकि हृदयाभिज्ञः शब्दसारार्थसारवित् ।। ५५

प्रवक्तृत्वेऽधिक्रियेत ह्यन्यथा हनुमान् शपेत् ।
श्रोतृभिश्च प्रवक्ता तु पूजनीयः प्रयत्नतः ।। ५६

तच्च मत्वा रघूत्तंसमादृताः शृणुयुः कथाम् ।
दुग्धेन मधुनाऽऽज्येन भोजयेत्तं दिने दिने ।। ५७

वस्त्रैराभरणैश्चित्रैः स्तुतिभिश्चापि पुष्कलैः ।
संमानयेत्प्रवक्तारं आदावन्ते च मध्यतः ।। ५८

एतदुद्देशतः प्रोक्तं श्रीरामायणवैभवम् ।
यः पठेच्छृणु याद्वाऽपि भक्त्याऽध्यायमिमं नरः ।
श्रीरामस्य प्रसादस्य पात्रं स भवति ध्रुवम् ।। ५९

*ராமாயணம் படிக்கத் தொடங்கு முன் படிப்பவர் முன் ஹனுமார் தோன்றி அமர்ந்து அதைக் கேட்பார். அதனுல் படிப்பவர் முன் எவரும் அமரக் கூடாது. (அங்கொரு ஆஸனத்தை ஹனுமானுக்கென இடுவர்.) தன்னிடத்தில் அமர்பவரிடம் ஹனுமானுக்குக் கோபம் வரலாம். படிப்பவரும் எல்லா சாஸ்த்ரங்களில் கரை கண்டவராக பக்தியுடன் வால்மீகியின் உள்ளமுணர்ந்தவராக சொல்லுக்கும் பொருளுக்கும் பொருளாகுபவருக்கும் உள்ள தொடர்பை உணர்ந்தவராக இருத்தல் வேண்டும். தகுதியற்றவர் படித்தால் ஹனுமாருக்குக் கோபம் வரும். விளக்குபவரிடம் கேட்பவர்கள் ராமனே தன் கதையைக்*

*கூறுகிறார் என்ற எண்ணத்துடன் நல்லாதரவும் பக்தியும் கொண்டு கதை கேட்பதுடன் உணவிட்டு ஆடை முதலியவற்றையளித்து தொடக்கத்திலும் இடையிலும் முடிவிலும் பாராட்ட வேண்டும். அவ்வாறு சொல்பவரும் கேட்பவரும் ஸ்ரீ ராமனது அருள் பெறுவர்.*

## द्वितीयोऽध्यायः

### அத்யாயம் - 2

युधिष्ठिर उवाच-

भगवन्सर्वधर्मज्ञ अपारकरुणानिधे।
रामायणेतिहासस्य काम्यपाठक्रमं वद।। १

कथं वा कामिभिः पाठ्यं कं वा नियममाश्रितैः।
एतदाख्याय मां सद्यः पावय त्वं महामुने।। २

दाल्भ्य उवाच-

सम्यक्पृष्टं महाराज रामदिव्यकथामृतम्।
पुनीयात्त्वां च मां चैतान् रामायणमहानदी।। ३

चतुराननवक्त्राब्जात् श्रीरामायणवैभवम्।
श्रुत्वा जगाद धर्मात्मन् नारदो भगवानृषिः।। ४

*யுதிஷ்டிரர் தால்ப்பியரிடம் ராமாயணத்தின் காம்ய பாட முறையைக் கேட்க நாரதர் பிரும்மாவிடம் கேட்டறிந்த முறையை அவர் தெரிவித்தார். ராமாயணம் எனும் பெரு நதி நான்முகனின் வாயிலிருந்து வெளியானது. அது எல்லோரையும் தூய்மைப்படுத்தும்.*

नारद उवाच-

रामस्य चरितं प्रोक्तं मया वाल्मीकये पुरा।
श्रुत्वा मत्तस्तु निखिलं मुनिः काव्यं चकार हि।। ५

प्रोच्यते तस्य काव्यस्य माहात्म्यं कथमीदृशम्।
अन्ये च मुनयः केचिद्रामस्य चरितं शुभम्।। ६

निबध्नन्ति स्वकैर्वाक्यैः न तेऽत्र कथमादरः।
प्रमार्जयैनं सन्देहं चरणाब्जं नतोऽस्मि ते।। ७

நாரதர் பிரும்மாவிடம் கேட்டார். முன் ஒரு நாள் வால்மீகிக்கு நான் ராமன் கதையைச் சொன்னேன். அதைக் கேட்ட அவர் அதைக் காவியமாக்கினார். அதற்கு இத்தனை பெருமையா ? வேறு சில முனிவர்கள் ராமனின் சரிதத்தை எழுதியுள்ளனர். அவற்றில் நீர் ஆதரவு காட்டவில்லை. விளக்குவீர் என-

ब्रह्मोवाच-

न तेऽत्र संशयः कार्यो वत्स सर्वात्मना मुने।
सुबहूनि निबध्नन्ति काव्यानि बहवो भुवि।। ८

श्रीराघवकथाढ्यानि युक्तियुक्तानि चैव हि।
न मे तत्रादरं चेतः करोति मधुरेष्वपि।। ९

वाल्मीकिरुपदेशं तु गृहीत्वा तव बुद्धिमान्।
भक्तियुक्तो रघूत्तंसे धृतचित्तोऽभवत्तदा।। १०

राघवः परमात्माऽथ रहस्याहूय मां प्रभुः।
आदिदेश स्वचरितं प्रकटीकर्तुमुद्यतः।। ११

பிரும்மா கூறினார். உனக்கு இதில் ஐயம் வேண்டாம். பலர் ராமனின் கதையைத் தொகுத்துள்ளனர். கதை மிக அழகாக அமைந்திருந்தும் இனியவையாயிருந்தும் எனக்கு அதில் ஈர்ப்பில்லை. உன்னிடமிருந்து ராம சரிதத்தைக் கேட்ட வால்மீகி ராமனிடம் பக்தி கொண்டு அவரிடமே தம் செயலனைத்தையும் ஒப்படைத்தார். அப்போது ராமன் தன் வரலாற்றை வெளியிட முனைந்தவராக தனிமையில் என்னிடம் இவ்வாறு ஆணையிட்டார்.

श्रीराम उवाच-

चतुरास्य तवेदानीं कार्यं किमपि गोपितम्।
तत्ते कर्तव्यमचिरात् मम प्रियचिकीर्षया ॥ १२

संसारसिन्धुतरणं जनाः कर्तुमनीश्वराः।
मत्कथासंज्ञितां नावं प्राप्य नन्दन्तु निर्वृताः ॥ १३

इति मे बुद्धिरुत्पन्ना तदर्थं चाहुतो भवान्।
अवतारक्रिया पूर्णा रावणो निहतो रिपुः ॥ १४

भोक्ष्ये त्वच्छापमित्येव भृगवेऽहं वरं ह्यदाम्।
तदर्थं यत्नमास्थास्ये इति कार्यद्वयं मतम्॥ १५

शृङ्गारविरलं दुःखशोकायासनिरन्तरम्।
मच्चरित्रं यथावत्तु कः समर्थो निबन्धितुम्॥ १६

वाल्मीकिर्नारदमुनेः आकर्ण्य चरितं मम।
द्रवचित्तोऽभवत्सद्यः कौमुद्या चन्द्रकान्तवत्॥ १७

मन्येऽहं मच्चरित्रस्य ग्रथने तस्य योग्यताम्।

*ஸ்ரீ ராமன் பிரும்மாவிடம் கூறினார்:- உமக்கொரு பணி உள்ளது. அது ரகசியமாகச் செய்யத்தக்கது. ஸம்ஸாரக் கடலில் மூழ்கிய மக்கள் அதிலிருந்து கரையேற எனது கதை என்ற ஓடத்தைப் பற்றிக் கொண்டு வெளியேறி மகிழ்ச்சி பெறட்டும். அதற்காகவே உம்மைக் கூப்பிட்டேன். அவதாரப் பணி முடிந்தது. ராவணன் அழிந்தான். பிருகுவிடம் உமது சாபத்தை இந்த அவதாரத்திலேயே அனுபவிப்பதாக உறுதி கூறினேன். இவ்விரண்டு பணிகள் நிறைவுற வேண்டும். என் கதையில் இனிய வாழ்க்கை இன்பம் மிகக் குறைவு. துயரமும் சோகமும் ஆயாசமும் தொடர்ந்து உள்ளது. நாரதர் மூலம் என் கதையைக் கேட்டறிந்த வால்மீகி மனமிளகியுள்ளார். என் கதையைத் தொகுக்க அவர் மிகவும் ஏற்றவர்.*

खरादिनिधनाद्भीतः शङ्कुकर्णो निशाचरः ॥ १८

दण्डकारण्यतो भूत्वा क्रौञ्चरूपसमाश्रयः ।
बाधतेऽद्य मुनींस्तस्मात्तस्य कार्यो वधो मया ॥ १९

मन्मायामोहितः सोऽथ दुष्टो वाल्मीकिसन्निधौ ।
क्रीडिष्यति समं वध्वा रूपे तदनुरूपया ॥ २०

तदा निषादरूपोऽहं वधिष्यामि निशाचरम् ।
स्त्रीणामवध्यता यस्मात् तस्मात्तां परिवर्जये ॥ २१

वाल्मीकिस्तु स्वया बुद्ध्या धृतश्चेदस्य दर्शनात् ।
शप्स्यते मां स्त्रीवियोगी भवेति रुषितः किल ॥ २२

इष्टं मे कार्यमेतत्स्यात् तस्य दातुं हि गौरवम् ।
अतः सरस्वतीं त्वं तु प्रेरयास्याननं प्रति ॥ २३

*கரன் முதலியவர்கள் அழிந்ததைக் கண்ட சங்கு கர்ணன் என்ற ராக்ஷஸன் க்ரௌஞ்சபட்சியின் உருவெடுத்துத் தண்டகாரண்யத்தில் முனிவர்களைத் துன்புறுத்துகிறான். அவனை நான் அழிக்க வேண்டும். என் மாயையால் மனம் குழம்பிய அந்த ராக்ஷஸன் அவனுக்கேற்ற பெண் க்ரௌஞ்சப் பறவையுடன் வால்மீகியின் எதிரே விளையாடுவான். வேடன் வடிவில் தோன்றி நான் அவனை அழிப்பேன். பெண் என்பதால் க்ரௌஞ்சப் பறவை வடிவில் உள்ள அவன் மனைவியைக் கொல்லமாட்டேன். வால்மீகியோ இதனைத் தன்னறிவால் கண்டு என்னை மனைவியிடமிருந்து பிரிவாய் எனக் கோபத்துடன் சபிப்பார். அது எனது விருப்பத்திற்குரியதே. அவருக்குப் பெருமை அளிக்க ஸரஸ்வதியை அவரது வாக்கில் இருக்குமாறு அனுப்புவீர்.*

मच्चरित्रं तवादेशादथासौ ग्रथयिष्यति ।
तच्च श्रोष्यामि कालेन स्वयमेव वृतोऽखिलैः ॥ २४

मच्चरित्रपरीक्षायां साधु वाऽसाधु वेति हि।
प्रवक्तुं कोऽर्हति पुमान् मां विना प्रतिपादितम्॥ २५

प्रायेण चरितं मे हि वनेषु चलितं त्वभूत्।
तद्गच्छ प्रेरय गिरां देवीमस्याननं प्रति॥ २६

इति प्रतिसमादिष्टो वाणीं संप्रेरयं ततः।
वाल्मीकिर्नियमायाथ तमसामगमन्नदीम्॥ २७

*என் வரலாற்றை உமது உத்தரவால் அவர் தொகுப்பார். நான் எல்லோருடன் கூடி அமர்ந்து ஒரு சமயம் கேட்பேன். என் வரலாறு சரியாக உள்ளதா இல்லையா என்பதை வேறு எவர் சோதிக்க இயலும் ? கதையின் நாயகனை நானே அதனையறிவேன். என் வரலாறு பெரும்பாலும் காட்டில் நடந்தது. உடன் சென்று ஸரஸ்வதியை அவரது வாக்கில் அமரச் செய்வீர் என அவர் ஆணையிட நானும் ஸரஸ்வதியை அனுப்பினேன். வால்மீகி அன்றாடக் கடமைகளைப் புரிய தமஸா ஆற்றிற்கு வந்தார்.*

तस्मिन्पश्यति तत्रैव वृक्षे कुत्रापि दंपती।
क्रौञ्चौ चिक्रीडतुर्हर्षात् कामबाणवशानुगौ॥ २८

तयोः पुमांसं वेगेन व्याधो विव्याध बाणतः।
तदुद्वीक्ष्य महाप्राज्ञो वाल्मीकिः सुमहातपाः॥ २९

रुवन्त्यां करुणं तत्र क्रौञ्च्यां निर्विण्णमानसः।
सुरतासक्तयोर्घातो न धर्म्य इति जज्ञिवान्॥ ३०

शशाप स मुनिस्तत्र व्याधमाकृष्टकार्मुकम्।
मा निषाद प्रतिष्ठां त्वमगमः शाश्वतीः समाः॥ ३१

यत्क्रौञ्चमिथुनादेकमवधीः काममोहितम्।
शपन्निति मुनिः क्रोधादुत्तरक्षण एव हि॥ ३२

नापश्यत निषादं तं तां क्रौञ्चीं तं च वृक्षकम्।
चिन्तयामास च मुनिर्मायेयं कस्यचिद्भवेत्।। ३३

अन्यथा हि कथं सर्वं दृष्टनष्टं भवेदिदम्।
इति चिन्ताकुलः स्नात्वा समाप्य नियमांश्च सः ।। ३४

स्वाश्रमं पुनरायातः परिक्लिष्टेन चेतसा।

*அங்கொரு மரத்தில் இரு க்ரௌஞ்சப் பறவைகள் தம்பதி, காம வசத்தால் மகிழ்ச்சியுடன் விளையாடிக் கொண்டிருப்பதை வால்மீகி பார்த்தார். வேடன் அவற்றில் ஆணை அம்பால் அடித்தான். பெண் பறவை பரிதாபப்படும்படி அழுததைக் கண்ட வால்மீகி சிற்றின்பத்தில் ஈடுபட்டுள்ளவரைக் கொல்வது அடாத பாபச் செயல் என உணர்ந்து வில்லை இழுத்துக் குறி பார்த்துக் கொண்டிருக்கிற வேடனைச் சபித்தார். ''வேடனே! க்ரௌஞ்சப் பறவைகள் சிற்றின்பத்தில் திளைக்கும் போது காமத்தால் மயங்கிய ஆண் பறவையைக் கொன்றதால் நீ வெகு காலத்திற்கு நிலைத்து வாழ மாட்டாய்'' கோபத்தால் சபித்த அவர் முன்னிருந்த மரமும் பறவைகளும் உடன் மறைந்தன. இது மாயையோ ! கண்ணால் கண்டது மறைந்தது எப்படி ! இவ்வாறு சிந்தித்து மனம் நொந்து கொண்டே தன் ஆசிரமம் வந்தார்.*

ततोऽहमगमं तत्र स्मरन्नाज्ञां रघुप्रभोः ।। ३५

सावित्र्या च सरस्वत्या हंसयुक्तरथे स्थितः ।
अभ्यर्चितश्च तेनाथ ससंभ्रममहं तदा।। ३६

वाक्यं वल्मीक जन्मानमब्रवं रचिताञ्जलिम्।
ब्रह्मोवाच-
ब्रह्मन् वल्मीकिसंभूत मा भूश्चिन्तासमाकुलः ।। ३७

कृता माया भगवता परीक्षार्थं हृदस्तव।
परदुःखासहिष्णुत्वाहृत चित्तोऽसि सांप्रतम्॥ ३८

मयैव प्रेरिता तुभ्यमियं देवी सरस्वती।
स्वयं मुखान्निर्गता ते ज्ञातस्ते वचसो रसः॥ ३९

ईदृशैरेव सरसैः पद्यैरन्यैश्च भूरिशः।
कुरु रामकथां पुण्यां यथा ते नारदाच्छ्रुतम्॥ ४०

रामत्वेनावतीर्णस्य हरेरद्भुतकर्मणः।
जन्मारभ्य स्वधामाप्तिपर्यन्तां सरसां कथाम्॥ ४१

पुण्यां सुललितार्थां च अतीतानागताश्रयाम्।
आश्रित्य सुमहत्काव्यं सर्गबन्धोज्ज्वलं कुरु॥ ४२

*நான் ஸ்ரீ ராமனின் ஆணைப்படி ஸாவித்ரியுடனும் ஸரஸ்வதியுடனும் ஹம்ஸங்கள் பூட்டிய தேரில் வால்மீகியின் இருப்பிடம் சென்றேன். பரபரப்புடன் அவரது வரவேற்பை ஏற்றுக் கொண்டு கை கூப்பி நிற்கும் அவரிடம் சொன்னேன். ''வால்மீகியே! கவலைப்படாதீர். பகவான் மாயையால் உமது உள்ளத்தைச் சோதிக்க இந்நிகழ்ச்சியை நடத்தினார். பிறரது துயரைக் காணப் பொறுக்காதது உமது உள்ளம். தேவி ஸரஸ்வதியை நான் தான் உம் வாயில் குடி புக அனுப்பினேன். அவள் உம் சொல் வழியே வெளிப்பட்டாள். உம் சொல்லின் சுவை உணர்ந்தேன். இவ்வகைச் சொற்களால் ராமனின் கதையை நாரதரிடம் கேட்டவாறு அமைப்பீர். வியக்கத்தக்க செயல் புரிகிற விஷ்ணு ராமனாக அவதரித்துள்ளார். அவரது பிறவியிலிருந்து வைகுண்டம் செல்லும் வரை உள்ள வரலாறு சுவை மிக்கது. அதனை முன் - பின் வரலாற்றுடன் செய்வீர்.*

वाल्मीकिरुवाच-

चतुरानन लोकेश सर्वधर्मप्रवर्तक।
निमग्नोऽस्मि सुधासारे श्रीराम चरिताह्वये।। ४३

जाने पुरुषमीशानं रामं रघुकुलोद्भवम्।
आचार्यानुपादिष्टाया विद्याया वीर्यशून्यताम्।। ४४

विज्ञाय नारदमुनेः प्राप्तं रामकथामृतम्।
यदि शक्तोऽस्मि रामस्य चरितं पुण्यवत्तमम्।। ४५

काव्यात्मना संग्रथितुं यदि चानुग्रहस्तव।
वक्ष्यामि रघुनाथस्य कथां काव्यात्मना शुभाम्।। ४६

तवानुग्रहतो भूयात्काव्ये मे नानृतं क्वचित्।
न च मिथ्याप्रलपितं प्रब्रूयुर्मां बुधा भुवि।। ४७

श्लोकानामखिलानां च तात्पर्यं सुमहद्भवेत्।
रसाः शृङ्गारकारुण्य हास्यवीरादयोऽखिलाः ।। ४८

तत्र तत्र मयोद्दिष्टा भूयासुश्च यथोचितम्।
न कश्चिदपशब्दो मे न च किञ्चिद्वृथा पदम्।। ४९

श्रीरामचरिते भूयान्मत्काव्यस्यार्चनीयता।
पठन श्रवणाभ्यां मे काव्यस्य सकृदप्यहो।। ५०

पुरुषार्थाश्च सर्वेऽपि भूयासुर्भुवि सर्वतः।

*வால்மீகி கூறினார்:- தர்மமனைத்தையும் தூண்டுபவரே! ஸ்ரீ ராமனின் வரலாறு என்ற அமுதச்சாற்றில் மூழ்கியுள்ளேன். ரகு குலத்தில் தோன்றிய ராமனை புருஷோத்தமரான ஈசனென்றறிவேன். ஆசாரியன் உபதேசிக்காத வித்யை வீர்யமற்றதென உணர்ந்து நாரத முனிவரிடமிருந்து அமுதம் போன்ற கதையைப் பெற்றேன். என்னால் ராமனது*

*வரலாற்றைக் காவியமாக இயற்ற இயலுமெனில் அதற்கு உங்களது அருள் உள்ளதெனில் காவியமாக இந்த மங்கள வரலாற்றைத் தொகுப்பேன். உமது அருளால் அதில் நேர்மையற்றதோ பொய் புலம்பலோ இருக்கக் கூடாது. சுலோகங்கள் பொருள் பொருந்தியதாக, சிருங்காரம் முதலிய ரஸங்கள் அடங்கியதாக அமைய வேண்டும். அபசப்தமோ, பயனற்ற சொல்லோ இருக்கக் கூடாது. ராமனின் வரலாற்றுக்குப் பிரமாண நூலாக அது அமைய வேண்டும். என் காவியம் வழிபடத் தக்கதாகட்டும். இதனைப் படிப்பவர் புருஷார்த்தங்கள் அனைத்தையும் பெறட்டும்.*

ब्रह्मोवाच-

वल्मीकजन्मन्सुमुने रामनामप्रभावतः ॥ ५१

शापात्त्वं नीचवृत्तस्थोऽप्येवं जातो मुनीश्वर।
नाम्न एवं प्रभावश्चेद्रामस्य परमात्मनः ॥ ५२

किमु तच्चरितांभोधौ प्लवनादघनाशने।

*பிரும்மா கூறினார் :- தாழ்ந்த பிறப்புள்ள நீர் ராம நாமத்தின் பெருமையால் சிறந்த முனிவரானீர். பரமாத்மாவான ராமனின் நாமத்திற்கே பாபத்தைப் போக்குவதில் இந்தப் பெருமையெனில் அவரது வரலாற்றுக் கடலில் நீந்துபவன் எந்நிலை பெறுவான் ?*

वाल्मीकिरुवाच-

न ज्ञायते कथं ब्रह्मन् रामनामप्रभावतः ॥ ५३

एवं मुनिरहं जातः शापश्च मम कीदृशः ।

*வால்மீகி கேட்டார் :- எனக்கு நேர்ந்த சாபம் எத்தகையது ராமனின் பெயரைக் கூறியதால் முனிவராக எப்படி ஆனேன் ?*

वर्णने त्वच्चरित्रस्य न कालोऽयं तथाऽप्यहम् ॥ ५४

तवौत्सुक्यनिवृत्त्यर्थं संक्षेपात्तत् ब्रवीमि ते ।
वरुणस्य सुतः पूर्वं त्वमभूर्हरिताभिधः ।। ५५

कदाचित्तव गेहे तु वरुणेन समाहुताः ।
मुनयः सनकाद्यास्तु सङ्गता ब्रह्मवादिनः ।। ५६

सञ्जजल्पुर्मिथस्तत्र श्रुतिस्मृत्याश्रयाः कथाः ।
प्रसङ्गेन च रामस्य हरेरवतरिष्यतः ।। ५७

वधाय दशकण्ठस्य कथां ते चक्रिरे तदा ।

*பிரும்மா கூறினார் :- உன் வரலாற்றையறிய இது நேரமல்ல. உன் அவாவை நிறைவு செய்ய அதனைக் கூறுகிறேன். நீ முன் பிறவியில் வருணனின் ஹரிதன் என்ற மகனாயிருந்தாய். உன் வீட்டில் வருணன் அழைத்ததால் ஸனகர் முதலான முனிவர்கள் கூடி வேதம் முதலானவற்றில் உள்ள கதைகள் பற்றி விவாதித்தனர். நடுவில் விஷ்ணு ராவணனை அழிக்க ராமனாக அவதரிக்க விருப்பதைப் பற்றிப் பேசினர்.*

क्रीडापरवशस्त्वं तु तदा भूर्गृहबर्हिणा ।। ५८

तत्केकाभिश्च ते हासैः कथाविघ्नो बभूव ह ।
सनत्कुमारः कुपितः शशाप त्वां तदा किल ।। ५९

यस्माल्लोकोत्तरकथाविघ्नाय किल दर्पतः ।
पक्षिणा क्रीडसे तस्माद्व्याधत्वं तु गमिष्यसि ।। ६०

इत्युक्ते वचने तेन संभ्रान्ता मुनयोऽखिलाः ।
त्वं तु निश्चेतनो जातो वरुणो दुःखितोऽभवत् ।। ६१

प्रसादयामास मुनिं पिता ते शापशान्तये ।
ततः प्रसन्नः स मुनिः पुनस्त्वां वाक्यमब्रवीत् ।। ६२

तव भ्रातुर्भृगोर्वंशे प्रचेता नाम वै मुनिः ।
आस्तेऽयं दण्डकारण्ये तपः कुर्वन्सुदुश्चरम् ।। ६३

भवितासि सुतस्तस्य वेदवेदाङ्ग पारगः ।
कालेन व्याधवृत्तिश्च भवितासि गिरा मम ।। ६४

सप्तर्षीणां प्रसादेन रामनामप्रभावतः ।
पूतो भूत्वा तपः कृत्वा मुनिवर्यत्वमेष्यसि ।। ६५

इत्युक्त्वा स मुनिर्यातः त्वं च प्राचेतसोऽभवः ।
वेदवेदाङ्ग निष्णातो ह्यभूस्त्वं बाल्य एव च ।। ६६

*வீட்டு மயிலுடன் விளையாடி வந்த நீ உன் சிரிப்பாலும் மயிலின் குரலாலும் முனிவர்களின் பேச்சிற்கு இடையூறு செய்தாய். உடன் கோபமடைந்த ஸனத் குமாரர் உன்னை ''உலகில் சிறந்த ராம கதைக்கு மயிலுடன் விளையாடி இடையூறு விளைவித்ததால் வேடனாவாய்'' எனச் சபித்தார். நீ உடன் நிலைவிழந்தாய். உன் தந்தை வருணன் துயருற்று முனிவரை சாந்தப்படுத்திச் சாபத்தைக் குறைக்க வேண்டினார். முனிவர் உன்னைச் சாபத்திலிருந்து விடுவித்தார். ''உன் தமையன் பிருகுவின் வம்சத்தில் பிறந்துள்ள பிரசேதா என்ற முனிவரின் பிள்ளையாகப் பிறப்பாய். மிகக் கடுமையாகத் தவம் புரியும் அவருக்கு மகனாகி வேத வேதாங்களில் கரை கடந்த அறிவு பெற்று விளங்குவாய். எனினும் என் சாபத்தை ஒட்டி வேடனாவாய். ஸப்தர்ஷிகளின் அருளால் ராம நாம ஜபம் செய்ததன் விளைவாக பாபம் விலகி முனிவராவாய் என்று கூறிச் சென்றார். நீயும் பிரசேதாவிற்கு மகனாகி வேத வேதாங்கங்களில் தேர்ச்சி பெற்றாய்.*

समित्कुशादीनाहर्तुं जातु त्वं वनमध्यगः ।
बहूनानयतो बद्धान् वध्यमानांश्च वै मृगान् ।। ६७

पश्यंस्त्वं रममाणोऽभूर्व्याधेन मुनिशापतः ।
आहूतोऽपि च पित्रा त्वं नाध्यगच्छः स्वमाश्रमम् ।। ६८

नैषाद्या वर्तमानस्त्वं वृत्त्या हिंसन्मृगान् खगान्।
परिणीय च भिल्लानां कन्यां कामपि संयतः ॥ ६९

पुत्रानुत्पादयंस्तस्यां भरंस्तांश्च मृगैः खगैः।
कुटुम्बभरणात्खिन्नो बहुवर्षसहस्रकम् ॥ ७०

ஒரு நாள் ஸமித்தும் தர்ப்பையும் கொணரக் காட்டின் நடுவே சென்ற நீ பல மிருகங்களையும் பறவைகளையும் பிடித்துக் கொணர்ந்து கொல்கின்ற வேடர்களை முனிவரின் சாபம் காரணமாக ஆர்வத்துடன் கண்டாய். தந்தை அழைத்தும் ஆசிரமம் செல்லாமல் வேடனின் தொழிலில் ஈடுபட்டு மிருக பக்ஷிகளைக் கொன்று வேடப் பெண்ணை மணந்து மக்களைப் பெற்று அவர்களையும் பறவை - மிருக மாமிசத்தால் வளர்த்தாய். குடும்பத்தைச் சுமந்து பல்லாண்டுகள் வாடினாய்.

जातु त्वं वनमध्यस्थस्तरुस्थं ह्यवधीः शुकम्।
पलायितः स च शुकः स च बाणोऽपतत्त्वयि ॥ ७१

तेन विद्धांसदेशस्त्वं रुदितो वेदनावशात्।
तदा सप्तर्षयो मार्गागतास्त्वां वीक्ष्य कंपिताः ॥ ७२

दैन्यराशिं त्वामथोचुर्दययाऽपि परिप्लुताः।
अहो मूर्ख त्वमेतत्ते विप्रो भूत्वा कुलोद्भवः ॥ ७३

ईदृशीं वृत्तिमापन्नोऽस्यरे निष्कृतिवर्जिताम्।
यथा त्वं खिद्यसे मूढ बाणेनानेन विध्यता ॥ ७४

तथा मृगविहङ्गानां व्यथा किं नेति ते मतिः।
स्वमांसं परमांसेन यः पुष्णाति नराधमः ॥ ७५

रुरवो भक्षयिष्यन्ति तस्य मांसं यमालये।
न त्वं निर्विद्यसे मूढ अपीमां वेदनां गतः ॥ ७६

इत्युक्ते वचने तैस्तु करुणार्द्रितमानसः ।
कालयोगात्तु निर्विण्णः सञ्जातस्त्वं मृगात्ययात् ।। ७७

ஒரு நாள் காட்டின் நடுவே மரத்தின் மீதிருந்த கிளியை அடித்தாய். கிளி பறந்து விட்டது. மரத்தில் மோதிய பாணம் திரும்பி உன் தோளில் பாய்ந்தது. வலி தாங்காமல் புலம்பினாய். ஸப்தருஷிகள் அவ்வழி வந்தனர். பரிவால் உன்னை அணுகி உன்னிடம் கூறினர். ''அந்தணர் வம்சத்தில் பிறந்த நீ கழுவாயில்லாத இந்தத் தொழிலில் இறங்கினாய். உன்னைப் போல் உன்னால் அடிப்பட்ட பறவைகளும் மிருகங்களும் துடித்திருக்காதா ? மற்ற பிராணியின் மாம்ஸத்தால் தன் மாம்ஸத்தைப் போஷிப்பவன் யமனுலகில் மானுக்கு உணவாவான். இந்தக் கடும் வலியை உணர்கிற நீ இன்னமும் செய்த தவற்றை உணரவில்லையா ?'' என்றனர். உடன் நீ விதியால் நிலையுணர்ந்து பச்சாத்தாபமடைந்தாய்.

तान ब्रवीः प्राञ्जलिस्त्वं तेभ्यो न त्वाऽथ दूरगः ।
अहो अधन्यता मेऽद्य यदहं विप्रवंशजः ।। ७८

भूत्वाऽपि वृद्धिमापन्नो मृगमांसैः स्वयं हृतैः ।
पश्चात्तसोऽस्म्यहं प्रेष्ठाः प्रायश्चित्तं वदन्तु मे ।। ७९

तुष्टा वयं त्वद्विनयादिच्छामस्त्वद्विनिःसृतिम् ।
किं तु त्वं पतितो जातः प्रायश्चित्तं न ते श्रुतम् ।। ८०

वक्ष्यामोऽथापि कृपया त्वं कुरुष्व यथोदितम् ।

நீ அவர்களிடம் கை கூப்பி வணங்கி தூரத்தில் நின்று விண்ணப்பித்தாய். ''நான் அந்தணராக பிறந்தும் மிருக மாம்ஸத்தைத் தானே கொணர்ந்து உடலை வளர்த்தேன். இன்று அந்தக் குறை உணர்கிறேன். இதற்கான கழுவாயைக் கூறுவீர்''என்றாய். ''உன் அடக்கத்தைக் கண்டு மகிழ்கிறோம். நீ செய்த பாபங்களுக்குக் கழுவாய் இல்லை. எனினும் வழி கூறுகிறோம். அதன்படி நடப்பாய்.

पात्रापात्रविचारो न रामनाम्नां प्रकीर्तने ।। ८१

श्रवणे चोपदेशो च तस्मात्तत्तेऽद्य तु क्षमम् ।
रामनाम समुच्चार्य यस्मात्पापान्न मुच्यते ।। ८२

त्रिलोक्यामस्ति तन्नैव सत्यमेतत्प्रकीर्तितम् ।
जातोऽद्यैव रघोर्वंशे रामनाम वहन्हरिः ।। ८३

त्वं तदाम्नाय भक्त्याऽद्य मोक्ष्यसे सर्वपातकैः ।
उपविश्याश्वत्थमूले कामक्रोधौ विसृज्य च ।। ८४

आजानु बाहुं दीर्घाक्षं नीलकुञ्चितमूर्धजम् ।
प्रगृह्य वामहस्तेवन चापं सव्येन सायकम् ।। ८५

प्रावृषेण्यपयोवाहस्वच्छकान्तिमनो हरम् ।
निष्काभरणविस्तीर्णवक्षसं वनमालिनम् ।। ८६

सुप्रसन्नमुखांभोजं सुमृष्टमणिकुण्डलम् ।
चिन्तयन् राघवं बुद्धया रामनाम जपादृतः ।। ८७

उपकृत्येति कृपया निवृत्तास्ते स्वकं पदम् ।

ராமனின் நாமத்தைக் கூறுவதற்குத் தகுதி அனைவருக்கும் உண்டு. அதனை உனக்கு உபதேசிப்பதும் நீ அதனைக் கேட்பதும் நல்லதே. ராம நாமத்தைச் சொல்வதால் நீங்காத பாபம் இல்லை. ரகுவின் வம்சத்தில் இப்போது ஹரி ராமன் என்ற பெயரில் தோன்றியுள்ளார். நீ அவர் பெயரைக் கூறுவாய். உன் பாபங்கள் விலகும். அரசமரத்தடியில் அமர்ந்து காமத்தையும் கோபத்தையும் விலக்கிப் பக்தியுடன் கூறுவாய். முழங்கால் வரை நீண்ட கைகள், நீண்ட கண்கள், கருங்கூந்தல், இடது கையில் வில், வலது கையில் அம்பு, கார்மேக மேனி ஒளி, ஆபரணம் பூண்ட அகன்ற மார்பு, வனமாலை, தெளிந்த முக அழகு, பளபளக்கிற காதணிகள், ராமன் இவ்வாறு இருப்பார்.

அவரை உள்ளத்தில் கண்டு அவரது பெயரை இடைவிடாது ஜபிப்பாய். இவ்வாறு கருணையுடன் உனக்கு உதவி விட்டு அவர்கள் தன் இருப்பிடத்திற்குத் திரும்பினர்.

त्वं ततः पुत्रदारादिचिन्तामुत्सृज्य दूरतः ॥ ८८

राम रामेति रामेति जपन्निश्चलतां गतः ।
कालेनाल्पेन ते देहं वल्मीकः प्रावृणोन्महाम् ॥ ८९

अतीते वत्सरे काले त्वस्थिमात्रावशेषितम् ।
जपन्तं राम रामेति वल्मीकाच्छादिताङ्गकम् ॥ ९०

रामनामजपान्मुक्तपातकं त्वां विचिन्तयन् ।
अहं कमण्डलुजलैरभ्युक्ष्य त्वां न्यबोधयम् ॥ ९२

कायं च पूर्ववत्कृत्वा तपसे त्वां समैरयम् ।
स्ववृत्तिमनुचिन्त्य त्वं यतः खिन्नोऽभवः पुरा ॥ ९३

अतीतानां विस्मरणं ततोऽहमददां तव ।
ततः शुद्धात्मतां प्राप्य मुनिश्रेष्ठत्वमागतः ॥ ९४

நீ அதன் பிறகு மனைவி மக்களை மறந்து ராம ராம எனக் கூறிக் கொண்டே அசைவின்றிருந்தாய். உன் மீது பெரும் புற்று மூடியது. ஓராண்டில் எலும்பு மட்டுமாக ராம நாம ஜபித்ததால் பாபம் நீங்கிய உன்னை கமண்டுலு நீர் தெளித்து நினைவுக்குக் கொணர்ந்தேன். உடலை முன் போல் திடமாக்கினேன். நீ அப்போதும் வேடனாக இருந்த நிலை குறித்து நொந்து கொண்டதால் பழைய நினைவுகள் ஏற்படாமல் செய்தேன். தூய நிலைப் பெற்று முனிவர்களில் சிறந்தவனானாய்.

यस्त्वं वल्मीकतो जातो वाल्मीकिरिति तद्भवान् ।
वाल्मीकिरिति तेन त्वं ख्यातो नाम्नाऽमुनैव ते ॥ ९५

ख्यातो लोके सर्वलोकैः रामनाम्नाऽसि संमतः ।
तस्मात्त्वं कुरु रामस्य चरितं काव्यरूपतः ॥ ९६

न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति ।
रसपुष्टिर्भावपुष्टिः श्लोकानां ते भविष्यति ॥ ९७

न चापशब्दो भविता न चार्थगुणविच्युतिः ।
प्रमाणं रामचरिते काव्यं तव भविष्यति ॥ ९८

रहस्यं च प्रकाशं च श्रीरामचरितं महत् ।
तवैव विदितं भूयात् नान्यो ज्ञास्यति तत्त्वतः ॥ ९९

इत्युक्ते च मया तत्र वाक्यमूचे सरस्वती ।

*வல்மீக (புற்று)த்திலிருந்து வெளியானதால் வால்மீகி என்ற பெயரால் நீ புகழ்ப் பெறுவாய். அதனுல் ராமனின் வரலாற்றைக் காவியமாக அமைப்பாய். உன் காவியத்தில் பொய்யான சொல் இடம் பெருது. ரஸமும் பொருள் செறிவும் நிறைந்திருக்கும். சொற்குற்றமோ பொருட்குற்றமோ இராது. ராமனின் வரலாற்றிற்குப் பிரமாணமாக உன் காவியம் இருக்கும். அவரது வரலாற்றில் ரகசியமான நிகழ்ச்சியையும் வெளிப்படையான நிகழ்ச்சியையும் நீ மட்டுமே அறிவாய். இவ்வாறு நான் கூறியதும் ஸரஸ்வதி கூறினுள்.*

मा भूत्ते काव्यकरणे भयं शब्दार्थसंश्रयम् ॥ १००

यदा यदा कर्षसि मां शब्दतश्चार्थतोऽपि वा ।
तदा तदाऽनुयास्ये त्वां त्वदाशयवशानुगा ॥ १०१

तव यत्नं विनैवाहं रसं भावं च पोषये ।
त्वन्मूलतः कृतार्था स्यामुक्त्वा रामकथां मुने ॥ १०२

त्वन्मार्गालंबनाद्ये वै कवयो राघवीं कथाम्।
विवक्षन्तीह तेषां च भविष्यामि वशानुगा ॥ १०३
इत्युक्तवत्यां वाग्देव्यां सावित्री वाक्यमब्रवीत्।

''உனக்கு காவியமியற்றுவதில் சொல் - பொருளமைப்பில் பயம் வேண்டாம். நீ எப்படி விரும்புகிறாயோ அப்படி சொல்லாலும் பொருளாலும் உனது இழுப்பிற்கு வசப்படுவேன். உனது முயற்சியின்றி ரஸத்தையும் கருத்தையும் போஷிப்பேன். உன் மூலமாக நான் ராம கதையை வெளிப்படுத்தி நிறைவுறுவேன். உன்னைப் பின்பற்றி ராம கதையை அமைப்பவர்களுக்கும் நான் வசப்படுவேன்''. இவ்வாறு ஸரஸ்வதி கூறியதும் ஸாவித்ரி சொன்னாள்.

कुरु रामकथां पुण्यां काव्यरूपां मनोरमाम् ॥ १०४
प्रविष्टा स्यां च ते काव्ये प्रतिश्लोकसहस्रकम्।
विभक्तावयवा भूत्वा चतुर्विंशतिधा ह्यहम् ॥ १०५
काव्यचिन्तैकमनसा त्वया चेदनुपस्थिता।
न ते कुप्यामि बुद्धेश्च प्रसादं ते ददाम्यहम् ॥ १०६
त्वन्मार्गालम्बतो ये स्यू रामस्य चरितं शुभम्।
काव्यात्मनोद्यताः कर्तुं यशसे वा धनाय वा ॥ १०७
प्रसीदामि च तेभ्योऽपि तेन मे स्यात्कृतार्थता।

''அழகிய காவியமாக ராமனின் கதையை அமைப்பாய். என்னை 24 எழுத்தாக ஆக்கிக் கொண்டு ஒவ்வொரு ஆயிரம் சுலோகங்களின் இடையில் ஒவ்வொரு எழுத்தாக வெளிப்படுவேன். காவியமியற்றுவதில் உள்ள ஈடுபாட்டால் அவ்வாறு ஒருக்கால் ஒரு எழுத்தைச் சேர்க்காவிட்டாலும் நீ அதனை உன் அறிவிற்கு உணர்த்துவேன். உன்னைப் பின் பற்றிப் புகழுக்காகவோ பொருளுக்காவோ காவியமியற்றுபவருக்கும் அருள்புரிவேன். அதனால் மன நிறைவு பெறுவேன்.

ब्रह्मोवाच-

इत्यवेमनुगृह्यैनं निवृत्ताः स्मो वयं मुने ।। १०८

अथायं ज्ञानतो वीक्ष्य कृत्स्नां रामस्य सत्कथाम् ।
राघवस्य प्रसादेन अस्माकं च विशेषतः ।। १०९

रामायणं महाकाव्यं चकार चरितव्रतः ।
चतुर्विंशति साहस्रं श्लोकानामुक्तवानृषिः ।। ११०

गायत्र्याद्याक्षरं त्वादौ विन्यस्यारब्धवांस्ततः ।
प्रतिश्लोकसहस्रस्य समाप्तावेकमक्षरम् ।। १११

विनियुञ्जंश्च गायत्र्या न्यबध्नाद्राघवीं कथाम् ।
त्रिवर्गमात्रशरण शरण्यां प्रथमं मुनिः ।। ११२

श्रीरामस्य महीप्राप्तिर्यन्तां निर्ममे कथाम् ।
ततश्चतुर्वर्गपरैः सेवनीयां प्रयत्नतः ।। ११३

स्वधामप्राप्तिपर्यन्तां राघवस्याकरोत्कथाम् ।

*பிரும்மா கூறினார் :- ''இவ்வாறு நாங்கள் வால்மீகிக்கு அருள் புரிந்து திரும்பினோம். தன்னறிவால் ராமனது வரலாற்றை முழுதும் உணர்ந்து கதையை ராமனின் அருளாலும் எமது அருளாலும் ராமாயணம் என்ற காவியமாக அவர் இயற்றினார். காயத்திரியின் முதல் எழுத்துடன் தொடங்கி ஆயிரம் சுலோகங்களின் முடிவில் அடுத்தடுத்துள்ள எழுத்தைப் பதித்து இயற்றினார். அறம் பொருளின்பம் என்ற மூன்றில் பற்றுள்ள வருக்கென ராமன் மறுபடி ராஜ்யத்தை ஏற்பது வரை கதையை (யுத்த காண்டம் முடிய) முதலில் அமைத்தார். பின் முக்தியுடன் அறம் பொருள் இன்பம் பெறுபவருக்காக ராமன் தன் இருப்பிடமான வைகுண்டம் சேரும் வரையான கதையை அமைத்தார்.*

तस्मादुक्तं नित्यपाठे मुमुक्षूणां च पाठके ॥ ११४

सप्तापि काण्डाः पाठ्याः स्युः षट्काण्डाः फलकाम्यया ।
तस्मान्नारद वाल्मीकिप्रोक्ता रामस्य सत्कथा ॥ ११५

प्रशस्ता सर्वलोकेषु स च तत्करणान्मुनिः ।
उपदेष्टृत्वाच्च तस्याः कथायास्ते यशः कृते ॥ ११६

आद्ये सर्गे वर्णितस्त्वं श्लाघ्यस्त्वं तेन पावितः ।
एवं त्वया कृताः प्रश्नाः सम्यगुत्तरिता मया ।
मुने रामायणं कृत्स्नं चर गायन्नितः परम् ॥ ११७

*அதனால் தான் நித்ய பாடத்திலும் மோக்ஷ பாடத்திலும் ஏழு காண்டங்களும் படிக்கத்தக்கவை. ஒரு பயனை எதிர் பார்த்துப் படிக்க ஆறு காண்டங்கள் போதுமானவை. இதனால் தான் வால்மீகியின் ராமாயணம் சிறப்பு பெற்றது. அதனை வால்மீகிக்கு உபதேசித்ததால் நீ சிறப்பு பெற்றாய். முதல் ஸர்கத்தில் அதனால் நீ இடம் பெற்றாய். அதனால் தூய்மை பெற்றாய். அதனால் இனி மேலும் வால்மீகி ராமாயணத்தைப் பாடிக் கொண்டே வலம் வருவாய்!'' என்றார்.*

## तृतीयोऽध्यायः

### அத்தியாயம் - 3

नारद उवाच-

तात प्रीतोऽस्मि सञ्जातो रामायणकथाश्रवात् ।
इतः परं तां गास्यामि वीणाहस्तश्चरन्मुहुः ॥ १

मन्ये पूज्यतमं लोके वाल्मीकिं मुनिपुङ्गवम् ।
श्रीरामायणवेदस्य काम्यपाठः कथं पितः ॥ २

लोकनाथ मम ब्रूहि शुश्रूषोः प्रणतस्य च ।

நாரதர் கூறினார் :- ராமாயணம் தோன்றிய வரலாற்றைக் கேட்டு மகிழ்கிறேன். இனி வீணையில் அதனைப் பாடிக் கொண்டே அடிக்கடி உலகில் சுற்றுவேன். வால்மீகி மஹரிஷி உலகில் அனைவரால் பாராட்டத்தக்கவர். ஸ்ரீ ராமாயணம் ஒரு வேதம். அதன் காம்ய பாட முறையை அறிய விரும்புகிறேன்.

## सुन्दरकाण्डस्य सप्तसर्गपारायणक्रमः

### ஸுந்தரகாண்டத்தில் ஸப்தஸர்கபாராயணமுறை

ब्रह्मोवाच-

धन्योऽसि नारद मुने वक्ष्यामि शृणु ते हितम् ।। ३

श्रीरामायणवेदस्य काम्यपाठविधिक्रमम् ।
चतुर्विधः काम्यपाठः तत्तत्कालोचितः स्मृतः ।। ४

श्रीमत्सुन्दरकाण्डस्य सप्तसर्गप्रपाठनम् ।
सर्वाभीष्टप्रदं प्रोक्तममराणामपीहितम् ।। ५

शुभे दिवसनक्षत्रे संकल्प्य विधिपूर्वकम् ।
यथाशक्ति सुवर्णेन रजतेनाथ ताम्रतः ।। ६

रामस्य लक्ष्मणस्यापि वैदेह्याश्च हनूमतः ।
विधाय प्रतिमास्ताश्च प्रतिष्ठाप्य यथाविधि ।। ७

पूजयेद्दर्भपुञ्जे वा त्वरा चेद्रघुनन्दनम् ।
सहस्रनामभिर्विष्णो रभ्यर्च्यश्च दिने दिने ।। ८

पठेत्सुन्दरकाण्डस्य सप्तसर्गी विधानतः ।
यदा तु सप्तमः सर्गः काण्डस्यान्तिमसर्गकः ।। ९

भविष्यति तदन्तं तु सप्तसर्गान्पठेद्व्रती ।
अथ श्रीरामचन्द्रस्य सर्गं राज्याभिषेचने ।। १०

पठित्वा पूजयित्वा च पठनं तु समापयेत् ।
समाप्तिदिवसे कुर्यात् बहुब्राह्मणभोजनम् ।। ११

यद्यद्विचिन्तितं चित्ते तत्सर्वं तु समश्नुते।

பிரும்மா ராமாயணத்தின் காம்ய பாட முறையை நாரதருக்கு விளக்குகிருர். காம்ய பாடம் நான்கு விதம். முதலாவது ஸுந்தர காண்டத்தின் ஸப்த ஸர்க்க பாராயண முறை. அது விரும்பியதனைத்தையும் தரும். நல்ல நாளில் முறைப்படி விரும்பியதைப் பெற ஸங்கல்பித்து தங்கம், வெள்ளி, தாமிரம் இதில் ஏதேனும் ஒன்ருல் வடித்த ஸீதையும் லக்ஷ்மணனும் ஹனுமானும் உடன் இருக்கும் ஸ்ரீ ராமனது விக்ரஹத்தை வடித்து பிராணப் பிரதிஷ்டை செய்து விஷ்ணு ஸஹஸ்ர நாமாவளியால் அர்ச்சனை செய்து ஸுந்தர காண்டம் படிக்கத் தொடங்கலாம். உலோக விக்ரஹம் அமைக்க முடியாவிடில் தர்ப்பை முஷ்டியில் ராமன் முதலானேரை ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து பாராயணம் தொடங்கலாம் முதல் நாள் முதல் 7 ஸர்க்கங்கள். இரண்டாவது நாள் 8 முதல் 16 ஸர்க்கங்கள் என்றவாறு திரும்பத் திரும்பப் படித்து ஸுந்தர காண்டத்தின் கடைசி ஸர்க்கம் என்று ஏழாவது ஸர்க்கமாக அமைகிறதோ என்று பூர்த்தி செய்து ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் பாராயணம் செய்து ஸ்ரீ ராமனைச் சிறப்பாக வழிபட்டு அந்தணர் பலருக்கு உணவிட்டுப் பூர்த்தி செய்வர். இது ஸப்த ஸர்க்க பாராயண முறை.

(இதன் விவரம் பின்வருமாறு ஸுந்தர காண்டம் 68 ஸர்க்கங்கள் கொண்டது. கடைசி ஸர்க்கம் ஏழாவது ஸர்க்கமாக வர 68 நாட்களாகும். முதல் நாள் 1-7, 2வது நாள் 8-14, (3) 15-21 (4) 22-28 (5) 29-35 (6) 36-42 (7) 43-49 (8) 50-56 (9) 57-63 (10) 64-68 மறுபடி 1-2 (11) 3-9 (12) 10-16 (13) 17-23 (14) 24-30 (15) 31-37 (16) 38-44 (17) 45-51 (18) 52-58 (19) 59-65 (20) 66-68 மறுபடி 1-4 (21) 5-11 (22) 12-18 (23) 19-25 (24) 26-32 (25) 33-39 (26) 40-46 (27) 47-53 (28) 54-60 (29) 61-67 (30) 68 மறுபடி 1-6 (31) 7-13 (32) 14-20 (33) 21-27 (34) 28-34 (35) 35-41 (36) 42-48 (37) 49-55 (38)56-62 (39) 63-68 மறுபடி 1, (40) 2-8 (41) 9-15 (42) 16-22 (43) 23-29 (44) 30-36 (45) 37-43 (46) 44-50 (47) 51-57 (48) 58-64 (49) 65-68 மறுபடி 1 - 3 (50) 4-10 (51) 11-17 (52) 18-24 (53) 25-31 (54) 32-38 (55) 39-45 (56) 46-52 (57) 53-59 (58) 60-66 (59) 67-68 மறுபடி 1-5

*(60) 6-12 (61) 13-19 (62) 20-26 (63) 27-33 (64) 34-40 (65) 41-48 (66) 49-55 (67) 56-62 (68) 63-68.*

*இவ்வாறு ஸுந்தரகாண்டத்தின் ஸப்த ஸர்கீ பாராயணம் 68 நாட்களில் நிறைவுபெறும்.*

पुनर्वसुपारायणक्रमः

புனர்வஸுபாராயணமுறை

अथ रामायणस्यास्य पाठं वक्ष्ये पुनर्वसौ ।। १२

भुक्तिमुक्तिफलं सूते पाठस्तस्य पुनर्वसौ ।
निर्माय मण्डपं दिव्यं नानालङ्कारशोभितम् ।। १३

रत्नैर्वा मौक्तिकैर्वापि धातुभिर्वा विशेषितैः ।
कृत्वा चित्रा रङ्गवल्लीस्तत्र वेदिं विधाय च ।। १४

अतो व्रीहीन्प्रस्थमात्रान् तुषहीनान्प्रसार्य च ।
तावन्मात्रांश्चन्द्रशुभ्रांस्तुदुपर्यपि तुण्डुलान् ।। १५

ततश्चणकखण्डांश्च निस्तुषान् प्रस्थमात्रकान् ।
ततस्तिलान्प्रस्थमात्रांस्ततो माषांस्तथाविधान् ।। १६

तदुपर्यपि गोधूमैर्मुद्गैर्वा हरितैर्भृतम् ।
घटं संस्थाप्य तच्छृङ्गे नालिकेरफलोपरि ।। १७

सुवर्णप्रतिमां सीतारामलक्ष्मण शोभिनीम् ।
निधाय च प्रतिष्ठाप्य सर्वोपकरणैर्युतः ।। १८

पूजां पुरुषसूक्तेन विधाय च यथाविधि ।
अनुज्ञाय द्विजानग्र्यान् नान्दीश्राद्धं विधाय च ।। १९

हिरण्येनैव पूर्णेन तोषकेण द्विजन्मनाम् ।
श्रीमद्रामायण कोशेऽथ रामपूजां विधाय च ।। २०

पुनर्वसुदिने शुद्धे काले सङ्गवनामके।
आञ्जनेयस्वरूपांश्च श्रोतॄन् भक्तान् रघूत्तमे ।। २१

वृत्वा यथासंभवं च कृत्वा चित्तं रघूत्तमे ।
नारदेनोपदिष्टार्थसर्गमारभ्य भक्तितः ।। २२

उच्चैःस्वरं रागयुक्तं पठेत्सर्गांस्तु विंशतिम्।

*ராமாயணத்தை புனர்வஸு பாராயணக் கிரமத்தில் படிப்பது இம்மையிலும் மறுமையிலும் மேன்மை தரும். மங்களமான புனர்வஸு கூடிய நாளில் காலை ஸங்கவ வேளையில் (பகலின் நேரத்தை 5 பாகங்களாக்கினால் 2வது பாகம் ஸங்கவம்). நன்கு அலங்கரித்த மண்டபத்தில் கோலமிட்டு மேடையில் வாழையிலை - பட்டு விரித்து அதன் மீது வரிசையாக நன்கு தூசு நீக்கிய நெல், அரிசி, கடலை, எள், உளுந்து, பயறு, இவற்றை ஒன்றன் மீதொன்றாக. ஒவ்வொன்றும் பிரஸ்த அளவு (பிரஸ்தம் 1.600 கிலோ/லிட்டர்) பரப்பி அதன் மீது நீருள்ள கலசம் வைத்துத் தேங்காயால் மூடி அதன் மீது ஸீதா லக்ஷ்மணருடன் உள்ள ராமப்பிரதமை வைத்து பிராணப் பிரதிஷ்டை செய்து புருஷஸூக்தத்தால் 16 உபசாரங்களும் செய்து வழிபடவும். அந்தணர் அனுமதி பெற்று நாந்தீ சிராத்தம் செய்து ஸ்ரீ ராமாயண புஸ்தகத்திலும் ராமனை வழிபட்டு, ராம பக்தர்களைக் கதை கேட்கிற ஆஞ்சநேயராகவரித்து ராமனிடம் உள்ளத்தைப் பதித்து நாரதர் உபதேசித்த ஸங்க்ஷேப ராமாயணத்திலிருந்து (பாலகாண்டம் முதல் ஸர்க்கத்திலிருந்து தினமும் 20 ஸர்க்கங்கள் உரத்த குரலில் ராகத்துடன் கானமாகப் படிக்க வேண்டும்.)*

स्वयमेव पठेच्छक्तो यदि सर्गानविक्लबम् ।। २३

न चेद्विप्रमुखेनैव पठेत्तत्स्यात्तु मध्यमम्।
पठितं यच्च भुक्तेन यच्च व्यग्रेण वा पुनः ।। २४

यच्चास्पष्टपदं भूयात् तत्सर्वं निष्फलं स्मृतम्।
मध्याह्ने तु समायाते पाठं कृत्वा समाप्य च ।। २५

पञ्चोपचारैः संपूज्य गुडान्नादिनिवेदनैः ।
ब्राह्मणान्भोजयेत्पश्चात् दधिमध्वाज्यसंयुतम् ।। २६

भोजनानन्तरं सर्वैः सह विश्रम्य किञ्चन ।
अधृत्वाऽपि च तांबूलमनाभाष्य च पुल्कसैः ।। २७

वक्तारं ब्राह्मणं श्रेष्ठं सर्वशास्त्रार्थपारगम् ।
वाक्यार्थचतुरं दान्तमलुब्धं सत्यवादिनम् ।। २८

नानोपचारैः संपूज्य तोषयित्वा च तं धनैः ।
पूर्वं वृत्वोपवेश्यैनमुच्चैरासनमण्डले ।। २९

उपवेश्य ततोऽधस्तात् रामे चित्तं निधाय च ।
पूर्वाह्णे पठितान्सर्वान् प्रार्थयेद्वाचयेति च ।। ३०

तदुक्तार्थांश्च शृणुयात् मङ्गलाशासनान्तकम् ।
ततः सायं विधिं कृत्वा विष्णोर्नामसहस्रतः ।। ३१

रघुनाथं समभ्यर्च्य ततो भुक्त्वा स्वपेत्क्रमात् ।

*சக்தியுள்ளவன் தானே படிப்பதே நல்லது. முடியாவிடில் அந்தணரைத் தனக்காகப் படிக்கச் செய்து தான் கேட்கலாம். சாப்பிட்டபின் படிப்பதோ கவனமின்றி படிப்பதோ எழுத்துப் புரியாதபடி படிப்பதோ பயனற்றது. பாராயணம் முடிந்ததும் அந்தணர்களுக்கு உணவளித்துத் தானும் உண்டு சிறிது களைப்பாறி, தாம்பூலம் சுவைக்காமல் கீழோருடன் கூடிப் பேசாமல், நல்ல விளக்க உரையாளர் மூலம் அன்று முற்பகல் படித்த பகுதியின் பொருளை விளக்கச் செய்யலாம். அவரை உயர்ந்த ஆஸனத்தில் அமர்த்தித் தான் கீழமர்ந்து கேட்கவேண்டும். மாலை ஸந்தியாவந்தனம் முதலியதை முடித்ததும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தால் ராமனை அர்ச்சித்து வழிபட வேண்டும்.*

एवं दिने दिने कुर्वन्नुपचारैरनुक्रमात् ।। ३२

पठित्वा विंशतिं सर्गान् वाचयेच्च यथाक्रमम्।
प्रत्येकदिवसे कुर्यादन्यान्यैः संभवे सुमैः ।। ३३

सहस्रनामभिः पूजां श्रीरामस्य पदाब्जयोः ।
सीतापाणिग्रहो यत्र यत्र सुग्रीवसङ्गमः ।। ३४

अङ्गुलीयकदानं च रावणस्य वधस्तथा ।
तत्र तत्र दिने कुर्यात्तूर्यलास्यपुरःसरम् ।। ३५

अभ्यर्चां रघुनाथस्य वक्तारं च प्रपूजयेत् ।
पठित्वैवं क्रमेणैव सप्तविंशतिवासरान् ।। ३६

पुनः पुनर्वसौ प्राप्ते रामस्य विदितात्मनः ।
पट्टाभिषेकसर्गं तु पठेन्मङ्गलपूर्वकम् ।। ३७

*இவ்வாறு தினமும் வழிபட்டு 20 ஸர்கங்கள் படித்து ராமனது திருவடிகளில் ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்வர். தினமும் வெவ்வேறு பூக்களாலும் அர்ச்சனை செய்யலாம். ஸீதா விவாஹம், ஸுக்ரீவ ஸங்கமம், அங்குலீய தானம், ராவண வதம் முதலிய நிகழ்ச்சிகளைப் படித்ததும் பாட்டு நர்த்தனம் முதலியவற்றால் கொண்டாடி விளக்க உரையாளருக்கு சிறப்பு ஸன்மானம் வழங்குவர். இவ்வாறு புனர்வஸுவிலிருந்து 27 நாட்கள் பாராயணத்தால் ராமாயணம் நிறைவுறும். அடுத்த புனர் வஸுவில் (28வது நாளில்) பட்டாபிஷேக ஸர்க பாராயணம் நடைபெறும். (பாலகாண்டம் 77, அயோத்யா காண்டம் 119, ஆரண்ய 75, கிஷ்கிந்தா 67, ஸுந்தர 68, யுத்த 131 என 537 ஸர்கங்கள் தினமும் 20 ஸர்க்கம் என 26 நாட்களில் 520 ஸர்க்கங்கள். மீதி 17 ஸர்க்கங்களை 27வது நாளில் படிப்பர். 28வது நாள் மறுபுனர்வஸுவன்று பட்டாபிஷேக ஸர்க்கம் படித்து நிறைவு செய்வர்.*

पुनः पुनर्वसुप्राप्तिः तारावृद्धिक्षयादिभिः ।
सप्तविंशे दिने चेत्स्यात्तदा तत्रैव वासरे ।। ३८

शिष्टान्सर्गान्वाचयेत्तु यावद्रामाभिषेचनम्।
अथ वृद्ध्या तु सा चेत्स्यादेकोनत्रिंशवासरे।। ३९

अष्टाविंशदिनं पाठशून्यं कृत्वार्चयेद्विभुम्।
एकोनत्रिंशदिवसे पठेत्पट्टाभिषेचनम्।। ४०

पूर्वेद्युः पाठ समये तं सर्गमवशेषयेत्।
प्रातः कालेऽह्नि यत्रातिव्याप्तिः दृष्टा पुनर्वसोः ।। ४१

आरभेत च तत्रैव तत्रैव च समापयेत्।
दिनद्वये समा चेत्सा रौद्रविद्धां परित्यजेत्।। ४२

*(நக்ஷத்திரத்தின் நாழிகைகள் 60 என்றவாறு கட்டுப்பட்டதல்ல. 60 நாழிகைக்கு மேல் கூடலாம். குறையலாம்.) அதனால் அடுத்த புனர்வஸு நக்ஷத்திரம் 27வது நாளிலும் வரலாம். 29வது நாளிலும் வரலாம். தினசரி நட்சத்திர நாழிகை மாறுபாட்டால் 27வது நாளில் புனர்வஸு வந்தால் 17 ஸர்க்கங்கள் பாராயணம் நிறைவு செய்வதுடன் பூர்த்தியாகும். நாழிகை கூடியதால் 29வது நாள் மறு புனர்வஸு வந்தால் 27ம் நாளன்று 16 ஸர்கம் படித்து 28ம் நாளன்று பாராயணம் செய்யாமல் பூஜையை மட்டும் செய்து விட்டு புனர்வஸுவன்று பட்டாபிஷேக ஸர்க்கத்துடன் பூர்த்தி செய்யலாம். காலை வேளையில் புனர்வஸு அதிக நாழிகை இருக்கும் நாளில் தொடங்குவதும் முடிப்பதும் உண்டு. இரு நாட்களிலும் புனர்வஸு ஸமமாக இருந்தால் திருவாதிரையுடன் கூடிய புனர்வஸு தவிர்க்கத்தக்கது.*

सप्तविंशावरान् विप्रान् दधिमध्वाज्यपायसैः ।
भोजयेत्परया भक्त्या ध्यात्वा राघवविग्रहान्।। ४३

वक्तारं पठितारं च यथाशक्ति प्रपूजयेत्।
एवमाराधिते रामे सर्वलोकशरण्यके।। ४४

वन्ध्या नारी प्रसूयेत पुत्रं सर्वगुणान्वितम्।
आपन्नो मुच्यते कृच्छ्रात् अपमृत्युं व्यपोहति ॥ ४५

अतिक्रान्तचिकित्साच्च रोगादुल्लाघतां व्रजेत्।
भक्तिं च रघुनाथस्य पादयोर्विन्दते दृढाम् ॥ ४६

अन्ते ज्ञानेन मुक्तिः स्यात् आन्तं स्याद्दुःखवर्जितः ।

*முடிவு நாளன்று 27 அந்தணர்களுக்கு உணவிட்டு ராகவனை உள்ளத்திலிருத்தி பாராயணம் செய்த வரையும் விளக்கம் தந்தவரையும் சக்திக்கேற்ப பூஜிக்க வேண்டும். மலடியும் மகனைப் பெறுவாள். நெருக்கடிகள் விலகும். துயரம் நீங்கும். கடும் நோயும் அகலும். ராகவனின் திருவடிகளில் பக்தி மிகும். பேரறிவு பெற்று வாழ்நாள் முழுதும் துயரமின்றி வாழலாம். முடிவில் முக்தி பெறலாம்.*

एष तूद्देशतः प्रोक्तो मया ते फलविस्तरः ॥ ४७

नाहं पटुः प्रवक्तुं स्यां संपूर्णफलविस्तरम्।
यं यं कामयेत कामं स स हस्ते भविष्यति ॥ ४८

मुमुक्षोरपि कार्यं स्यात् एतत्पारायणं भुवि।
एवं कर्तुमशक्तश्चेत् वित्तलोभं विना द्विजः ॥ ४९

यथाशक्त्यर्चयित्वा तु रामं सर्वार्थसिद्धिदम्।
पूर्वोक्तरीत्या सर्गाणां विंशतिं पठेत् ॥ ५०

तस्यापि फलसामग्र्यं दद्याद्धि रघुनन्दनः ।

*பொதுவாக இங்கு பயன் கூறப்பட்டது. பயனனைத்தையும் கூற என்னால் இயலாது. விரும்பியதனைத்தும் முக்தி உள்பட கிட்டும். இவ்வாறு செய்ய இயலாதவன் கஞ்சத்தனமின்றி சக்திக்கேற்ப ராமனை வழிபட்டு தினமும் 20 ஸர்க்கங்கள் படிக்கலாம். ராமன் அவனுக்கும் பூர்ண அருள் புரிவார்.*

नवरात्रपारायणक्रमः

நவராத்திர பாராயணமுறை

अतः परं प्रवक्ष्यामि नवरात्रे तु पाठनम् ।। ५१

चैत्रे वाश्वयुजे मासि प्रथमायां शुभे दिने ।

आरभ्य च नवम्यन्तं पठेत्प्रातरपि क्रमात् ।। ५२

दशम्यां रावणवधं पठित्वा तत्र वै दिने ।

राम पट्टाभिषेकसर्गस्य पठन्सर्गं समापयेत् ।। ५३

पूर्वोक्तविधिमातिष्ठेदत्रापि नियतो द्विजः ।

अशक्तः केवलं पाठमाचरेद्भक्तिसंयुतः ।। ५४

सर्वसिद्धिस्ततो भूयात् आधिव्याधी विनश्यतः ।

रघुनाथः प्रसन्नात्मा तस्य स्यादनुगः सदा ।। ५५

पुत्रमित्रकलत्रेषु न हानिं द्रक्ष्यते क्वचित् ।

*சித்திரை மாதத்தில் (வஸந்த நவராத்திரியில்) அல்லது ஆச்வயுஜத்தில் (புரட்டாசி - சரந்நவராத்திரியில்) சுக்கில பிரதமையாகிய சுப தினத்தில் தொடங்கி நவமீ வரை தினமும் முற்பகலில் முன் கூறிய முறைப்படி படித்துத் தசமியன்றி ராவண வதம் தொடங்கி பட்டாபிஷேகம் வரை படித்து நிறைவு செய்யலாம். ஸ்ரீ ராமன் அருளால் அனைத்து சுப பலன்களையும் பெறலாம். தன் மக்களுக்கு எந்தக் குறையும் நேராமல் இனிது வாழ்வான்.*

ऐच्छिकपारायणविधिः

விருப்பத்திற்கேற்பப் பாராயணமுறை

अथ रामायणस्यास्य वक्ष्ये मुनिवरोत्तम ।। ५६

पारायणं त्वैच्छिकं यत्कालापेक्षा न तत्र हि ।

महाव्याधिसमुद्भूतौ विश्लेषे बन्धुजाययोः ।। ५७

राष्ट्रक्षोभे च दुर्भिक्षे भूपालाच्च भयागमे ।

यस्यां कस्यां च तारायां जन्मर्क्षेऽथ विशेषतः ।। ५८

श्रीरामायणकाव्यस्य पारायणमथाचरेत्।
न सर्गसंख्यानियमो न घटस्थापनादिकम्॥ ५९

न चापि दिनसंख्याऽत्र पारायणसमापने।
मन्द्रस्वरं पठेत्सर्गान् यथासौकर्यमेव च॥ ६०

भुक्त्वा तु न पठेत्किञ्चित् न च प्रवचनं चरेत्।
पुष्पैर्लब्धैश्च तुलसीदलैर्बिल्वदलैरपि॥ ६१

विष्णोर्नामसहस्रेण प्रयतः पूजयेत्प्रभुम्।
सर्वसंकल्पसिद्धिः स्यादेतावन्मात्रके कृते॥ ६२

முன் கூறிய ஸர்க்க நியமங்களின்றி, நேரக் கட்டுப்பாடின்றி விளக்க உரை இன்றி மூலபாராயணம் மட்டும் செய்யும் முறை இது. பெருநோய் பாதிப்பு, உறவினர் மனைவி மக்கள் பிரிவு, தேசக் கலவரம், பஞ்சம், அரசின் பயமுறுத்தல் இவைகளை நீக்க அருள் கிட்டும். பிறந்த நட்சத்திரம் அல்லது எந்த நாளிலும் ஸர்க்க எண் நியமமின்றி கலசஸ்தாபனம் முதலிய நியமமின்றி நாட்கணக்கின்றி முடிந்த அளவு ஸர்க்கங்கள் படிக்கலாம். உணவேற்குமுன் படிப்பது நல்லது. கிடைத்த பூக்களால் துளஸியால் பில்வ இலையால் விஷ்ணு ஸஹஸ்ர நாமாவளியால் ஸ்ரீ ராமனை அர்ச்சிக்கலாம். விரும்பியது நிறைவேறும்.

जन्मलग्नवशाद्वाऽपि चन्द्रलग्नवशादपि।
ग्रहाणां क्रूरता यस्मिन्काले भवति दुःखदा॥ ६३

विशेषेणार्कपुत्रस्य चन्द्रपुत्रस्य वा गुरोः।
दशा चान्तर्दशा यत्र काले भवति दुःखदा॥ ६४

आत्मपीडा दारपुत्रपीडा चापि धनक्षयः।
तदा रामायणं भक्त्या काम्यपाठ क्रमात्पठेत्॥ ६५

प्रसङ्गादेष कथितः पाठो रामायणस्य तु।

ஜன்ம லக்னப்படி அல்லது சந்திர லக்னப்படி கிரஹங்கள் குரூரத் தன்மை பெற்று கேடு விளைவிக்கக் கூடும்.

தனக்கும் மனைவி மக்களுக்கும் பீடை, பொருள் நஷ்டம், ஏற்படும். ராமாயணத்தைக் காம்ய பாட முறைப்படி படிக்கலாம்.

पुनर्वसुत्रयापेक्षपारायणविधिः

மூன்று புனர்வஸுக்களில் பாராயணமுறை

ऐच्छिकं तुर्यपाठं तु काम्यं वक्ष्यामि नारद ॥ ६५

पुनर्वसौ समारभ्य तृतीयेऽथ पुनर्वसौ।
समापये त्प्रतिदिनं पठेच्च दशसर्गकान् ॥ ६६

गीताया एकमध्यायमपि भक्त्याऽऽदृतः पठेत्।
गृहे देवालये वाऽपि रामचन्द्रस्य सन्निधौ ॥ ६७

पूजयित्वा चंपकैर्वा पद्मैर्वा तुलसीदलैः।
विष्णोर्नाम्नि सहस्रेण पायसापूपमिश्रितम् ॥ ६८

निवेदयित्वा दिव्यान्नं आरभेत ततः परम्।
अनुज्ञाप्य द्विजान्स्वर्णैः सङ्कल्प्य च यथाविधि ॥ ६९

पुण्याहवाचनं कृत्वा कृत्वा शुद्धं च मण्डपम्।
श्रोतारमेकं वृत्वा च पठेद्वै दशसर्गकान् ॥ ७०

सायमर्थप्रवचनं नावश्यकमिहेरितम्।
विष्णोर्नाम्नां सहस्रेण रामनाम्नां शतेन वा ॥ ७१

अभ्यर्च्य रात्रौ श्रीरामं तसक्षीरं निवेदयेत्।
पाठस्य बहुकालेन साध्यत्वाद् दैवयोगतः ॥ ७२

आशौचेनाथवा रोगैः राज्योपप्लवनादपि।
यजमानस्य विघ्नश्चेत् स्वस्थानेऽन्यं प्रकल्पयेत् ॥ ७३

यजमानः पठेद्भक्त्या पाठमेनं दिने दिने ।
अशक्तश्चेत्तु शृणुयात् पाठकं परिकल्प्य च ।। ७४

च तुः पञ्चाशताऽहोभिः दशसर्गक्रमेण तु ।
एवं पारायणं कृत्वा तृतीये तु पुनर्वसौ ।। ७५

पूर्वोक्तेन क्रमेणैव श्रीमतो राघवप्रभोः ।
महोत्सवं प्रकुर्वीत साकं राज्याभिषेचनम् ।। ७६

पठित्वा पूजयित्वा च पाठं तत्र समापयेत् ।

*நான்காவது முறை இது. ஒரு புனர்வஸு அன்று தொடங்கி மூன்றாவது புனர்வஸுவில் முடிப்பது இதன் முறை. தினம் 10 ஸர்க்கங்களும் கீதையில் ஒரு ஸர்க்கமும் படிக்கவும். வீட்டிலோ கோயிலிலோ ராமனின் ஸந்நிதியில் படித்து, சம்பகப்பூ, தாமரைப்பூ, துளஸி இவற்றால் விஷ்ணுவின் ஆயிரம் நாமங்களால் அர்ச்சித்து பாயஸம் அப்பம் வடை அன்னம் நிவேதனம் செய்து தொடங்கவும். அதன் முன், அந்தணர்களிடம் அனுமதி பெறுதல், ஸங்கல்பம், புண்யாஹவாசனம், மண்டபசுத்தி, கேட்பவர் ஒருவரை வரித்து ராமனை வழிபட்டுத் தொடங்கவும். ராமனின் 108 நாமங்களைச் சொல்லியும் அர்ச்சிக்கலாம். இரவில் ராமனுக்குக் காய்ச்சிய பால் நிவேதனம் செய்யவும். நீண்ட நாட்கள் விரதம் கொள்வதால் தீட்டு நோய் அரசாங்க நெருக்கடி முதலியவற்றால் நெருக்கடி ஏற்பட்டால் தனக்கு மாற்றாக இன்னொருவரை வரிக்கலாம். தனக்கே இயலாமை இருந்தால் பிறரை வரித்துப் படிக்கச் செய்து மூன்றாவது புனர்வஸுவில் புனர்வஸு பாராயண முறைப்படி ராமனுக்கு உற்சவம் கொண்டாடி பட்டாபிஷேக ஸர்க்கம் படித்து ராமனை வழிபட்டு பாராயணத்தை நிறைவு செய்யலாம்.*

काम्यपाठस्त्वयं वत्स करणीयः सुखेन च ।। ७७

सुलभः स्याद्दरिद्राणामपि सर्वार्थसिद्धिदः ।
आवश्यकस्त्रिवर्गस्य मर्त्यानां कामनावताम् ।। ७८

पुनर्बसुमहापाठ उत्तमोत्तम ईरितः ।
अन्ये पाठाश्चोत्तमाःस्युर्यस्मात् त्रैवर्गिका हि ते ।। ७९

इत्युक्तो गुणविस्तारः संग्रहान्नारदाद्य ते ।
श्रीरामायणवेदस्य काम्यपाठ क्रमस्य तु ।। ८०

विस्तराद्वक्तुमीशः स्यात्स एव रघुनन्दनः ।
गच्छ कामं चरन्पुत्र गायन् रामायणं सदा ।। ८१

*இது எளிதில் நிறைவுறக் கூடிய காம்யபாட முறை ஏழைக்கும் எளிதில் நிறைவுறும். விரும்பியதைத் தரும். அறம் பொருள் இன்பம் பெற அவசியமான காம்ய பாடம். வேறு பாட முறைகளும் உண்டு. எல்லாமே நல்லவை தான். ஸ்ரீ ராமாயணம் எனும் வேதத்தைப் படிப்பதால் ஏற்படுகிற நலனை முழுதும் கூற இயன்றவர் ஸ்ரீ ராமன் ஒருவரே. ராமாயணத்தைப் படித்துக் கொண்டு உலகைச் சுற்றி வா என பிரும்மா கூறியதை நாரதர் கூறினார்.*

दाल्भ्य उवाच-

श्रुत्वा रामायणस्येत्थं माहात्म्यं नारदो मुनिः ।
नत्वा चतुर्मुखं सद्यो वाल्मीकिमभिगम्य च ।। ८२

तं नमस्कृत्य बहुशः प्रशस्य च पुनः पुनः ।
गीतं कुशलवाभ्यां च श्रुत्वा रामायणं ततः ।। ८३

रामं नन्तुमथागच्छदयोध्यां मुनिभिः सह ।

*தால்ப்யர் தர்ம புத்தரரிடம் கூறுகிறார் :- ராமாயணத்தின் பெருமையை பிரும்மாவிடமிருந்து கேட்டறிந்த நாரதர் அவரை வணங்கி விடை பெற்றுப் பின் குசலவர்களால் பாடப்பட்டதையும் கேட்டு ராமனை வணங்க அயோத்திக்கு முனிவர்களுடன் வந்தார்.*

अत्रान्तरे मृतं पुत्रमादायागान्नृपान्तिकम् ।। ८४

विप्रः कोऽपि शपन् रामं तदैनं नारदोऽब्रवीत्।
प्रभो राघव धर्मज्ञ सर्वभूतहिते रत ।। ८५

किञ्चिज्ज्ञ इव भासीह द्विजात्मजमृतिं प्रति।
शूद्रः करोति च तपो दण्डकायां वने क्वचित् ।। ८६

तं हत्वा जीवय सुतं ब्राह्मणस्य कृपावशात्।
इति श्रुत्वा रघुवरः पुष्पकायां सहायुधः ।। ८७

शंबूकाख्यं दण्डकायां शूद्रं हत्वा तपस्विनम्।
जीवयित्वा द्विजसुतमगस्त्यमभिवाद्य च ।। ८८

गतः पुनरयोध्यां च वाजिमेधेन चेजिवान्।

*இதனிடையே ஒரு அந்தணரின் இறந்த தன் மகனை ராமனின் எதிரே கிடத்தி ராமனை ஏசினான். தண்டகாவனத்தில் ஒரு சூத்ரன் இந்த அந்தணரின் மகன் இறப்பதற்காகத் தவம் செய்துள்ளான். அவனைக் கொன்று இவனைப் பிழைப்பிப்பாய் என்று நாரதர் கூறியதும் ராமன் அவனைக் கொன்று அந்தணர் மகனைப் பிழைக்கச் செய்தார். அகஸ்தியரை வணங்கி அசுவமேத வேள்வி நடத்தினார்.*

निर्माय पर्णशालां तु नारदो मुनिभिः सह ।। ८९

गंगाद्वारे महापुण्ये रामपूजनतत्परः ।
पुनर्वसौ समारभ्य श्रीरामायणमादृतः ।। ९०

सर्गाणां विंशतिं नित्यं पठित्वा विधिपूर्वकम्।
वक्तारं कल्पयित्वाऽत्र वाल्मीकिं मुनिपुंगवम् ।। ९१

व्रतं समापयामास पुनः प्राप्ते पुनर्वसौ।

*நாரதர் முனிவர்களுடன் கங்காத்வாரம் சென்று ராமனை வழிபட்டு, புனர்வஸுவில் தொடங்கி தானே முறைப்படி தினமும் 20 ஸர்க்கங்கள் படித்து வால்மீகியைக் கொண்டு*

விளக்கச் செய்தார். மறுபுனர் வஸுவில் விரதத்தை நிறைவு செய்தார். (ராமாயணத்தைச் சுருக்கமாக நாரதர் சொல்ல வால்மீகி முதலில் கேட்டார். இப்போது வால்மீகி விளக்க விரிவாக நாரதர் கேட்டார்.)

अथ दृश्यत्वमापन्नः साक्षात्तत्रोटजाङ्गणे ॥ ९२

स्निग्धेन्दीवरपत्राभः पद्मरक्तान्तलोचनः ।
युक्तः किरीटकटक केयूराङ्गुलि भूषणैः ॥ ९३

वनमालायुतोरस्कः पूर्णचन्द्रनिभाननः ।
मन्दस्मितप्रभारूढ बिंबोष्ठविल सन्मुखः ॥ ९४

वामहस्तेन कोदण्डं दक्षिणेन च सायकम् ।
बिभ्रत्तूणौ च संपूर्णौ निशितैः सायकोत्तमैः ॥ ९५

पार्श्वस्थया च सर्वाङ्गभूषणोज्ज्वलया पुनः ।
सपद्मकरया देव्या सेव्यमानश्च सीतया ॥ ९६

अग्रे धृताञ्जलिं प्रह्वं हनुमन्तं कृपाढ्यया ।
दृष्ट्याऽनुगृह्णंस्तमपि प्रसन्नवदनेक्षणम् ॥ ९७

सेव्यमानो लक्ष्मणेन पार्श्वे प्राञ्जलिना मुदा ।
नारदस्तु तमालोक्य प्रणिपत्य सहस्रशः ॥ ९८

स्तुत्वा बहुविधैः स्तोत्रैः वैदिकैर्लौकिकैरपि ।
पाहि पाहीति च ततोऽब्रवीत्प्रेमाश्रुलोचनः ॥ ९९

அந்தக் குடிசையின் முன் ராமன் தோன்றினர். அல்லி இதழ் வண்ணம், தாமரை போன்று சிவந்த கண்கள், கிரீடம், கடகம், கோபூரம், மோதிரம் முதலிய ஆபரணங்கள், மார்பில் வனமாலே, பூர்ண சந்திரன் போன்ற முகம், புன் சிரிப்பு துலங்கும் கோவைப் பழம் போன்ற சிவந்த உதடு, இடது கையில் வில், வலது கையில் அம்பு, தோளில்

*அம்புறாத்தூணியில் நிறைந்த அம்புகள், பக்கத்தில் தாமரை ஏந்திய ஸீதை, முன் வணங்கிக் கைகள் கூப்பி நிற்கிற அனுமன் மீது அருட்பார்வை, பக்கத்தில் வணங்கிக் கை கூப்பி நிற்கிற லக்ஷ்மணன், இந்த தோற்றத்தில் ராமனைக் கண்டு துதித்து காப்பாற்றுவீர், காப்பாற்றுவீர் என்று கண்ணீர் மல்க நாரதர் வேண்டி நின்றார்.*

वत्स नारद तुष्टोऽस्मि त्वद्रामायण पाठतः ।
पारायणात्पुनर्वस्वां विशेषानुग्रहो मम ॥ १००

यथाऽनेनास्मि तुष्टोऽद्य तथा न तपसा तव ।
रामायणं यत्र तत्र भक्तितोऽभक्तितोऽपि वा ॥ १०१

पठ्यते तत्र सान्निध्यमहं कुर्वे यथेह तु ।
यो वाञ्छति प्रसादं मे स तु रामायणं पठेत् ॥ १०२

श्रीमद्वाल्मीकिवचसां माधुर्यं मां प्रकर्षति ।
अहं चाकर्णयिष्यामि त्वया च त्वादृशैः सह ॥ १०३

स च कालो भवेच्छीघ्रं त्वमप्यागच्छ यत्नतः ।
व्रियतामद्य च वरो यथेष्टं प्रददामि ते ॥ १०४

*ராமன் சொன்னார் :- நாரதரே! நீர் ராமாயணம் படித்ததில் மிகவும் மகிழ்ந்தேன். புனர்வஸு பாராயணம் செய்தது மிகவும் மகிழ்ச்சி தருகிறது. அம்முறையில் பெற்ற திருப்தி தவத்தால் பெற முடியாது. பக்தியுடனோ பக்தி இல்லாமலோ ராமாயணம் படிக்குமிடத்தில் நான் இருப்பேன். என் அருள் பெற விரும்புபவன் ராமாயணம் படிக்கட்டும். வால்மீகியின் சொல்லினிமை என்னைக் கவர்கிறது. அந்த நேரம் வெகு விரைவில் வரும். நீரும் வருவீர். நீர் விரும்பியதைக் கேட்பீர் என்றார்.*

किमिहाद्य वरैः कार्यं निस्सङ्गस्य ममेतरैः ।
अयं वरो मे परमो यदेवं त्वां विलोकये ॥ १०५

दृष्टा मया शंखचक्रगदापीताम्बरान्विता।
कौस्तुभाभरणग्रीवा लक्ष्मीयुक्तोरसाऽन्विता॥ १०६

तव सा क्षीरपाथोधौ मूर्तिर्नारायणाह्वया।
वैकुण्ठस्थानगा मूर्तिर्भुजाष्टकविभूषिता॥ १०७

सुनन्दनन्दप्रमुखैः सेविता नित्यसूरिभिः।
दृष्टा तपःप्रभावेण कृपया दर्शिता त्वया॥ १०८

नरनारायणाभिख्ये लोकरक्षार्थमादृते।
तपस्विवेषे ते मूर्तिः दृष्टे बदरिकाश्रमे॥ १०९

सर्वावतारबीजात्मा वैराजी साऽपि ते तनुः।
नानाविश्वमयी दृष्टा श्वेतद्वीपे मया पुरा॥ ११०

न तथा हर्षमगमं यथाऽद्य तव दर्शनात्।
बाणकोदण्डपाणेश्च जानक्या सेवितस्य च॥ १११

दिव्यतेजोनिधेस्तेऽद्य दर्शनान्निर्वृणोम्यहम्।
मनो मे मोदतेऽत्यर्थं मन्ये पूर्वं न चेदृशम्॥ ११२

तदहं प्रार्थये त्वाऽद्य वरं सर्ववरोत्तमम्।
यदा यदाऽहं वाञ्छामि द्रक्ष्यामि त्वां तदा तदा॥ ११३

एवं बाणधनुष्पाणिं सीतालक्ष्मणसेवितम्।
अचञ्चला च त्वद्भक्तिः स्यान्मे कारुण्यतस्तव॥ ११४

किञ्चैवं काम्यपाठेन श्रीरामायणमादरात्।
पुनर्वसौ समारभ्य यः पठेद्विधिपूर्वकम्॥ ११५

भक्तितो दंभतो वाऽपि तस्य त्वं प्रीतमानसः।
धर्मार्थकाममोक्षाख्यं चतुर्वर्गं दिश प्रभो॥ ११६

पुत्रान्पौत्रान्संपदश्च ज्ञानमन्ते च सोऽश्नुताम् ।

நாரதர் கூறினார் :- பற்றற்ற எனக்கு மற்ற வரங்களால் ஆவதென்ன ? உம்மை நேரில் இன்று காண்கிறேனே இதுவே பெரும் வரம். பாற்கடலில் சங்கும் சக்ரமும் கதையும் பீதாம்பரமும் கௌஸ்துபமும் மார்பில் லக்ஷ்மியும் கொண்ட உம் திருவுருவத்தை நாராயணராகக் கண்டுள்ளேன். வைகுண்டத்தில் எட்டு கைகளுடன் ஸுநந்தர் நந்தர் முதலானோருடன் நித்ய ஸூரிகள் காண்கிற மூர்த்தியைக் கண்டுள்ளேன். பத்ரிகாசிரமத்தில் உலகைக் காக்க எடுத்த நர நாராயண ருஷி மூர்த்தி, எல்லா அவதாரங்களுக்கும் மூலப் பொருளான உலகமனைத்தும் மாறவிருக்கிற விராட் மூர்த்தி, இவை அனைத்தும் கண்டேன். ஆனால் வில்லும் அம்பும் ஏந்தி ஜானகியுடன் உள்ள இந்தக் காட்சி பேரமைதி தருகிறது. இதற்கு முன் இவ்வாறு கண்டதில்லை. விரும்பிய போது இம்மூர்த்தியைக் காண்பதே நான் கேட்கும் வரம். உம்மிடம் அசையாத பக்தியை அருள்வீர். இவ்வாறு புனர்வஸு பாடமுறையில் முறைப்படி ராமாயணத்தைப் பக்தியாலோ பெருமைக்காகவோ படிப்பவனுக்கு அறம் பொருளின்பம் முக்தி அனைத்தையும் இம்மையில் மக்களின்பமும் மறுமையில் முக்தியும் அருள்வீர் என்றார்.

श्रीराम उवाच-

सत्यमुक्तं त्वया ब्रह्मन् मद्भक्ता मामकीं तनुम् ।। ११७

कोदण्डपाणिं सन्द्रष्टुं समीहन्ते न चान्यथा ।
ईदृशी मे तनुः पूर्वं स्वतेजःपुञ्जसंवृता ।। ११८

कोटिसूर्यसमाभासा रक्तचन्दनसेविता ।
सीतया सेविता पार्श्वे वालव्यजनहस्तया ।। ११९

मायां दर्शनमात्रेण निहन्त्री भेदधीप्रदाम् ।
चिरमाशासमानाय मत्प्रसादाभिकांक्षया ।। १२०

सनत्कुमाराद्विज्ञाय ममाविर्भावमञ्जसा।
सारथ्यान्मन्त्रकृत्याच्च इक्ष्वाकुकुलसेविने ।। १२१
दर्शिताऽभूत्सुमन्त्राय प्रस्थितोऽहं यदा वनम्।
शबर्यै शरभङ्गाय वालिने च मुमूर्षवे ।। १२२
दर्शिताऽभूदिदानीं त्वं दृष्टवान्मत्कथाबलात्।

*ஸ்ரீ ராமன் கூறினார் :- என் பக்தர்கள் கோதண்டபாணியான இந்த உருவைக் காண விரும்புவர். இது உண்மையே. தன் ஒளியால் கோடி ஸூர்யர்கள் போல ஒளிர்கின்ற இந்த உருவம் செஞ்சந்தனம் பூசியதாக, சாமரவிசிறி ஏந்திய ஸீதையால் பணிவிடை பெற்று வேற்றுமை உணர்வைத் தருகிற மாயையை தர்சனத்தால் அகற்றுவதுமான இந்த உருவைக் காண விரும்பி என் அருளை எதிர்பார்த்துத் தேரோட்டி மந்திராலோசனை கூறி வந்த ஸுமந்திரர் ஸனத்குமார் மூலமாக நான் ராமராக அவதரித்துள்ளதை உணர்ந்து காட்டிற்கு என்னை ரதத்தில் ஏற்றிச் சென்ற போது என் திருவுருவைக் கண்டார். சபரீ, சரபங்கர், மரணத் தருவாயிலிருந்த வாலி, இவர்களும் கண்டனர். என் கதையைப் படித்ததால் நீரும் பெற்றீர்.*

नित्यं रामायणं ये वा पठेयुः कामतोऽपि वा ।। १२३
मुक्तये वाऽपि ते सर्वे एवंरूपं च मां मुने।
अन्ते दृष्ट्वा प्राप्नु युर्मां नात्र कार्या विचारणा ।। १२४
ये वा पुनर्वसुदिने समारभ्य यथाविधि।
श्रीमद्रामायणं भक्त्या पठेयुः पुत्रकाम्यया ।। १२५
धनाप्तये वा विपदां तारणायाथ वा मुने।
अन्ते तेषां सुप्रसन्नः पाठस्यास्य यथेप्सितम् ।। १२६
सर्वान्कामान् ददाम्येव न ते शोचन्ति भूतले।
प्रारब्धमपि दुःखं स्यात्तेषां निर्वीर्यमञ्जसा ।। १२७

தினந்தோறும் ராமாயணத்தை விருப்பம் நிறைவேறவோ முக்தி பெறவோ படிப்பவர்கள் என்னை இறுதியில் கண்டு என்னையே அடைவர். புனர்வஸு அன்று தொடங்கிப் படிப்பவர் மக்கட்பேறும் செல்வமும் ஆபத்து நீக்கமும் பெறுவர். துயரம் கொடுக்கத் தொடங்கியவினையும் (பிராப்தம்) வலிவிழக்கும்.

नाहं स्वाध्ययतो वापि बाह्यभ्यन्तरपूजनात्।
तपसो त्यागतो वाऽपि प्रसीदामि तथा मुने।। १२८

यथा रामायण कथापठनश्रवणादिभिः।
दर्शयिष्यामि ते मूर्तिं एवं रूपां मनोरमाम्।। १२९

यदा यदा वाञ्छसि त्वं यत्र क्वापि मुनीश्वर।
मत्प्रसादाद्यक्षशापो न त्वामभिभवेन्मुने।। १३०

अत्र स्थितं मासमात्रं क्षणमात्रमतः परम्।
नात्र स्थेयमितस्तस्मात् गच्छ लोकान्यथासुखम्।। १३१

त्वं च नित्यं चरन्गायेः श्रीरामायणमादृतः।
प्रकाशय कथामेतां लोकानां सुखसिद्धये।। १३२

வேதமோதுதல், வெளிப்படையான பூஜை, மானஸ பூஜை, தவம், தியாகம் இவற்றை விட ராமாயணத்தைப் படிப்பது மற்றும் கேட்பதால் மகிழ்கிறேன். நீர் விரும்புகிற போதெல்லாம் இந்த உருவத்தை உமக்குக் காட்டுவேன். உமக்கு ஓரிடத்தில் தங்கக் கூடாதென்ற யக்ஷினின் சாபம் ராமாயணபடனத்திற்காகத் தங்கும் நாட்களில் பலிக்காது. அது என் அருள். இதற்கு மேல் கணமும் இங்கு தங்காதீர். என் கதையை ஆனந்தத்துடன் பாடி உலகில் பரப்புவீர் என்று நாரதருக்கு அருள் புரிந்தார்.

वाल्मीके त्वं च शिष्याभ्यां गायञ्यां मत्कथां सदा।
आनन्दमाप्नुहि परं नान्यलभ्यं कथञ्चन।। १३३

आहरिष्याम्यश्वमेधं स्वर्णसीतासमन्वितः ।
आगच्छ सह शिष्याभ्यां मत्पुत्राभ्यां सहाध्वरम् ।। १३४

तदा कर्मान्तरे काव्यं त्वत्कृतं मत्कथाश्रयम् ।
श्रोष्यामि बहुभिः सार्धं सभायां राजभिः सह ।। १३५

अश्वमेधकथाघट्टं मुनिभिश्च भवादृशैः ।
आद्यन्ततश्च श्रोष्यामि त्वं यशोभाग्भविष्यसि ।। १३६

पुत्रौ च स्वीकरिष्यामि सर्वलोकस्य सन्निधौ ।
इदं रहस्यं प्रोक्तं ते त्वया प्रोक्तं च काव्यके ।। १३७

त्वं निवत्स्यसि मल्लोके मत्समो बहुकल्पकम् ।
मामेवैष्यसि चान्ते त्वं सत्यं प्रतिशृणोमि ते ।। १३८

*''வால்மீகியே, நீரும் உம் சீடரிருவரைக் கொண்டு என் கதையைப் பாடி மகிழ்வீர். தங்கத்தில் ஸீதைப் பதுமை செய்து அசுவமேத வேள்வி புரிவேன். வேள்வியில் உம் இரு சீடர்கள் மூலம் வேள்விப் பணிகளின் இடையே நீர் தொகுத்த என் கதையை அரசர்கள் நாட்டுப் பெருமக்களுடன் முழுவதும் கேட்பேன். உம் புகழ் பரவும். மக்களனைவரின் முன்னிலையில் என் புதல்வர்களை ஏற்பேன். இது ரகசியம். இதுவும் உம் காவியத்தில் இடம்பெறும். என் உலகில் என் போன்று பல கல்பங்கள் வாழ்வீர். இறுதியில் என்னை அடைவீர். இது உண்மை. உறுதியாகச் சொல்கிறேன்''.*

दाल्भ्य उवाच-

इत्युक्त्वाऽन्तर्हितो रामः सीताद्यैरनुगैः सह ।
अद्यापि गायति मुनिश्चरन् रामायणं सदा ।। १३९

स एनमर्थं प्रावोचद्व्यासायामिततेजसे ।
उपादिशत्स्वपुत्राय सोऽपि राजन्शुकाय च ।। १४०

स मे कथितवान्पूर्वं प्रसङ्गाद्भक्तसंसदि ।
मया तवोपदिष्टं च श्रीरामायणवैभवम् ।। १४१

त्वं चादित्ये समायाते मदुक्तविधिपूर्वकम्।
पठन् रामायणं भक्त्या वक्तारं परिकल्प्य च॥ १४२
श्रोतृंश्च परमोदारान् तरिष्यसि महापदम्।

*தாத்பர்யர் கூறினார் :- இவ்வாறு கூறி ராமன் கூட வந்தவர்களுடன் மறைந்தார். இதனை வால்மீகி, வியாஸருக்கு உபதேசிக்க, அவர் சுகருக்கு உபதேசிக்க, சுகர் எனக்கு இதனை உபதேசித்தார். நான் உமக்குக் கூறினேன். நீரும் ஸௌரியோதயத்திற்குப் பின் கேட்க ஒருவரை வரித்து ராமாயணத்தைப் படிப்பீர். பேராபத்தைக் கடப்பீர்.*

युधिष्ठिर उवाच-

श्रीमन्मुनिगणश्रेष्ठ दाल्भ्य सर्वज्ञ संमत॥ १४३
धन्योऽस्म्यनुगृहीतोऽस्मि विपदं तारितोऽस्मि च।
अहं रामायणं भक्त्या पठिष्यामि पुनर्वसौ॥ १४४
वक्ता भव महाभाग नान्योऽस्ति मम संमतः।

*யுதிஷ்டிரர் தாத்பர்யரிடம் கூறினார் :- முனிவரில் சிறந்தவரே. அருள் புரிந்தீர். நெருக்கடிகளை நான் கடந்தேன். ராமாயணத்தை நான் படிக்கிறேன். அதனை நீரே விளக்கி உரைப்பீர் என்று வேண்டினார்.*

श्रीसूत उवाच-

इत्युक्त्वा पाण्डुतनयः संभारान्भ्रातृभिर्मुदा॥ १४५
संपाद्य च ततो वृत्वा श्रोतॄन्भक्तान् रघूत्तमे।
दाल्भ्यं वक्तारमादाय द्वारकां प्रेष्य चानुजान्॥ १४६
गोविन्दं च समानीय प्रोक्तवान्स्वमनीषितम्।
स चैनमब्रवीद्राजन् तुष्टोऽस्मि तव कार्यतः॥ १४७
अस्मिन्नप्यवतारेऽहं मम पूर्वावतारके।
रामात्मके यच्चरितं तद्यो वर्णयते मुदा॥ १४८

तदा परवशो राजन् भवामि प्रीतमानसः ।
किमुताद्य महीपाल श्रीरामायण पाठतः ।। १४९
भवत्वयं विधिः सर्वं श्रोष्यामि सह च द्विजैः ।

*தர்ம புத்திரர் உடன் புனர் வஸு பாராயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தார். சகோதரர்களை அனுப்பி துவாரகையிலிருந்து கிருஷ்ணரையும் அழைத்து வந்தார். கிருஷ்ணன் தானும் தனது முன் அவதாரத்துக் கதையைக் கேட்டு மகிழ்வதாகக் கூறி பாராயணம் நடப்பதைத் தானும் அந்தணர்களுடன் கேட்க விருப்பதாகக் கூறினார்.*

ततो युधिष्ठिरो राजा संकल्प्य विधिपूर्वकम् ।। १५०
द्रौपद्या सह धर्मात्मा पुनर्वसु महादिने ।
रामायणं यथान्यायं समारभ्य पठन् स्वयम् ।। १५१
समापयच्च विधिना कृत्वा कृष्णं सभेश्वरम् ।
यदा सभां पूजयितुं उत्थितो धर्मनन्दनः ।। १५२
न ददर्श तदा कृष्णं तत्स्थानेऽन्यं ददर्श ह ।
सव्ये पाणौ च कोदण्डं दक्षिणे चापि सायकम् ।। १५३
सीतालक्ष्मणसंसेव्यं पादान्ते च हनूमता ।
श्रीरामं पुष्पवर्षेण कीर्यमाणं नभःसदाम् ।। १५४
सूर्यकोटिसमाभासं प्रसन्नवदनाम्बुजम् ।
दृष्ट्वा परवशो भूत्वा हर्षेण कुरुनन्दनः ।। १५५
सहस्रकृत्वः प्राणंसीत् तुष्टाव च पुनः पुनः ।
पाद्यार्घ्याचमनीयेन सम्यगाराधयन्मुदा ।। १५६
भगवानपि सर्वात्मा राजानमिदमब्रवीत् ।

*தர்ம புத்திரர் முறைப்படி துரௌபதியுடன் ஸங்கல்பம் செய்து, கிருஷ்ணனை ஸபைத் தலைவராக்கி அவர் முன்னிலையில் புனர்வஸுவில் தொடங்கி ராமாயணம் படித்தார். ஸபைக்கு*

மரியாதை செய்ய எழுந்த அவர் கிருஷ்ணனைக் காணாமல் அவரது ஸ்தானத்தில் வில் அம்பேந்தி ஸீதை, லக்ஷ்மணர், ஹனுமான் இவர்களுடன் அமர்ந்துள்ள ராமனைக் கண்டார். வானவர் அவர்மீது பூமாரி பெய்ய கோடி ஸூரிய ஒளி கொண்ட அவர் முன் பரவசராகி ஸந்தோஷத்துடன் துதித்து வணங்கினார். வாத்யம் முதலிய உபசாரங்களைச் செய்தார். பகவான் ராமர் தர்ம புத்திரரிடம் கூறினார்.

श्रीभगवानुवाच-

तुष्टोऽस्म्यनेन विधिना श्रीरामायणपाठतः ॥ १५७

अवाप्स्यस्यखिलान् कामानन्ते सायुज्यमेष्यसि ।
शत्रून्हनिष्यस्यखिलान् प्रतिज्ञान्ते नृपोत्तम ॥ १५८

राज्यं प्राप्स्यसि भूयोऽपि भ्रातृभिः परिवारितः ।
इत्युक्त्वाऽऽसीत्पुनः कृष्णः सर्वालङ्कारशोभितः ॥ १५९

सदस्या विस्मयांभोधौ मग्नाः श्रीराम दर्शनात् ।
तुष्टुवुर्द्वारिकानाथं तन्माहात्म्यवशीकृताः ॥ १६०

राजाऽपि कर्म तत्सम्यक् समाप्य विधिपूर्वकम् ।
अन्नैश्च षड्रसोपेतैः सूर्यपात्रविनिर्मितैः ॥ १६१

ब्राह्मणान्भोजयामास सहस्राधिकसंख्यया ।
वक्तारं पूजयामास कृष्ण दत्तैर्धनादिभिः ॥ १६२

ततो व्यतीते वनवासदुःखे जित्वा रिपून्भीष्ममुखान्महात्मा ।
सहादेरैः सेवित पादपद्मो महीं प्रपेदे महतीं श्रियं च ॥ १६३

பகவான் கூறினார் :- ஸ்ரீ ராமாயணத்தை முறைப்படி படித்ததால் மகிழ்ச்சியுறுகிறேன். நீர் விரும்பியதனைத்தையும் பெற்று வாக்குறுதிவரை முடிந்ததும் எதிரிகளை அழித்து சகோதரர்களுடன் அரசைப் பெறுவீர். இறுதியில் என்னுடன் இணைவீர். இவ்வாறு கூறிக் கொண்டே கிருஷ்ணனாக மாறினார். ஸ்ரீ ராமனைக் கண்டதில் வியப்படைந்து அவ்வாறு காட்சி தந்த

கிருஷ்ணனைத் துதித்தனர். தர்ம புத்திரரும் முறைப்படி பாராயணத்தை முடித்து அந்தணர்களுக்கு உணவளித்து விளக்கம் தந்த தாலப்யரைப் பாராட்டினார். வனவாஸம் முடிந்ததும் பீஷ்மர் முதலான எதிரிகளை அழித்துச் சகோதரர்களுடன் அரியணை ஏறி ஆனந்தம் பெற்றார்.

सूत उवाच-

यो रामायण माहात्म्यमिदमुक्तं मुनीश्वराः ।
पठेद्वा शृणुयाद्वाऽपि स रामे भक्तिमान्भवेत् ।
श्रीरामस्य प्रसादेन सर्वान्कामानवाप्नुयात् ।। १६४

ஸ்ரீ ராமாயணத்தின் பெருமையைப் படிப்பவரும் கேட்பவரும் ராமனிடம் பக்தி கொள்வர். ஸ்ரீ ராமனின் அருள் பெற்று விரும்பியதனைத்தையும் பெறுவர்.

—स्कान्दोपपुराणे पुराणवैभवखण्डतः

## श्रीमद्रामायण पारायणक्रमः

(कुमारसंहितातः)

### ஸ்ரீ ராமாயண பாராயண முறை

**(குமார ஸம்ஹிதையிலிருந்து)**

रामायणनवाहपारायणविधिः - *ராமாயண நவாஹ பாராயணமுறை*

माण्डूकर्णिरुवाच-

कुंभसंभव धर्मज्ञ विष्णुभक्त नमोऽस्तु ते ।
रामायणस्य यत्प्रोक्तं नवाहपठनं मया ।। १

विस्तराच्छ्रोतुमिच्छामि तदद्य मुनिपुङ्गव ।
पूजां पारायणं दानं जपहोमार्चनादिकम् ।। २

कथं कार्यं कदा वाऽपि कुत्र वा वद विस्तरात् ।

தர்மமறிந்த அகஸ்தியரே ! ராமாயணத்தின் நவாஹ படனமுறையை விரிவாகக் கூறுவீர். பூஜை, பாராயண முறை,

தானம், ஜபம், ஹோமம், அர்ச்சனை, இவற்றைப் எப்போது எங்கு எப்படிச் செய்ய வேண்டும் ? விரிவாகக் கூறுவீர்.

अगस्त्य उवाच-

मुने वक्ष्यामि ते पृष्टं श्रूयतामवधानतः ।
तुष्टोऽस्म्यनेन प्रश्नेन राघवं स्मारितोऽस्महम् ।। ३

धर्मकामनया वाऽपि अर्थकामनयाऽपि वा ।
मोक्षकामोऽथवा रामप्रीतिमात्राभिलाषतः ।। ४

अपस्मारादिरोगैश्च दुश्चिकित्स्यैः प्रपीडितः ।
नवग्रहाणां दौःस्थ्येन पीडितो वाऽपि चैकदा ।। ५

विश्लिष्टबन्धुसंयोग कामुको वा सुतार्थिकः ।
श्रीमद्रामायणाख्यस्य इतिहासोत्तमस्य च ।। ६

नवाह पठनं कृत्वा सर्वं सौख्यमवाप्नुयात् ।
गृहे देवालये वाऽपि महाभोगाङ्गणान्विते ।। ७

कुर्यान्मण्डपिकां चित्रां पट्टवस्त्रवितानिकाम् ।
तोरणालङ्कृतां दिक्षु कदलीस्तंभसंवृताम् ।। ८

कोमलैर्नारिकेलैश्च पक्वैः पूगफलैरपि ।
शोभितां रङ्गवल्लीभिः चित्राभिः सर्वतो वृताम् ।। ९

शङ्ख चक्राब्जमीनादि रूपाभिः कृतभक्तिभिः ।
महतीं चतुरश्रां च कुर्यात्तत्र च वेदिकाम् ।। १०

அகஸ்தியர் கூறுகிறார்:- உங்கள் கேள்வி ராமனை நினைவூட்டுகிறது. அறம் பொருள் முக்தி அல்லது ராமனது ப்ரீதி மட்டும் பெற, கடும் நோய்கள், கிரஹங்களின் கோபம் நீங்க, பிரிந்த பந்துக்களுடன் கூடுதல், பிள்ளைப் பேறு என பல கோரிக்கைகள் நிறைவுற, ஸ்ரீ ராமாயண நவாஹ படனம்

செய்யலாம். வீட்டிலோ கோயிலிலோ அழகிய மண்டபம் அமைத்து, பட்டாடையால் விதானம் கட்டி, தோரணம் வாழைமரம் தேங்காய் கொத்து பாக்குப் பழக் கொத்து அழகிய கோலங்கள், வரிசையாக சுற்றி சங்கு சக்கிரம் தாமரை மீன் என கோலத்தால் சுற்றி அலங்கரித்து பெரிய சதுர மேடையை நடுவில் அமைக்கவும்.

तत्र व्रीहीन् संप्रसार्य द्वादशप्रस्थसंमितान् ।
अनाहतेन शुक्लेन वस्त्रेणाच्छाद्य तानथ ।। ११

तदर्धपरिमाणेन तण्डुलास्तस्य चोपरि ।
निक्षिप्य तत्र विलिखेत्पद्ममष्टदलं शुभम् ।। १२

परितस्तस्य विलिखेद्भूपुरद्वितयं ततः ।
त्रिकोणद्वयमालिख्य कर्णिकायां सरोरुहः ।। १३

प्रणवं रामबीजं च सीताबीजं तथैव च ।
विलिख्य दर्भैराच्छाद्य तण्डुलांस्तान् समन्ततः ।। १४

तस्य चोपरि गङ्गादितीर्थसंपूरितं घटम् ।
हाटकं राजतं वाऽपि ताम्रं वा स्थापयेच्छुभम् ।। १५

மேடை மீதி 12 பிரஸ்தம் (சுமார் 20லிட்டர்) நெல் பரப்பி அதன் மீது கோடி ( வண்ணான் வெளுக்காத) வெள்ளை வஸ்திரத்தால் மூடி 6 பிரஸ்தம் அரிசியை அதன் மீது பரப்பி, அதில் எட்டிதழ் தாமரை வரைந்து அதனைச் சுற்றி இரு பூ புரங்கள் வரையவும். தாமரை மொட்டின் நடுப்பகுதி மீது முக்கோணம் வரைந்து அதில் ராம் என்ற ராமபீஜத்தையும் ஸீம் என்ற ஸீதா பீஜத்தையும் எழுதவும். அவற்றின் மீது தர்ப்பை பரப்பி, அரிசியைச் சுற்றித் தர்பங்களால் ஆஸ்தரணம் செய்து அதன் மீது தங்கம் வெள்ளி அல்லது தாமிரக் குடத்தில் நீர் நிரப்பி வைக்கவும்.

पञ्चपल्लवकूर्चादिपट्टवस्त्राद्यलङ्कृते।
उदक्शिखं नारिकेलं पक्वं विन्यस्य तत्र च ॥ १६

सुवर्णस्याथ रौप्यस्य पलद्वयविनिर्मिताम्।
स्नापितां पञ्चगव्येन यथावच्च प्रतिष्ठिताम् ॥ १७

प्रतिमां यत्राष्टदलपद्ममध्ये रघूद्वहः।
उत्सङ्गे सीतया सार्धं भाति चिन्मुद्रयाऽन्वितः ॥ १८

स्थापयित्वा द्विजश्रेष्ठैरनुज्ञातो गणाधिपम्।
पूजयित्वा प्रार्थ्य तं च श्रीरामायण पुस्तके ॥ १९

प्रतिमायां च संपूज्य ततः सङ्कल्पयेन्मुदा।

*பஞ்ச பல்லவங்கள் (அரசு, வேம்பு, அசோகம், அத்தி, மா இவற்றில் இலைகள். மாவிலை இவை ஐந்தினிடத்தில்) தர்ப்பையாலான கூர்ச்சம். பட்டு வஸ்திரம், இவற்றால் அலங்கரிக்கப்பட்ட அந்த கலசத்தில் வடக்கு நோக்கிய குடுமியுடன் உள்ள உரித்த முற்றிய தேங்காயை வைப்பர். 2 பலம் (200கிராம்) அளவு தங்கம் அல்லது வெள்ளியிலாலான பிரதிமையில் 8 தள பத்மம் வரைந்து அதன் நடுவில் ஸீதையை மடியில் அமர்த்திக் கொண்டு சின்முத்ரையுடன் விளங்குகிற ஸ்ரீ ராமனை ஆவாஹனம் பிராண பிரதிஷ்டை செய்வித்து கணபதி பூஜை செய்து ராமனை பிரதிமையிலும் ராமாயண புத்தகத்திலும் பூஜை செய்து ஸங்கல்பம் செய்ய வேண்டும்.*

पठितारौ कुशलवस्वरूपौ द्वौ वृणीत च ॥ २०

वक्तारमपि वाल्मीकिरूपमेकं वृणीत च।
श्रोतारमेकं हनुमत्स्वरूपं वृणुयात्ततः ॥ २१

उपश्रोतॄंस्ततस्त्रींश्च वृणुयाद्राघवप्रियान्।
पठने वा प्रवचने श्रवणे वा यथास्वयम् ॥ २२

पदुर्भवेत्तथा कुर्यात्ततः सङ्कल्पमेव च ।

குசனும் லவனுமாகப் படிப்பவர் இருவர், வால்மீகியாக விளக்கம் தருபவர் ஒருவர், ஹனுமானைக் கேட்பவர் ஒருவர், இந்நால்வரையும் கேட்பவருக்கு உதவியாளராக மூவரையும் வரிக்க வேண்டும். இவ்வேழு பெயர்களும் படிக்கவும் கேட்கவும் விளக்கவும் தகுதி பெற்றவராக இருத்தல் அவசியம். பின்னர் ஸங்கல்பம் செய்ய வேண்டும்.

ततः पठेन्नारदोपदिष्टमारभ्य सर्गकम् ।। २३

आबालकाण्ड संपूर्तेः पठेत्तु प्रथमे दिने ।
द्वितीये वै दशरथ प्राणयात्रान्तमेव च ।। २४

तृतीये तु दिने पाठ्यं अयोध्याकाण्ड शेषकम् ।
चतुर्थे तु पठेद्गृध्रराजमोक्षावधि क्रमात् ।। २५

बिलप्रवेशात्पूर्वं तु पञ्चमे विरमेत्पुनः ।
हनूमतो निवृत्त्यन्तं षष्ठे लंकापुरात्पठेत् ।। २६

नागपाशनिवृत्त्यन्तं सप्तमे दिवसे पठेत् ।
रावणस्य वधान्तं च दिवसे चाष्टमे पठेत् ।। २७

नवमे दिवसे पाठ्यं यावद्रामाभिषेचनम् ।

*முதல் நாள் - பால காண்டம் நிறைவடையும் வரை.*

*இரண்டாம் நாள் - தசரதரின் இறுதி வரை. (அயோத்யா -64 ஸர்கம்.)*

*மூன்றாம் நாள் - அயோத்யா காண்ட முடிவு வரை.*

*நான்காம் நாள் - ஜடாயு மோக்ஷம் வரை. (அரண்ய 68 வரை)*

*ஐந்தாம் நாள் - ஸ்வயம் பிரபாபில ப்ரவேசம் வரை (கிஷ்கிந்தா 49ஸர்கம் வரை)*

*ஆறும் நாள் - ஹனுமான் லங்கையிலிருந்து திரும்பும் வரை (ஸுந்தர 56 ஸர்)*

*ஏழாம் நாள் - நாகபாசமோக்ஷம் வரை (யுத்த. 50 ஸ)*

*எட்டாம் நாள் - ராவண வதம் வரை (யுத்த. 111 ஸ)*

*ஒன்பதாம் நாள் - பட்டாபிஷேகம் வரை, யுத்த காண்டம் முடியும் வரை.*

पठनान्ते राघवस्य विष्णोर्नामसहस्रतः ।। २८

मल्लिकाचंपकैरर्चां पद्मैर्वा तुलसीदलैः ।
कृत्वाऽथ पायसापूपभक्ष्यभोज्यादिसंयुतम् ।। २९

शाल्यन्नं विनिवेद्याथ ब्राह्मणान्भोजयेत्ततः ।
प्रथमे दिवसे विप्रा भोज्या द्वादशसंख्यकाः ।। ३०

द्वितीयेऽष्टौ तृतीये तु विंशतिश्च चतुर्थके ।
दश विप्राः पञ्चमे तु भोज्याः पञ्चदश द्विजाः ।। ३१

षष्ठे च द्वादशैव स्युः सप्तमे न्यूनविंशतिः ।
अष्टमे दशविप्राश्च न संख्या नवमे स्मृता ।। ३२

मध्वाज्यफल संमिश्रं भोजनं सर्वथा दिशेत् ।
दक्षिणामपि विप्राणां दद्याद्भुक्तवतां व्रती ।। ३३

*அன்றன்று ராமாயண பாடம் முடிந்ததும் விஷ்ணு ஸஹஸ்ரநாமங்களால் ராகவனுக்கு மல்லி சம்பகம் தாமரை துளஸி இவற்றால் அர்ச்சனை செய்து பாயஸம் அப்பம் பக்ஷணங்கள் சித்ரான்னங்கள் இவற்றை நிவேதனம் செய்து அந்தணர்களுக்கு உணவிட வேண்டும். முதல் நாள் அந்தணர்கள் 12, இரண்டாம் நாள் 8, மூன்றாம் நாள் 20, நான்காம் நாள் 10, ஐந்தாம் நாள் 15, ஆறும் நாள் 12, ஏழாம் நாள் 19, எட்டாம் நாள் 10, ஒன்பதாம் நாள் எண்ணற்றவர் என்றவாறு அந்தணர்களுக்கு உணவிட்டு தக்ஷிணை தந்து உபசரிக்க வேண்டும்.*

सायं च यामे पूर्वे च रात्रेः प्रतिदिनं ततः ।
वक्तुर्मुखाच्च शृणुयात् पूर्वाह्नपठितस्य च ।। ३४

भक्त्याऽर्थान्पूजयेत्तं चाप्यभीष्टैः प्रतिवासरम् ।
वक्ता श्रोता च पठिता यजमानस्तथैव च ।। ३५

ब्रह्मचर्यव्रतपराः भवेयुर्नव वासरान् ।
एवं कृत्वा प्रतिदिनं प्राप्ते तु नवमे दिने ।। ३६

पठनान्ते तु सङ्कल्पं कृत्वा कल्पोक्तमार्गतः ।
कृत्वा पूजां यथाशक्ति पुष्पादिद्रव्यसंयुताम् ।। ३७

कुर्यात्पट्टाभिषेकाख्य महोत्सवमथादरात् ।
स्वस्वगृह्योक्तविधिना प्रतिष्ठाप्य हुताशनम् ।। ३८

क्षीरान्नेन च पालाशसमिद्भिश्च घृतेन च ।
त्रिशतं रामगायत्र्या जुहुयाद्राघवं स्मरन् ।। ३९

रामगायत्री- दाशरथाय विद्महे सीतावल्लभाय धीमहि ।
तन्नो रामः प्रचोदयात् ।

गुडान्नेन च दूर्वाभिः घृतेन च चतुःशतम् ।
मूलमन्त्रेण जुहुयात्स्वयं वाऽऽचार्यमूलतः ।। ४०

राममूलमन्त्रः - रां रामाय नमः

धर्मात्मेति मन्त्रेण घृताक्तान्नेन सर्पिषा ।
अश्वत्थसमिधा चापि जुहुयात्त्रिशतं व्रती ।। ४१

तद्विष्णोरिति मन्त्रेण जुहेदष्टोत्तरं शतम् ।
तत्र हव्यं च शुद्धान्नं समिधस्तु कुशाः स्मृताः ।। ४२

*இரவின் முதல் யாமத்தில் தினமும் காலையில் படித்த பகுதியின் பொருளை உரையாளர் மூலம் விளக்கம் பெற வேண்டும். ஒன்பது நாட்களிலும் படிப்பவர் விளக்கம் தருபவர், யஜமானர் மூவரும் பிரம்மசரியம் காக்க வேண்டும்.*

ஒன்பதாம் நாள் பாராயணம் முடிந்ததும் பூஜை செய்து பட்டாபிஷேக உற்சவம் கொண்டாட வேண்டும். அக்னியை அவரவர் க்ருஹ்ய ஸூத்திரப்படி பிரதிஷ்டை செய்து ராம காயத்ரி மந்த்ரத்தால் பால் பொங்கல், புரசஸமித், நெய் இவற்றால் 300 ஹோமங்கள் செய்ய வேண்டும். ஸ்ரீ ராம மூலமந்த்ரத்தால் சர்க்கரைப் பொங்கல், அருகம்புல், நெய் இவற்றால் 400 ஹோமம் செய்ய வேண்டும். தர்மாத்மா ஸத்ய ஸந்தச்ச என்ற சுலோகத்தால் நெய் கலந்த சாதம் (சம்பா சாதம்) நெய், அரசஸமித் இவற்றால் முந்நூறு ஹோமம் செய்ய வேண்டும். தத்விஷ்ணோ: பரமம் பதம் என்ற மந்திரத்தால் சுத்த அன்னம், தர்ப்பை, நெய் இவற்றால் 108 தடவை ஹோமம் செய்ய வேண்டும்.

होमाशक्तौ होममन्त्रान् होमत्रिगुणसंख्यया।
आवर्तयेद्रघुपतिं कूर्चेष्वावाह्य चोच्चकैः ॥ ४३

प्रतिमामप्यथोद्वास्य दद्याद्विप्राय योगिने।
स्नपयेद्यजमानं चाचार्यः कुंभजलेन च ॥ ४४

वक्त्रे पठित्रे श्रोत्रे च वस्त्रालङ्करणादिभिः।
दीनारैरपि संमानं ततः कुर्याद्यथोचितम् ॥ ४५

इदं व्रतं शुक्लपक्षे चैत्रे वाऽश्वयुजेऽपि वा।
प्रथमायां समारभ्य नवम्यां च समापयेत् ॥ ४६

ஹோமம் செய்ய இயலாத போது ஹோம எண்ணிக்கைக்கு மூன்று மடங்கு மந்திரத்தை ஜபிக்க வேண்டும். பிரதிமையில் ஆவாஹனம் செய்த ஸ்ரீ ராமனை ஹ்ருதயத்திற்குக் கொணர்ந்து பிரதிமையை தானம் செய்யலாம். சித்திரை புரட்டாசி சுக்கில பக்ஷத்தில் நவராத்திரியில் பிரதமையில் தொடங்கி நவமியில் முடிக்கலாம்.

तिथिवृद्ध्या तु नवमी यदि स्याद्दशमे दिने।
तदाऽऽरभेत् द्वितीयायां नवाहं स्यान्महोत्सवः ॥ ४७

तिथिक्षयेण सा चेत्स्यादष्टमे दिवसे भवेत्।
अमायां तु व्रतमिदं प्रारभ्य नव वासरान्॥ ४८

मध्याह्नव्यापिनी ग्राह्या नवमी रामपूजने।
कुर्याद्भक्त्या च तुष्ट्या च श्रद्धया च समन्वितः॥ ४९

मासद्वयं तु पूर्वोक्तमुख्यपक्षसमाश्रयात्।
अन्येष्वपि च मासेषु शुक्लपक्षे यथारुचि॥ ५०

कुर्याद्व्रतमिदं यत्तः सर्वसंपत्समृद्धये।

*திதியின் நாழிகை கூடுதலால் நவமீ திதி பத்தாம் நாளில் வந்தால் துவிதீயை யன்று தொடங்கலாம். நாழிகை குறைந்து எட்டாம் நாளில் நவமி வந்தால் அமாவாஸ்யை யன்று தொடங்கலாம். நவமி நடுப் பகலில் அதிக நாழிகை இருக்கிற நாள் ஏற்றது. சித்திரை புரட்டாசி போன்று மற்ற மாதங்களிலும் இவ்வாறு செய்யலாம்.*

एवं कृते जगत्स्वामी रामभद्रः श्रियः पतिः॥ ५१

तुष्टो भवति मोक्षान्तान् सर्वान् कामान्ददाति च।
अपुत्रो लभते पुत्रं अपमृत्युं तरेत च॥ ५२

भुञ्जीत सर्वान्भोगांश्च कुबेरेण समो भुवि।
आचन्द्रार्कं वंशवृद्धिः यजमानस्य वै भवेत्॥ ५३

प्रीयन्ते पितरस्तस्य आविंशतिकुलं ततः।
नरकादुद्धरन्त्येते राममाहात्म्यतोऽखिलाः॥ ५४

आयुः कीर्तिश्च वर्धेत सर्वं दुःखं प्रणश्यति।
इदमुक्तं महाभाग माण्डूकर्णे महामुने॥ ५५

रामातिक्रमदोषाच्च क्षत्रियभ्रूणनाशनात्।
इदं यथोदितं चक्रे जामदग्न्यः पुरा व्रतम्॥ ५६

बहुभिश्च ततो भूपैः मुनिभिश्च द्विजोत्तमैः ।
अनुष्ठितं व्रतमिदं तत्तत्कामनयाऽन्वितैः ॥ ५७

अनायासेन ते प्राप्तं अभीष्टं रघुसत्तमात् ।
एवं कर्तुमशक्तश्चेत् वित्तलोभं विना द्विजः ॥ ५८

यावच्छक्ति व्रतमिदं कुर्याद्भक्तिसमन्वितः ।
सर्वाशक्तौ नव दिनं यथोक्तक्रमतः पठेत् ।
पूजयेच्च रघूत्तं सं तेन रामः प्रसीदति ।

*இதனால் ஸ்ரீ ராமன் ஸந்தோஷமடைந்து விரும்பியதனைத்தையும் அருள்வார். பிள்ளைப் பேறு, அபமிருத்ய நீங்கல், செல்வச் செழிப்பு, பித்ருக்கள் மேனிலையடைதல், ஆயுள் கீர்த்தி, துன்பம் நீங்கல் இவை உண்டாகும்.*

*ராமனை எதிர்த்ததும் க்ஷத்திரியப் பூண்டையே அழித்ததும் காரணமாக ஏற்பட்ட பாபம் நீங்க பரசுராமரும் இதனைச் செய்து மேன்மை பெற்றார். அரசர்களும் முனிவர்களும் இந்த விரதத்தைச் செய்தனர். இவ்வாறு விரிவாகச் செய்ய இயலாவிடில் சக்திக்கேற்ப செய்யலாம். அல்லது ஒன்பது நாட்களிலும் பாராயணம் செய்து ஸ்ரீ ராமனை வழிபடலாம்.*

### श्रीरामायणपारायणक्रमः

(वायुपुराणे उमासंहितातः)

विशिष्टकामनावद्भिः पठनीया भागाः

### ஸ்ரீ ராமாயணபாராயண முறை

***(வாயு புராணம், உமாஸம்ஹிதை)***

***(குறிப்பிட்ட பயனை விரும்புபவர்களுக்காக)***

ईश्वर उवाच-

अथ वक्ष्यामि गिरिजे श्रूयतामवधानतः ।
श्रीमद्रामायण ग्रन्थे कामनावद्भिरादरात् ॥ १

घट्टानां पठनीयानां संग्रहाध्यायमादरात्।
कामेप्सवो द्विजाः प्रातः स्नात्वा दिव्यसरिज्जले ॥ २

प्रयताः शुद्धभावाश्च कृतजप्या हुताग्नयः ।
दिवसस्याष्टमं भागं परिहृत्य ततः परम् ॥ ३

रामं संपूज्य विधिवत्पठेयुः स्वेष्टघट्टकम्।
पठितुं चेदशक्तः स्याच्छृणुयात्स कथादिमान् ॥ ४

द्विजेत रैस्तु श्रोतव्यं सर्वदैव द्विजाननात्।
पाठकं मानयेदन्ते मत्वा श्रीरामविग्रहम् ॥ ५

*அவரவர் தாம் விரும்புகிற பயனைப் பெற ஸ்ரீ ராமாயணத்தில் படிக்க வேண்டிய பகுதிகளும் முறையும் விளக்கப்படுகின்றன. காலை புனித நீரில் நீராடி மனத் தூய்மையுடன் நித்ய கருமங்கள் ஜபங்கள் அக்னி வழிபாடு செய்து உதயத்திலிருந்து 33/4 நாழிகை (11/2 மணி) கழித்து ராமனை வழிபட்டு குறிப்பிட்ட பகுதியைப் படிக்க வேண்டும். படிக்க இயலாதவர் படிப்பதைக் கேட்கலாம். படிப்பவருக்குப் பின் ராமனுக மதித்து மரியாதை செய்ய வேண்டும்.*

धर्मकामस्तु कौसल्यारामसंवादमादरात्।
मङ्गलान्तं पठेत्प्रातः मध्याह्ने वा स्मरन्प्रभुम् ॥ ६

अनश्नन् हि पठेत् प्रातर्मध्याह्ने वा स्मरन्प्रभुम्।
पठनं यस्य घट्टस्य सायं च परिकीर्तितम् ॥ ७

तं पठेत्प्रयतः सन्ध्यामनुष्ठाय धृतव्रतः ।
अशुद्धिश्चेद् दिवा प्राप्ता सायं स्नात्वा पठेत्ततः ॥ ८

अर्थकामः पठेत्सर्गं यात्रादानकथांशकम्।
रामस्यारण्य गमनसमये तु त्रिसन्ध्यकम् ॥ ९

*தர்மத்தை விரும்பியவர் முற்பகலிலோ நடுப்பகலிலோ கௌஸல்யா ராம ஸம்வாதத்தை (அயோத்யா - 21 -25 ஸ) உணவேற்காமல் படிக்க வேண்டும் (மாலையில் படிக்கச் சொல்லியிருந்தால் மாலைக்கான நித்ய கர்மம் முடித்துப் பின் படிக்க வேண்டும்.) பொருளை நாடுபவன் ராமன் காட்டிற்குச் செல்லுமுன் யாத்ராதானம் செய்யுமிடத்தை (அயோத்தியா 32ஸ) முற்பகலிலும் நடுப்பகலிலும் மாலையிலும் படிக்கவும்.*

कन्यार्थी च वटुः कन्याऽप्यनुरूपवरार्थिनी।
सीताविवाहसर्गं तु पठेत्प्रातः प्रयत्नतः ।। १०

गव्यं निवेदयेत्क्षीरं सद्यो दुग्धं शुचिस्थले।
मोक्षार्थिभिस्तु पाठ्या स्याज्जटायुर्मोक्षदानका ।। ११

रामस्य लक्ष्मणाश्वासादारभ्य प्रयतैः कथा।
अपस्मारश्वासकासकुष्ठादि गदशान्तये ।। १२

आद्ये युद्धे दशास्यस्य मौलिभङ्गं दिने दिने।
पठे द्विवारं नैवेद्यमादौ मध्वन्ततः पयः ।। १३

*மணக்கப் பெண்ணை விரும்பும் ஆணும் ஆணை விரும்பும் பெண்ணும் ஸீதா விவாஹ ஸர்கத்தைக் காலையில் படித்து சுத்தமான இடத்தில் அப்போதே கறந்த பசுவின் பாலை நிவேதனம் செய்ய வேண்டும். முக்தியை விரும்புபவர் ராமனுக்கு லக்ஷ்மணன் ஆறுதல் கூறுவதிலிருந்து ஜடாயுக்கு மோக்ஷம் அளித்த பகுதியை (ஆரண் - 65 - 68 ஸ) காலையில் படிக்க வேண்டும். அபஸ்மாரம் சுவாஸாசய நோய், இருமல், குஷ்டம் முதலிய நோய் தீர ராவணனுடன் நடந்த முதல் யுத்தத்தில் கிரீடம் உடைதல் பகுதியைத் தினமும் (யுத்த 59ஸ) காலை மாலை படிக்க வேண்டும். படிக்கத் தொடங்குமுன் தேனும் முடித்ததும் பாலும் நிவேதனம் செய்ய வேண்டும்.*

भूतवेतालपीडा चेत् लङ्काविजयसर्गकम्।
आदौ गुडान्नं नैवेद्यं कृत्वा सायं पठेद्यतः ।। १४

विमार्ग सर्वत्रेति पद्यस्यान्ते नीराजनार्पणम्।
कृत्वाऽथ प्रणमेद्भूमावाञ्जनेयं हृदा स्मरन्।। १५

उन्मादतोपशान्त्यर्थं हनुमच्चिन्तनं पठेत्।
अशोकवनिकायानसमये समुपस्थितम्।। १६

निवेदयेद्यतः प्रातर्माषचूर्णान्नमादृतः।

*பூத - வேதாள பீடையிருந்தால் (ஸுந்தர 3 ஸ) லங்கா தேவியின் விஜயத்தை மாலையில் படித்து விமார்க ஸர்வத்ர என்ற சுலோகத்தைப் படித்ததும் தீபாராதனை செய்யவும். படிக்கத் தொடங்கு முன் சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்யவும். மனப் பிரமை நீங்க (ஸுந்தர - 13ஸ), அசோகவனம் சென்றதும் ஹனுமானின் சிந்தனையை காலையில் படிக்கவும். உளுந்துப் பொடி கலந்த அன்னம் நிவேதனம் செய்யவும்.*

दारिद्र्यध्वंस कामस्तु लंकायां तु हनूमता।। १७

मैथिलीदर्शनं प्राप्तं पठे त्पापविमोचनम्।
दुःखध्वंसनकामस्तु रावणस्य वधोत्तरम्।। १८

सीताञ्जनेयसंवाद सर्गं तु प्रयतः पठेत्।
अतर्किताापदुद्धार कामश्चेदभयार्पणम्।। १९

विभीषणाय रामस्य पठेदर्थं विचिन्तयन्।
आदावन्ते च संस्फोट्य नारिकेलं निवेदयेत्।। २०

*ஏழ்மை நீங்க, அனுமான் லங்கையில் ஸீதையைக் கண்டதை (ஸுந்தர 15ஸ)க் காலையில் படிக்கவும். துன்பம் நீங்க ராவண வதத்திற்குப் பின் ஸீதையும் ஆஞ்சநேயரும் பேசிக் கொள்வதை (யுத்த 115-ஸ)க் காலையில் படிக்கவும். எதிர்பாராது நேர்கிற ஆபத்தில் ராமர் விபீஷணருக்கு அபயம் அளிப்பதைப் காலையில் படிக்கவும், தொடக்கத்திலும் முடிவிலும் தேங்காய் உடைத்து நிவேதனம் செய்யவும்.*

विश्लिष्टबन्धुसंयोग कामना चेद्धनूमतः ।
रामाङ्गुलीयार्पणं तु सीतायै सन्ध्ययोः पठेत् ।। २१

आदावन्तेऽपि वा नित्यं पनसाम्रफलार्पणम् ।
दुःस्वप्नदोषशान्त्यर्थं त्रिजटास्वप्नदर्शनम् ।। २२

पठेत्त्र्यहं प्रातरेव शर्करां विनिवेदयेत् ।
पारदारिकतादोषशान्तये हनुमत्कृतम् ।। २३

निर्विकार मना भूत्वा शुद्धान्ते रावणस्य च ।
जानक्यन्वेषणकथासर्गपञ्चकमादरात् ।। २४

सकृत्पठेत्प्रातरेव निवेद्यापूपविंशतिम् ।

*பிரிந்த உறவினருடன் கூட ஹனுமான் ராமனின் மோதிரத்தை ஸீதைக்கு அளித்ததை (ஸுந்தர 36 ஸ) பலாப்பழம் மாம்பழம் நிவேதனத்துடன் காலை மாலை இரு ஸந்தியா காலங்களிலும் படிக்கவும். நிவேதனம் படிக்கத் தொடங்கியதும் முடிவிலும். கெட்ட கனவு தோஷம் நீங்க திரிஜடை கனவு கண்டதை (ஸுந்தர 27 ஸ) மூன்று நாள் காலை வேளையில் சர்க்கரை நிவேதனத்துடன் செய்யவும். பிறர் மனைவி தீண்டிய தோஷம் நீங்க அதிகாலையில் ஹனுமான் ராவணனின் அந்தப் புரத்தில் ஸீதையைத் தேடியதை (ஸுந்தர 7 - 11ஸ) இருபது அப்பநிவேதனத்துடன் ஒரு தடவை செய்யவும்.*

बुद्ध्याऽबुद्ध्या रामविभोर्विहितागःप्रशान्तये ।। २५

काकानुग्रहवृत्तान्त सर्गं नत्वा पठेत्प्रभुम् ।
सर्वसौख्यास्पदं भावि जन्म कांक्षद्भिरादरात् ।। २६

अयोध्यायां रघूत्तंस राज्यपट्टाभिषेचनम् ।
पठनीयं मासमात्रं मुद्गान्नं विनिवेदयेत् ।। २७

पुत्रकामस्तु पुत्रीयामिष्टिं दशरथस्य ताम् ।
आगर्भधारणं स्त्रीणां पायसेन पठेच्छुचिः ।। २८

निवेदयेत्प्रतिदिनं घृतमिश्रं तु पायसम् ।
श्रावयेच्चापि पत्नीं स्वां कुल्यां विंशतिवासरान् ।। २९

सुख प्रसवकामस्तु गर्भिणीनां तु तच्छ्रुवे ।
अवतार कथासर्गं रामस्य प्रयतः पठेत् ।। ३०

यथालब्धं तु नैवेद्यं कार्यं द्रव्येण चाल्पशः ।

*அறிந்தும் அறியாமலும் ராமனிடம் தவறாக நடந்து கொண்டதற்கு ராமனை வணங்கிக் காகாஸுரனுக்கு அருள் புரிந்ததை (ஸுந்தர - 38) அதிகாலையில் படிக்க வேண்டும். அடுத்த பிறவி இனிதாக அமைய ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தை (யுத்த 131) ஒரு மாதம் காலையில் பயறு கலந்த பொங்கல் நிவேதனத்துடன் படிக்க வேண்டும். பிள்ளைப் பேறு வேண்டுபவர் தசரதன் புத்திர காமேஷ்டி புரிந்து அவரது மனைவிகள் கருத்தரிக்கும் வரை (பால 15- 16ஸ) 20 நாட்கள் நெய் கலந்த பாயஸ நிவேதனத்துடன் படிக்க வேண்டும். மனைவியும் பக்தியுடன் இதனைக் கேட்கவேண்டும். சுகப் பிரஸவமாக ஸ்ரீ ராம ஜனன ஸர்கத்தைப் படித்துக் கர்ப்பிணியைக் கேட்கச் செய்ய வேண்டும். சக்திக் கேற்பக் கிடைத்ததை நிவேதனம் செய்யலாம்.*

कारागृहप्रवेशः स्यादिति यस्यास्ति वै भयम् ।। ३१

विभीषणेन सीताया नयनं रामसन्निधौ ।
स पठेन्मधुरैर्द्रव्यैः तोषयित्वा रघुत्तमम् ।। ३२

सर्वार्थसिद्धिदं देवि रामायणमनुत्तमम् ।
पठेत्सर्वप्रयत्नेन कामिभिः पठितं पुरा ।। ३३

विश्वामित्रस्य ब्राह्मण्यकथया ब्रह्मवर्चसम्।
गंगावतार कथयाऽप्यक्षय्यं पितृतर्पणम्।। ३४

अयोध्याकाण्ड प्रारंभे श्रीरामगुणसन्ततेः।
पठनाद्गुणवान्पुत्रो निर्गुणोऽपि भवेद्ध्रुवम्।। ३५

अत्रानिर्दिष्टकामास्तु ये स्युर्नानाविधेप्सिताः।
तैः पाठ्यं भार्गवजय कथा सर्गद्वयं यतैः।। ३६

पायसापूपनैवेद्यं पठनान्ते तु कारयेत्।
अनिर्दिष्टं तु येषां तद्द्रव्याणां स्याद्विशेषतः।। ३७

नैवेद्यं तत्र कल्प्यं स्यात्कदलीफलपञ्चकम्।
इमं शृण्वन्ति ये विप्रा अध्यायं ये पठन्ति वा।
सर्वान्कामानवाप्यैते श्रीरामस्य पदं गताः।। ३८

*சிறை வாஸம் கிடைக்குமோ என்று பயந்தவர்கள் விபீஷணன் ஸீதையை ராமனருகே அழைத்துச் செல்கிற ஸர்கத்தை (யுத்த 117ஸ) காலையில் இனிய பொருளின் நிவேதனத்துடன் படிக்கவும். விருப்பம் அனைத்தும் நிறைவுற, விரும்பாதவை அகல, ராமாயணம் முழுவதையும் பக்தியுடன் முடிந்த வரை காலையில் ஏதேனும் ஒரு முறையில் படிக்க வேண்டும். அந்தணத் தன்மை மேம்பட விசுவாமித்ரர் அந்தணர் நிலையை அடைந்ததை (பால 50 - 65ஸ) காலையில் படிக்கவும். பித்ருக்கள் திருப்தி அடைய கங்காவதரண ஸர்கத்தை (பால 34-44ஸ) காலையில் படித்து வர வேண்டும். புதல்வர் நற்குணத்துடன் மேன்மை பெற அயோத்யா காண்டத்தின் 1- 2 ஸர்கங்களில் கூறப்பட்ட ராம குணங்களைப் படிக்கலாம். இங்கு குறிப்பிடப் பெறாத வேறு நன்மைபெற விரும்புபவர் பரசுராம கர்வபங்கத்தை (பால 75-76ஸ) காலையில் பாராயண முடிவில் பாயஸம் அப்பம் நிவேதனத்துடன் செய்யவேண்டும். நைவேத்யம் குறிப்பிடப் பெறாத இடத்தில் ஐந்து வாழைப்பழங்களை நிவேதனம் செய்யலாம்.*

नवग्रह दशाभुक्तिदोषपरिहार पारायणक्रमः

(उमासंहितातः)

நவக்கிரக தசா-புக்தி காலங்களில் நேர்கிற
கேடுகளுக்கேற்ற ராமாயண பாராயண முறை
(உமா ஸம்ஹிதையிலிருந்து)

ईश्वर उवाच-

अथ वक्ष्यामि दोषाणां दशाभुक्तिषु पार्वति।
नवग्रहैः कारितानां परिहारं यथोदितम्॥ १

ब्रह्मा तदात्मजाश्चापि शक्राद्याश्च सुरोत्तमाः।
रामायणस्य घट्टानां केषांचित्पाठमात्रतः॥ २

पीडां नवग्रहकृतां उत्तेरुः कृपया प्रभोः।

*நவக்ரஹங்களில் தசை - புக்திகளில் நேரக் கூடிய கெடுதல்களுக்கு பரிஹாரம் கூறப்பட்டுள்ளது. பிரும்மா முதலானோர் சில பகுதிகளைப் பாராயணம் செய்து கேடுகள் நீங்கப் பெற்றனர்.*

सूर्यदशादोषपरिहारः

दुष्टा दशा चेत्सूर्यस्य नियमात्पूतमानसः॥ ३

हरेण गंगातरण सर्गं नित्यं पठेद्द्विजः।
सूर्यस्यैव दशायां तु सूर्यभुक्तिस्तु दोषदा॥ ४

हरेण कालकूटस्य भक्षणं यत्र सर्गके।
तं पठेत्प्रातरैकाग्र्यात् ध्यात्वा रुद्रं परात्परम्॥ ५

चान्द्रभुक्तिर्यदा क्रूरा सूर्यस्यैव दशान्तरे।
पठेत् शूर्पणखाभङ्गसर्गं त्रिषवणं यतः॥ ६

कुजभुक्तिर्दोषदा चेत् सूर्यस्यैव दशान्तरे ।
आदावयोध्याकाण्डस्य पठेत्सर्गद्वयं व्रती ॥ ७

बुधस्य यदि चेद्भुक्तिः क्रूरा सूर्यदशान्तरे ।
अधिकं मेनिरे विष्णुमिति सर्गं सदा पठेत् ॥ ८

गुरोर्भुक्तिर्दोषदा चेत् आदित्यस्य दशान्तरे ।
स रामो रथमास्थायेत्यादि सर्गं पठेन्मुदा ॥ ९

शुक्रभुक्तिक्रौर्यदोष शान्त्यर्थं भास्करान्तरे ।
सीतोक्तस्वविवाहाख्य सर्गं सर्वात्मना पठेत् ॥ १०

शनिभुक्तिर्यदि क्रूरा दशायां भास्करस्य च ।
इन्द्रजिद्वध सर्गं तु पठेच्च शृणुयादपि ॥ ११

राहोश्चेद्दोषदा भुक्तिर्दिनरश्मेर्दिनान्तरे ।
देवेभ्यः पार्वतीशापसर्गं तु प्रयतः पठेत् ॥ १२

केतु भुक्तिस्तु दुष्टा चेद्दशायां तु रवेस्तदा ।
जटायुषे मोक्षदान सर्गं भक्ति युतः पठेत् ॥ १३

ஸூரியதசாதோஷ பரிஹாரம்

*ஸூர்ய தசை :- இது துன்பம் தருவதாயிருந்தால் சிவன் கங்கையைப் பூமிக்குப் கொணர்ந்த ஸர்கம் (பால. 43) படிக்க வேண்டும். இவ்வாறு அதில் புக்திகளும் துன்பம் தரலாம்.*

*சூரிய புக்தி - சிவன் காலகூட விஷம் பருகியது (பால. 45 காலையில்*

*சந்திர புக்தி - சூர்பணகை மூக்கிழத்தல் (அரண்ய. 18) மூன்று வேளைகளில்.*

*குஜ புக்தி - அயோத்யா 1 - 2 ஸர்கம்.*

*புத புக்தி - பால - 75 ஸர்கம் எப்போதும் காலையில்*

குரு புக்தி - அயோத்யா 17 ஸர்கம்.

சுக்ர புக்தி - ஸீதை தன் விவாஹத்தை அனஸூயையிடம் சொல்லுதல். அயோத்யா 118.

சனி புக்தி - இந்திரஜித்து வதம். யுத்த 91 ஸர்கம்.

ராகு புக்தி - தேவர்களுக்குப் பார்வதி சாபம். பால 36 ஸர்கம்.

கேது புக்தி - ஜடாயு மோக்ஷம். ஆரண்ய 68 ஸர்கம்.

चन्द्रदशादोषपरिहारः

सोमस्य चेद्दशा दुष्टा तस्याः शान्त्यर्थमादरात्।
ततः स मध्यं गतमित्यमुं सर्गं पठेन्निशि ॥ १४

शुक्लपक्षे प्रदोषे च ततश्चन्द्रं प्रपूजयेत्।
अशुभा सोमभुक्तिश्चेत् सोमस्यैव दशान्तरे ॥ १५

नृगस्य चरितं कृत्स्नं पठेदुत्तरकाण्डगम्।
सूर्यभुक्तिर्यदा क्रूरा प्राप्य सोमस्य वै दशाम् ॥ १६

हनुमद्रामसंबन्ध सर्गं भक्त्या च वाचयेत्।
भौमस्य भुक्त्या दोषश्चेन्निशाकरदशान्तरे ॥ १७

सीताराघवसंवादसर्गान्मध्यन्दिने पठेत्।
शुक्रस्यान्तर्दशा दुष्टा यदि सोमदशान्तरे ॥ १८

उत्थानसर्गं वह्लेस्तु सीतायाः प्रयतः पठेत्।
चन्द्रस्यैव दशायां तु गुरु भुक्तिर्यदाऽशुभा ॥ १९

नारदोक्तां रामकथां पूतात्मा प्रयतः पठेत्।
शनैश्चरस्य दुष्टा चेद्भुक्तिश्चन्द्रदशान्तरे ॥ २०

सायं प्रातः पठेत्सर्गं नित्यं खरवधात्मकम् ।
राहुभुक्तिर्दोषदा चेत् चन्द्रस्य तु दशान्तरे ।। २१

अहल्याशापनिर्मोक्षसर्गं भक्त्याऽत्र संपठेत् ।
महादशायां सोमस्य केतोश्चेद्भुक्तिरक्षमा ।। २२

रक्षोवधप्रतिज्ञाख्यं पठेत्सर्गं प्रयत्नतः ।

**சந்திரதசாதோஷ பரிஹாரம்**

சந்திர தசை இந்த தசையே கஷ்டம் தந்தால் ஸுந்தர காண்டம் 5வது ஸர்கத்தை சுக்ல பக்ஷத்து பிரதோஷ இரவு படித்து சந்திரனுக்கு பூஜை செய்யலாம். புக்திகளில் கஷ்டமானுல்—

*சந்திர புக்தி - ந்ருகனின் சரிதம் - உத்தர 53 - 54.*

*ஸுர்ய புக்தி - ஹனுமான் - ராமஸமாகமம். கிஷ்கிந்தா 3.*

*குஜ புக்தி - விசுவாமித்ரர் ராம லக்ஷ்மணர்களை அழைத்துச் செல்லுதல். பால 19 - 22.*

*புத புக்தி - ஸீதா ராம ஸம்வாதம். அயோத்யா 26 - 30 நடுப்பகலில்.*

*சுக்ர புக்தி - ஸீதை நெருப்பிலிருந்து வெளியாதல், யுத்த 121.*

*குரு புக்தி - ஸம்க்ஷேப ராமாயணம், பால - 1.*

*சனி புக்தி - கரவதம், அரண்ய - 30 - காலை, மாலை.*

*ராகு புக்தி - அஹல்யா சாப நீக்கம் பால - 49.*

*கேது புக்தி - ராக்ஷஸவதப் பிரதிஜ்ஞை அரண்ய - 6.*

कुजदशादोषपरिहारः

कुजस्य चेद्दशा दुष्टा कुमारोत्पत्तिसर्गकौ ।। २३

पठेद्वा शृणुयाद्वाऽपि सुब्रह्मण्यार्पिताशयः ।
पठनान्ते च वल्लीशं पूजयेदालयेऽपि वा ।। २४

महादशायां भौमस्य तस्यैवान्तर्दशाऽशुभा ।
अगस्त्य पूजां रामाय पठेदुत्तर काण्डगाम् ।। २५

भौमस्यैव दशाभागे सूर्यभुक्तिः शुभा न चेत् ।
कन्दर्पनाशनाख्यं तु पठेत्सर्गमनुत्तमम् ।। २६

महादशायां भौमस्य सोमभुक्तिर्न चेच्छुभा ।
वानरोत्पत्ति सर्गं तु भक्तियुक्तस्तदा पठेत् ।। २७

बुधभुक्ति र्दोषदा चेत् कुजस्यैव दशान्तरे ।
पायसस्य प्रदानाख्यं पठेत्सर्गं प्रयत्नतः ।। २८

गुरोश्चेद्दोषदा भुक्तिर्भौमस्य तु दशान्तरे ।
उपदेशं हनुमतो रावणाय तथा पठेत् ।। २९

शुक्रभुक्तिर्दोषदा चेत् लोहिताङ्गदशान्तरे ।
सीतायाः प्रार्थनं वह्निमुद्दिश्य हनुमत्कृते ।। ३०

यत्र तं सर्गमाध्यायन् आञ्जनेयं पठेत्क्रमात् ।
सौरेरन्तर्दशा क्रूरा यदि भौमदशान्तरे ।। ३१

कबन्धबाहुलवन सर्गं ध्यायन् शनिं पठेत् ।
अङ्गारकदशायां तु राहोरन्तर्दशाऽशुभा ।। ३२

पठेत्तु प्रथमे युद्धे रावणस्य पराभवम् ।
केतुभुक्तिर्दोषदा चेदङ्गारकदशान्तरे ।। ३३

सीताकृतां राक्षसीनां रक्षां हनुमतः पठेत् ।

